# திருவள்ளுவர்

## வாழ்க்கை வரலாறு

ஆசிரியர் :

**ப. ஏ. பெரியண்ணா**




விற்பனை உரிமை :



**வானதி பதிப்பகம்**
தி.நகர் • சென்னை-17

முதற் பதிப்பு—ஜனவரி, 1968
ஆசிரியர்க்கே உரிமை.

## ஆசிரியரின் பிற நூல்கள்

**அச்சில் :**

திருமதி சூடாலை
(நாயகனுக்கு ஞானம் ஊட்டிய நங்கை)
கொம்பு

**அச்சுக்காக காத்திருப்பவை :**

மாதவி மாண்பு
(சிலப்பதிகாரத்தின் செம்பொருள் விளக்கம்)
நாலடியார் போதிக்கும் நற்பண்புகள்
கீதா ரகசியம்
(பகவத் கீதையின் மறைபொருள் விளக்கம்)
மூவர்க்காக ஒருவர் மணப்பதா?
நாளை நடப்பதை யார் அறிவார்?
இலட்சிய மனைவி (இரண்டு பாகம்)
அமிர்த ஊற்று
சீமாட்டி
எது உண்மை?

விலை ரூபாய் ஐந்து

வெளியிட்டோர் :

“அமைதி நிலையம்”

போடிநாய்க்கன்பட்டி :: சேலம்—5

கமர்ஷியல் பிரிண்டிங் அண்டு பப்ளிஷிங் அவுஸ், சென்னை-1.

# முன்னுரை

உலகின் நாகரிகம் ஒரே மாதிரியாக இல்லை. காலத்துக்கும் இடத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு நாகரிகம் மாறுபடுகிறது. இவ்விதம் மாறுபடும் நாகரிகங்களுக்குள் மாருமல் எல்லாரும் போற்றும் வகையில் அமைந்திருப்பவைதாம் சிறப்பாகக் கருதப்படும் நீதிகளாகும். அதனல் நீதி என்பது தனி மனிதனுக்கோ தனி நாட்டுக்கோ அமைந்ததல்ல; பொதுவானது என்பதேயாகும். இவ்வண்ணம் பொதுவானவைகளைப் போதிப்பவைகளே நீதி நூல்களாகும்.

இத்தகைய நீதி நூல்கள் உலகில் அதிகமாய் இருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஒரு சிலவே உள்ளன. பல கால வெள்ளத்தால் கடல் கொள்ளப்பட்டன என்று சொல்லப்படுகின்றன. இவ்விதம் எஞ்சியிருக்கும் ஒரு சில நூல்களில் ஒன்றுதான் நம் செந்தமிழ் நாடு உலகுக்கு உவந்தளிக்கும் பெரும் நிதியாகும் என்பதை எண்ணிப் பெருமை அடையும் பாக்கியம் நமக்கு இருக்கிறது.

பண ஆதிக்கம் அல்லது பதவி ஆதிக்கம் கொண்டு தான் உலகில் நூல்கள் பரவி வருவதை நாம் பார்க்கிருேம். இவை இரண்டுமே இன்றி கற்ருேரால் போற்றப்பட்டு உலகம் எங்கும் உலாவி வருகிறது ஒரு தமிழ் நூல் என்று நாம் சொல்வோமாயின், உடனே ஒரு மாணவன் அது திருக்குறள் தான் என்று உறுதியாகக் கூறிவிடுவான்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலை இயற்றியவர் யார்?

எளிமையிலே பிறந்து; எளிமையிலே வளர்ந்து. எளிமையிலே வாழ்ந்து எல்லார்க்கும் பொதுவான ஒப்பற்ற நீதி நூலை உலகுக்களித்த உத்தமர் வாழ்வில், எத்தனையோ உண்மைகள் இருந்திருக்க வேண்டும். அத்தனையும் குறித்து வைக்க அந்நாளில் ஆளில்லாமல் போனது நம்முடைய துர்ப்பாக்கியமாகும். அப்படியில்லாவிட்டால் அவர் மனதில்



இத்தகைய சிறந்த நூல் தோன்றி யிருக்காது; தோன்றவும் முடியாது.

உள்ளத்திலிருப்பவைதாம் உதட்டில் வரும்; உருப்பெற்று நடைபெறும்.

இத்தகைய பெருமை வாய்ந்த நூலை இயற்றிய பெரியார்தான் திருவள்ளுவர் என்பதை அறியாதவர் இல்லை. இவருடைய வாழ்க்கை வரலாறு இந்நாள் வரையில் வெளிவந்திருப்பதாய் தெரியவில்லை. ஏதோ சிலர் சிலவற்றைப் பற்றி மட்டும் வாயளவில் சொல்லிக் கொள்கிறார்கள். அவ்வளவுதான். அதுவும் ஒரு விதமாக இல்லை. பல விதமாய்ப் பேசப்படுவதை இளமையிலிருந்து கேட்டு வந்திருக்கிறேன்.

திருக்குறளில் நேசங் கொண்ட என் மனம், அதன் ஆசிரியரைப் பற்றி பல விதமாய்ப் பேசப்படுவதை விரும்பவில்லை; அதற்கு ஒரு முடிவு காண விழைந்தது. ஆகவே அவ்விழைவே வித்தாகவும், மனமே மண்ணாகவும், அவனருளாகிய நீரும், அன்பர்கள் உறவாகிய உரமும் ஒன்று சேர்ந்தன. பிறகு சொல்லவும் வேண்டுமா?

காதளவில் கேள்விப்பட்டவைகளை திருவள்ளுவரின்

பெருமைக்கு இழுக்கு வராவண்ணம் சேகரித்துக் கொண்டு, மேலும் வேண்டியவைகளுக்குத் திருக்குறளையே ஆதாரமாய்க் கொண்டு திருவருளின் ஏவல்படி எழுதி இந்நூலைச் செந்தமிழ்ச் செல்வர்களின் முன் வைத்திருக்கிறேன்.

குற்றங் குறை காணின் ஆதாரமுடன் எடுத்துக் காட்டினால் அடுத்த பதிப்பில் திருத்தி அமைக்க ஏற்பாடு செய்கிறேன். முழுதும் குணம் இருப்பின் அது அவன் செயலால் ஆனது என்பதையும் சொல்லி விடுகிறேன்.

" வாழ்க திருவள்ளுவர் ; வளர்க திருக்குறள், "

" அமைதி நிலையம் "
போடிநாயக்கன்பட்டி.
சேலம்—5.

ப. எ. பெரியண்ணா.

# உள்ளுறை

---

# திருவள்ளுவர்

## 1. பாண்டியநாடு தோன்றியது

அன்பே ஆண்டவன் வடிவம். அழிவே; இயற்கையின் இன்னல்களே அவன் மறக் கருணை. அறக் கடவுளுக்கும் மறக் கருணைக்கும் சம்பந்தம் இல்லை என ஆர்வமுடன் வாதிடுவாரும் உண்டு. அவர்களே பொறுமையுடன் ஆராய்ந்தபின் அமைதியை நாடுகின்றனர். ஏன்? காரணம் என்ன? எனவே ஆர்வத்திற்கும் அமைதிக்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்ல முடியுமா? ஆர்வமே அமைதியின் வித்து. அமைதியே ஆர்வத்தின் ஆணிவேர். பொருளுக்கு முன்பின் பக்கங்கள் போன்று.

கபாடபுரம் மன்னன் பூபதி, மந்திரி பிரதானிகள் புலவர்கள் குலகுரு முதலியோர் சூழ கொலுவிலிருக்கிறான். தன் மூதாதையர் நாடாகிய கடல்கொண்ட குமரிக் கண்டத்

துக்கு நிகராக தன் நாட்டு எல்லையைப் பெருக்க வேண்டும்; நகரங்களையும் பட்டணங்களையும் பெருவாரியாக அமைக்க வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கிறான். அனை வரும் அமைதியுடன் கேட்டுக் கொண்டிருக்கின்றனர்.

திடீரென இடி முழக்கம் கேட்கிறது. திக்கெட்டும் தடுமாற பூகம்பம் ஏற்பட்டுவிட்டது. அவையிலிருந்தவர் கள் தம் செவிகளைக் கைகளால் அடைத்தவண்ணம் கண்களை மூடியபடி கவிழ்ந்துகொண்டனர். சிங்காதனத்திலிருந்த மன்னன் சிங்கம் போல் பாய்ந்தான்; வெளியே வந்தான். கண்ணை மூடியும் மூடாமலும் இருந்த ஒருசிலர் மன்னனைத் தொடர்ந்து வெளியே வந்துவிட்டனர்.

6

அடுத்த விநாடியே அத்தாணி மண்டபம் ஆட்டங் கொடுத்தது; பிளவு கண்டது: மட மடவென மண்ணோடு மண்ணாய் சாய்ந்தது. அந்தோ! அச்சத்தால் கண் மூடிய வர்கள் ஆற்றங்கரையின் மரம்போல் அழிந்தனர்; மறைந் தனர்.

கடுங் காற்று வீசுகிறது. கடல் கொந்தளிக்கிறது. கரை கடந்தது; ஊழித் தாண்டவம் என்னும்படி கடல் நீர் பரவி ஓடி வருகிறது.

விவேக முள்ள மக்கள் தம் வீடு வாசல் மாட மாளிகை களை எல்லாம் துச்சம் என விட்டுத் துறந்து வெளியேறி விட்டனர். மந்த மதியினர்களோ பந்தம் விலகாதவர் களாய் பண்டங்களைப் போற்றிய வண்ணம் கூற்றுவனுக்கு இரையாயினர்.

குளிர்ந்த காட்சிதான். ஆயினும் கோர காட்சியே. கனத்த கட்டிடங்கள் கடலடியாய் விடவே காசிக்கும் உதவாத கூரைகளோ கடல் முடியாய் விட்டோம் என்று களி நடனம் செய்வதுபோல் மிதக்க ஆரம்பித்து விட்டன.

இயற்கையின் இன்னல்களை ஒருவாறு உணர்ந்தான் மன்னன். இனி அரைக்கணமும் அங்கிருக்க அவன் விரும்ப வில்லை. உடனே மனைவி மக்களோடு எஞ்சியிருந்த மக்கள் பின் தொடர பறவைகள் வழிகாட்ட வடக்கு நோக்கி வருகிறான்.

ஆறறிவு உடையோம்; ஆருயிர்களிலே மேன்மை மிக்கோம் என்று பெருமை பாராட்டிக் கொள்வது அன்று முதல் இன்று வரை மக்களிடையே நின்று வரும் வழக்கமாய் விட்டது. ஆபத்து வரும்பொழுது அவ்வறிவை அவன் பயன் படுத்துவதில்லை. ஏன்? அப்பொழுது அது பொய் என உணர்கிறான். ஆனால் ஆறுதல்பெற்ற அக்கணமே ஆணவத் தால் அதைப் புறக்கணிக்கிறான். இதுதான் மற்ற சீவர் களுக்கும் மனிதனுக்கும் இருக்கும் மாபெரும் பேதமாகும்.

## 7

அந்தரத்தில் வாழும் பறவை எந்த நேரத்திலும் சுதந் திரமாகவே இருக்கிறது, எதையும் நம்பி வாழ்வதில்லை. ஆபத்து வரும்பொழுது பிறர் உதவி நாடாது பிழைக்கும் இடம் நாடி அமைதியான இடம் தேடிப் போகிறது. ஆனால் பேரறிவு படைத்தோம் என்று பெருமை கொள்ளும் மனிதனோ—

காலன் வேலை முடிந்த தென காற்றடங்கியது. கடல்

நீர் படை எடுப்பும் குறைந்தது. ஆனல் பீதியடைந்த மன்னனே மூன்றும் நாள் மாலே வரையில் தன் பயணத்தை நிறுத்தவே யில்லே.

மாலே வெய்யில் மங்கலகரமா யிருக்கிறது. பயணத் தால் களைத்த புரவலனும் மக்களும் எதிர்ப்பட்ட ஆல மரத்தின் அடியில் தங்கினர். மன்னனுக்குத் தாகம் அதி கரித்தது. தண்ணீருக்காக ஆள் அனுப்பினுன். குடியைக் கெடுத்தநீர் இப்பொழுது குடிப்பதற்கும் கிடைப்பதுஅருமை யாகி விட்டது. நீர் நாடி சென்றவர்கள் திரும்பி வரும் வரை யில் மன்னனல் காத்திருக்கமுடியவில்லே.எனவே தன் கையே தனக்குதவி என்னும் தத்துவத்தை எண்ணியவனுய் தானே தண்ணீர் தேடிச் சென்ருன்.

பெரு மணல் பரப்பு. அவைகளுக் கோர் அணிகலனுகை அமைந்தது போன்று இடையிடையே பசும் புற்களும் சிறு செடிகளும் இருந்தன. தங்கச்சிலே போன்ற மங்கை ஒருவள் கம்பு ஒன்றை கையில் பிடித்தபடி நிற்கிருள். ஆடுமாடுகள் அமைதியாய் வெண்கல மணி ஒலியுடன் வாலே அசைத்த வண்ணம் மேய்ந்துக் கொண்டிருந்தன.

பார் இழந்த வேந்தன் அப் பெண்ணே நாடினுன். அவள் உருவத்தை உற்று நோக்க அவன் விழிக்கு அவ்வளவு ஆற்றல் இல்லே. காரணம் என்ன? அப்பெண்ணின் மேனி அவ்வளவு பிரபையுடன் விளங்கியது. இந்நாள் வரையில் அவன் அத்தகைய பெண்ணேப் பார்த்ததே இல்லே. ஆதலின்



அவன் ஆண்மை அகன்றது. அறியா பிள்ளேயின் உள்ளமே உருவெடுத்தவனுய்

"குடிக்கத் தண்ணீர் எங்கே கிடைககும்?" என்று அப்

பெண்ணைக் கேட்டான்.

அப் பெண்ணும் அவன் கவலையை நீக்குவாம் என்னும் சாடையில் ''உழைத்தால் ஊதியம் உண்டு'' தரையைத் தடியால் தட்டிய படி வை: கை: வாயாரப் பருகு'' என்றாள். அவ்வளவு தான். அவளும் அம்மந்தைகளும் மறைந்தன.

மன்னன் மணலைத் தோண்டினான். வேண்டிய மட்டும் தண்ணீர் குடித்தான். களை நீங்கியது. அத்தெளிவான தண்ணீரை உற்று நோக்கினான். அந்நீரில் அப்பெண்ணின் படிவம் பிரதிபலித்தது. அடுத்த கணமே அது ஒளியுடைய மீனாக மாறியது. குனிந்து அதைக் கையில் எடுக்க முயன்றான். அது ''மீனாட்சி'' என்னும் சத்தமுடன் மறைந்தது.

இப்பொழுதுதான் உண்மையை உணர்ந்தான். தன் வழிபடு தெய்வமான மீனாட்சியே இவ்விதம் வந்து தன் வைபவத்தைக் காட்டுகின்றது என்றுஎண்ணினான்.

அதுமட்டுமல்ல: மீன் கொடியின் கீழேயே தன் ஆட்சியை அமைக்க வேண்டும் என்ற உறுதியையும் கொண் டான்.

அதன்படியே அவ்வைகை யாற்றின் கரையிலேயே தன் முடியாட்சியை ஏற்படுத்தினான்.

மனித இனமே பெருமயக்கத்துக் குரியது. பொறாமை யின் பிறப்பிடம்; பூசலின் இருப்பிடம். மற்ற எந்த சீவர் களிடையேயும் காணப்படாத இழிவான குணங்களை எல்லாம் இவர்களிடம் சிறப்பாக விளங்குவதை என்றும் காணலாம்.

ஆம், கேட்பாரற்றுகிடந்த எல்லையில் வேற்ருன் ஒருவன் வந்து வாழ்கிருன்; அரசாள்கிருன் என்று கேள்விப்பட்டதும் போதும் சேரனுக்கோ சோழனுக்கோ உறக்கம் வருமோ? இருவரும் படையைத் திரட்டினர். பயணமாயினர். மடை உடைந்ததென சேஞ வெள்ளம் ஆரவாரமுடன் இரு மன்னரையும் சூழ்ந்து சென்றது.

வைகை யாற்றிற்கு ஒரு காத தூரத்தில் வந்ததும் சோழன் தன் வேழத்தை விட்டு இறங்கிஞன். சேரனும் இறங்கிஞன். சேனைகளும் - அரசர் ஆணைப்படி அங்கேயே தங்கின. சோழன் அங்கு வந்து முதலில் இறங்கியதால் அந்த இடத்திற்கு ''சோழவந்தான்'' என்று பெயரிடப் பட்டது.

பிறகு இருவரும் புதிதாய் வந்திருக்கும் வைகை யாற்று அரசனுக்கு ஆள் அனுப்பினர்.

புரவலன் பூபதி வந்தான். தன் விருத்தாந்தங்களைச் சொன்ஞன்.

மௌனமாய் இரு மன்னரும் கேட்டனர். பிறகு வாட்டமுடன் சோழன் சொல்கிருன்:—

''உருமாறிய பூபதி உன்னை நாங்கள் இளமையில் அறிவோம். நாங்கள் இருவரும் கபாடபுரத்தில் தான் குருக்குலத்தில் கல்விகற்ரேம். எங்கள் தந்தை எங்களைக் காண வந்த போது உங்கள் அரண்மனையில் அவருக்கு வரவேற்பு நடந்தது. அதில் நாங்களும் கலந்து கொண்டோம். குமரிக் கண்டத்துக்கு வந்த கதியே கபாடபுரத்துக்கும் வந்திருப்பதை நினைக்கும் பொழுது தான் நிலை தடுமாறுகிறது. என் செய்யலாம்? நிலையாமை ஒன்றே நிலையாயிருக்கிறது. அலை போன்ற வாழ்வில் வரும் அனுபவங்களோ நாட்டின் கலையாக அமைகின்றன. நாடோ—

உம் நிலையைக் கண்டு வருந்துகிறேன். அதோடு உம் எதிர்கால வாழ்வை நிர்ணயிக்க விரும்புகிறேன். உமக்குச்



சம்மதம் இருக்குமாயின் சொல்லுகிறேன்" என்ருன் சோழன்.

"என் எதிர்கால வாழ்வில் எனக்கு உற்ற துணைவராக நீர் இருவரும் இருப்பீர் என்று நான் பூரணமாக நம்பு கிறேன். ஆதலின் தடையின்றி தாமதம் செய்யாமல் தாங் கள் சொல்லலாம்" என்ருன் பூபதி.

"அப்படியாயின் நல்லது; சொல்லுகிறேன் கேளும். "பழி அஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்" என்பது தொல்லை நாள் சொல். எனவே முதலில் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்வோம். பூமியில் பல்லாங் குழி தோண்டி பாண்டி விளையாடலாம், அதில் நீர் வெற்றி பெற்ருல் அவ் வெற்றியின் சின்னமாக "பாண்டியன்" என்னும் பட்டப் பெயருடன் தனி ஆட்சி செய்யலாம். தோல்வியுற்ருல் தளகர்த்தனுக எங்களில் யாரிடம் உமக்கு விருப்பமோ அவர்களிடம் அமர்ந்திருக்க வேண்டியது தான்" என்ருன் சோழன்.

பூபதி இசைந்தான். பாண்டி விளையாட்டு தோன்றியது. முகூர்த்த நேரத்தில் முடிவடைந்தது.

வெற்றி பெற்ருன் பூபதி.

"பாண்டியன்" என்னும் பட்டப் பெயருடன் "மீன்" கொடியின் கீழ் சேர சோழர்கள் சேர்ந்து மணி முடிசூட்ட பூபதி வைகை யாற்றுப் பிரதேசங்களுக்கு மன்னனுனன்.

# 2. பாண்டியன் வேண்டுகோள்

ஆளப்பிறந்தவன் அரசன்; அவனடி தொழுது வாழப் பிறந்தவர்கள் குடி என்று பூபதி எண்ணவில்லை. ஏற்றத் தாழ்வு இயற்கையின் நியதி. இதில் எல்லாரும் ஒன்றுபட்டு வாழ்வதே ஏற்பட்ட விதி. மதியுடையோர் இம்மர்மம் அறிந்து தர்மம் தவருமல் கர்மம் செய்யவேண்டும்; ஏற்பட்ட கடமையை முழுமனதுடன் செய்து முடிக்கவேண்டும் என்ற வெள்ளை உள்ளம் கொண்டவன் பூபதி.

கரவில்லா வேந்தனே இறைவன் எனத்தகுவான். அவனைக் குடிகள் தம் குலதெய்வமாகவே கொண்டாடுவர். அதனுல் கொண்ட காரியம் குறைவின்றி நிறைவேறும். எனவே நாடு செழிக்கிறது; நன்மை வளர்கிறது; நகரம் பெருகுகிறது; குடிவளம் ஓங்குகிறது; குவலயத்துக்கோர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

ஆம்; எல்லா வளங்களும் நிறைந்ததாய்விட்டது பாண்டியநாடு; என்ருலும் ஒரு குறை நிறைவு பெரு திருந்தது. பாருக்கோர் திலகமாய் - கல்விக்கோர் கடலாய்; கற்ருரைப் போற்றும் கலாநிதியாய் - அவர்கள் கவலை யற்று வாழ உற்ற இடமாய் தன்னடு அமையவேண்டும்; கலைவளம் இல்லாத குடிகளை ஆள்வது கண்ணில்லாத குருடியை அணைவதை ஒக்கும் என்று எண்ணினுன் பூபதி. எனவே அதற்கு வேண்டிய எல்லாவிதமான ஏற்பாடுகளும் செய்தான்.

தமிழ் சங்கம் தோன்றியது. புலவர்கள் பெருகினர். பள் ளிக்கூடம் தெருவுதோறும் உருவு கொண்டது. சங்கப்புலவர்

கள் சௌக்கியமாக வாழ்கின்றனர். பூபதி பூத உடல் நீத்தான்.

அவன் மகன் மதிபூகி பட்டத்துக்கு வந்தான். அவன்முடி சூடும் விழாவுக்கு சேர சோழர் இருவரும் வந்திருந்தனர்.

12

பாண்டியன் மக்கள் வேண்டிய வேண்டியாங்கெய்தி; மேலும் வேண்டாமை என்னும் விழுச்செல்வத்தோடு இனிமை ததும்ப வாழ்வதும்; வார்த்தையாடுவதும் கண்டு இரு மன்னரும் இன்பமடைந்தனர்; பெருமிதங்கொண்டனர். அதன் அறிகுறியாக பாண்டியன் தலைநகரான வைகை நகருக்கு இனிமையின் இருப்பிடம் என்ற பொருள்படும் வண்ணம் (மது-இனிமை; உறை—இருப்பிடம்) முதுறை என்று பெயரிட்டனர். அது காலக்கிரமத்தில் மதுரை என்று மருவியது.

காலச்சக்கிரம் சுழல்கிறது. அதனல் கணக்கற்ற சம்பவங்கள் நடக்கின்றன. அதைக் கணக்கிடுவது என்பது காலனலும் முடியாத காரியமாகும். பிறப்பிறப்பால் ஏற்படும் பேரனுபவங்களை உணரவல்லார் யார்?

ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆயின. சேர சோழ பாண்டியநாடுகள் சோரபயமின்றி புண்ணியவசத்தால் அந்நியர் படை எடுப்புக்கிரையாகாது, நன்னிலையில் தன்னிகரற்று நடந்து வந்தன.

பொங்கும் தமிழ் சங்கப் புகழ் எங்கும் எட்டியது. அதனல் கற்றோர்கள் நிறைந்த நகரமாய் மதுரை அமைந்தது என்ருலும் அறம் பொருள் இன்பங்களின் திறனறிந்த சான்றோரைக் காண்பது அறிதாகவே இருந்தது. அதனல் புலவர்களிடையே பூசல் ஏற்பட்டது. பேதம் பெருகியது;

வாதம் வளர்ந்தது; இலக்கிய இலக்கண வகைகள் என்றும் மனிதனின் இலட்சிய வரையாகாது; எனினும் அவைகளை அலட்சியம் செய்யலாகாது.

தர்மமே தலைகாக்கும்; மனப்பிணிக்கு ஏற்ற மருந்தாகும். அதை அறிந்து அனுபவத்தில் எல்லார்க்கும் உணர்த்தவல்லாரே இப்பொழுது தேவை. இத்தகைய சான்றோரை எப்படிப் பெறுவது? எங்கு சென்று தேடுவது என்ற ஏக்கத்துக்கிரையானான் மதுரையின் எழுபத்திரண்டாவது மன்னன்.

13

ஏக்கமே ஊக்கத்துக்கு உற்ற துணை. அதனால் தூக்கங் கெடும்; துக்கம் பெருகும் என்றாலும் தோதாக எண்ணம் எழும்; யோசனை ஓடும். எண்ணியது நண்ணும் வரையில் அல்லவா?

ஆம்; பல நாள் ஏக்கம் ஒரு நாள் பலனளித்தே தீரும் என்பதற்கிணங்க மன்னனுக்கோர் எண்ணம் எழுந்தது. தமிழ் தந்தையான அகஸ்தியரால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை அவரோ பொதிய மலையில் வதிவதாக அவன் கேள்விப்பட்டிருக்கிறான். எனவே அவரிடம் போய் தன் குறையை நிறைவேற்றி வைக்கும் வண்ணம் வேண்டிக் கொள்ளவதே எல்லாவிதத்திலும் நல்லது என்ற முடிவுக்கு வந்தான். அவ்வண்ணமே மறுவாரம் பயணமானான்.

பொதிய மலைச்சாரலையடைந்தான். பாபநாசத்தில் குளித்தான். பயபக்தியுடன் அகஸ்தியர் பர்ணசாலையை நோக்கி நடந்தான்.

பர்ணசாலையில் ஆழ்ந்த நிஷ்டையில் அகஸ்தியர் இருக்கிறார். மன்னன் பர்ணசாலையையே வலம் சுற்றி வந்தான்; முனிவர் முன் கூப்பிய காரங்களுடன் காத்து நிற்கிறான்.

நாழிகை இரண்டு நழுவியது; முனிவர் விழி தோன்றியது; மந்தமாருதம் வீசியது. மாணக்கன் வந்து அவருடைய செந்தாமரை மலர் போன்ற திருவடியை மலர் கொண்டு அர்ச்சனை செய்தான். காய் கனி கிழங்கு முதலானவைகளை இலையில் வைத்து முனிவர் முன் விழுந்து வணங்கினான். எழுந்தான். கைகட்டியவண்ணம் மிகவும் பணிவுடன் நின்றான்.

முனிவர் தன் முன் நிற்கும் மன்னனைக் கூர்ந்து நோக்கினார். எல்லாம் உணர்ந்தவராயிருந்தும் உலக வழக்கத்துக்கு ஏற்ப ஒன்றும் அறிதாதவர் போல மன்னனை விசாரித்தார்.

## 14

மன்னன் தன் எண்ணத்தைச் சொன்னான். பிறகு தன் வரலாற்றையும் கூறினான்.

முனிவர் தன் மாணவனை உற்று நோக்கினார். மாணவனோ ஊனுடல் கொண்ட பதுமை போலிருந்தான்.

மேலும் மன்னன் சொல்கிறான்:—

"ஆரியத்திலோ சீரிய நான்கு மறைகள் இருக்கின்றன. ஆதியில் தோன்றிய தமிழிலோ ஓர் மறையும் இல்லை. ஏன்? இருந்ததெல்லாம் குமரிக்கண்டத்தோடு; கபாடபுரத்தோடு

கடல் கொண்டுவிட்டது. இன்று வரையில் ஒன்றும் தோன்ற வில்லை. எனவே அக்குறையை நிறைவாக்கும் வண்ணம் தமிழிலேயே ஓர் ஒப்பற்ற மறையை உண்டாக்கவேண்டும். அதைத் தரணியோர் போற்றவேண்டும். இதுவே தமிழ் மன்னனான பாண்டியன் வேண்டுகோள்" என்றதும் மன்னன் மண்ணில் விழுந்து வணங்கி எழுந்து நின்றான்.

## 3. அகத்தியர் தன் மாணவனை ஏவல்

அகத்தியர் தன்னரும் சீடனை நோக்கிச் சொல்கிறார் :-

''பாண்டியன் வேண்டுகோள் பரோபகாரமானது. பாருக்கே ஓர் எடுத்துக்காட்டாக விளங்கக் கூடியது. அவ் வேண்டுகோளை நிறைவேற்றி வைக்கவேண்டியது நம் கடமை யாகும். அதற்குரிய பாத்திரம் நீயே ஆகும். ஆதலின்:-

தமிழை வளர்த்தது என்வேலை
தமிழ் மறையை வளர்ப்பது உன்வேலை—நூல்
இழையை முறுக்கி முன்பின்னாய்—மக்கள்
சேலை நெய்வதே உன்தொழிலாம்.

இல்லறம் துறவறம் இரண்டினு மிருந்து
நல்லறம் எல்லாம் நன்மனதிற்கு என்றும்
பொல்லற மாகும் புனிதம் கெடினென
சொல்லிலும் செயலிலும் நின்று வருவாய்—(தமிழை)

என்றார் அகஸ்தியர்.

''திருவருள்படியே" என்றவாறு கைகூப்பினான் சீடன்.

அகஸ்தியர் தலையை அசைத்தார். தாடியைத் தடவிய படியே ''ஆம்; 'திருவள்ளுவர்' என்னும் பெயருடன் போய்

வருவாய்" என்றார்.

திருவள்ளுவர் குருவை வலம் சுற்றி வந்தார். அவர் முன் கைகுவித்த வண்ணம், பாடுகிறார் :-

"அன்னையும் பிதாவு மாகி: ஆருயிர் அனைத்து மாகி
பின்னையும் உலகின் வேறாய் பிறங்குமவ் வீச னாகி
கண்ணையுங் கடந்து எங்கும் காண்பவர் உளத்து நிற்கும்
என்னையும் தூண்டும் இந்த இறையடி வணங்கிச்
செல்வேன்."

தண்டனிட்டார்; தனியே புறப்பட்டார்.

16

மலைத் தொடர்களைக் கடந்தார். குற்றாலம் வந்தார். நதியில் நீராடினார். குற்றால லிங்கேசர் கோயிலுக்கு வந்தார். கைகூப்பியபடி திருவுருவை நோக்கிய வண்ணம்:-

1. குற்றாலத் தீசா குறைஒன்றும் வராமல்
நற்றாமரைப் பதமே நான்நாட - உற்றேன்
குருவின் ஏவல் குறைவின்றி நிறைவேற
அருளொன்றே வேண்டும் அடிமைக்கு.

2. சோற்றுந் துருத்தியோ சும்மா யிருக்காது
நாற்றச் சரீரமோ நோயில் நலியும்
காற்றை அடைத்து கும்பகம் செய்யும்
மாற்றம் அறியேன் மண்ணாவ துண்மை.

3. மண்ணாவதுங் கண்டு மாய லீலையில்
புண்ணாகி வீழ்கின்றார் புல்லியர் - என்னே!
அறியாமை அகன்று ஆறறிவில் நின்று
சரியா நடக்க சக்தியைக் கொடு.

பின் முருகன் கோயிலை அடைந்தார். திருவுருவின் முன்னே கைகூப்பிய வண்ணம்:-

''அப்பா! முப்பாலுங் கடந்த முருகா! முப்பாலை எழுத எனக்குத் தப்பாது துணையிருக்க வேண்டும். அதோடு மட்டுமல்ல:-

ஆருத புண்ணில் அழுந்திக் கிடவாமல்
ஆறுறு கூறுகி நின்றுலும் - வேறுகி
விளங்கும் விமலப் பொருளென நானென்றும்
துலங்க வழியருள் முருகா.

முருகன் ஆலயத்தையே வலம் வந்து வணங்கினர். அருகே யுள்ள ஆலமரத்தடியிலிருந்த பாறை மேல் போய் அமர்ந்தார். சின் முத்திரை விளங்க சித்தத்தை சிவன்பால் நிறுத்தித் தன் வடிவாக விளங்கினர்.

# 4. திருவள்ளுவர் ஏலேல சிங்கன் சந்திப்பு

பெரும் புழுதி தொடர்ந்து வருகிறது. அதன் பின் பாரத்துடன் நூற்றுக் கணக்கான பொதி மாடுகளும் ஆட்களும் வருகின்றனர். குற்றால நீர் வீழ்ச்சி அருகில் வந்து தங்கினர்; கூடாரம் அமைத்தனர் குதூகலமாக ஆகாரம் தயார் செய்துக் கொண்டிருக்கின்றனர்.

இவர்களின் தலைவன் ஏலேல சிங்கன். பல்லக்கில் வந்திறங்கினன் பாறை ஒரமாகவே போய் நீர்வீழ்ச்சியில் குளித்தான். ஆசாரத்துடன் கோயிலை நோக்கி நடந்தான். குற்றால லிங்கேசரையும் முருகனையும் முறையாக வணங்கினன். எதிரே வானளாவ உயர்ந்து விரிந்திருக்கும் ஆல

மரத்தைக் கண்டான். அதனடியில் ஆயாசம் தீர போய் அமர விரும்பினன். அவனை வரவேற்பது போல அப்பக்க மிருந்துகுளிர்ந்த காற்றும் வந்தது. மரம் நோக்கி நடந்தான்.

மரத்தை அடைந்தான். மனம் அமர இடங் கொடுக்க வில்லை. ஆலிலையில் பள்ளிக் கொண்ட ஆதி நாராயணனைப் போல அவன் கண்ணுக்கு அம்மரத்தடியில் அமர்ந்திருக்கும் திருவள்ளுவர் தெரிந்தார். ஆனல் திருவள்ளுவர் உள்ளமோ ஏகநாயகனை இறைவன் உருவில் ஒன்றி யிருக்கிறது

ஏகமான பரம் பொருளோடு இரண்டறக் கலந்த ஆன்மா அமர்ந்திருக்கும் உடல் பார்ப்பவர்களின் மனப் பான்மைக்கு ஏற்ப; அவர்கள் வழிபடும் இறைவன் திருவுருவ மாக தோன்றுவது தொன்று தொட்டு வரும் இயற்கை யாகும்; இந்திரஜால மல்ல.

எனவே திருவள்ளுவர் முன் வந்து ஏவலாளன் போல் கை கட்டியபடி பணிவுடன் நின்ருன் பிரபு ஏலேலசிங்கன்.



நாழிகைக் கழிவதும் அவனுக்கு நினைவில்லை. ஊழித் தாண்டவத்தின் பின் ஒய்ந்த ஆகாயம் போல ஓய்வின்றி வியாபாரத் தில் உழன்றுக் கொண்டிருந்த அவன் மனதுக்கு அமைதி ஏற்பட்டது. இத்தகைய அமைதியை இதற்கு முன் இமைக் கும் நேரங் கூட அவன் அனுபவித்தறியான். காந்தத்தைச் சேர்ந்த இரும்பென தியானத்தி லிருக்கும் திருவள்ளுவரின் திருவருளுக்குப் பாத்திரமாகி நின்ருன்.

கண் விழித்தார் திருவள்ளுவர். கரங் கூப்பி வணங்கினுன் ஏலேல சிங்கன். கூர்ந்து பார்த்தார் வள்ளுவர். தன் விருத்தாந்தத்தைச் சொல்லி முடித்தான்; உணவுக்கு தன்னுடன் எழுந்தருள வேண்டுமென வேண்டினுன் சிங்கன். அவன் விரும்பிய வண்ணமே சென்ருர்; உண்டார்; ஊருக்கும் பின் தொடர்ந்தார்.

பல நாள் பயணத்துக்குப் பின் ஏலேல சிங்கன் தன் பரிவாரங்களுடன் திருவள்ளுவரோடு தன் பட்டணம் வந்து சேர்ந்தான்.

ஏலேல சிங்கனுடன் இளம் பிரம்மசாரி கட்டழகுடன் ஒருவர் வந்திருப்பதைக் கேள்விப்பட்டது தான் தாமதம்; மக்கள் திருவள்ளுவரைப் பார்க்க திரள் திரளாக வந்து விட்டனர். திருவள்ளுவரும் வந்தவர்களுக்கு ஏற்றவாறு இன்மொழி கூறி அனுப்புகிருர். அதனுல் அப்பட்டணம் எங்கும் திருவள்ளுவர் பற்றியப் பேச்சு பரவிய வண்ணமா யிருக்கிறது.

## 5. திருவள்ளுவர் வாசுகி திருமணம்

பெண்ணே கட்டழகிதான்; ஆனுல் பேசாமடந்தை. பிறவியிலேயே ஊமைப் பெண். என் செய்யலாம்? பருவம் அடைந்து விட்டாள். உருவம் வாலிபர்களை வரிக்கச் செய்கிறது. ஊமையோ வந்தவர்களை விறட்டியடிக்கிறது. நாட்களும் ஒன்று போல் ஓடிக் கொண்டே யிருக்கின்றன.

உரிமைக் காரர்களும் ஊமைப் பெண்ணை திரும்பிப் பார்ப்பதில்லை. பாலை வனத்தில் தோன்றிய பசும் பொன் என தன் மகள் கேட்பாரற்று கிடப்பதை எண்ணி யெண்ணி அவள் பெற்றோர்கள் பெருங் கவலைக்குள்ளாயினர். வயதான பெண்ணை வாளா வைத்துக் கொண்டிப்பவர்களுக்குத் தான் தெரியும் இவ்வருத்தம். மற்றவர்களுக்குத் தெரிய வழியில்லை. சொன்னாலும் விளங்காது. கொள்ளும் உணர்ச்சி வேகத்தைச் சொல்லுவது எப்படி?

இவ்வருத்தத்துக்கு இரையான அவள் தந்தை மணி மந்திர மருந்துகளால் பெண்ணின் ஊமையைப் போக்க முயன்றதெல்லாம் பகல் கனவைப் போல் பயனற்றே போய்விட்டன. பாவம் என்ன செய்வார்? வேறு வழியில்லை. பக்தர்கள் தரிசனம் பாவ விமோசனம் என்னும் முது மொழியை முற்றும் நம்பினர். யாரேனும் துறவிகள்; பக்தர்கள்; பெரியோர்கள் தன்னூருக்கோ பக்கத்திலிருக்கும் ஊர்களுக்கோ வந்திருப்பதாக வதந்தி வந்தாலே போதும், உடனே அவர் தங்கி யிருக்கும் இடம் தெரிந்து கொண்டு மகளுடன் அவருடைய தரிசனத்துக்குப் போய் விடுவார். இந்நாள் வரையில் அதனல் யாதொரு பயனும் ஏற்படவில்லை. என்றாலும் அப் பழக்கம் அவரை விட்டு விலகவில்லை.

தன் ஊருக்கே பிரமச்சாரி ஒருவர் வந்திருப்பதைக் கேள்விப் பட்ட பின் வாளா இருப்பாரா? மறு நாளே வழக்



கம் போல் தரிசனத்துக்கு மகளுடன் சென்றார். என்றாலும்

இன்று ஏனோ மகளை அவர் முன் அழைத்துச் செல்லவில்லை; மறைவில் நிறுத்தி விட்டு தான் மட்டும் பிரமச்சாரி முன் சென்று வணங்கினார்.

''உடன் வந்தவர் எங்கே?'' என்று பிரமச்சாரி கேட்டார்.

திகைப்புற்ற அந்தணரான வாசு என்னும் மார்க்க சகாயன் மறு மொழியின்றி மௌன முடன் சென்றார். மறு நிமிஷமே மகளுடன் வந்து மீண்டும் வணங்கினார்.

ஊமைப் பெண்ணும் வந்து தந்தையைப் போல் வணங்கி விட்டு பணிவுடன் நின்றார்.

''வா—சுகி'' நீ யார்? பெயர் என்ன? உன் ஊர் எது? எங்கு வந்தாய்? எதற்காக வந்தாய்? என்று கேட்டார் திருவள்ளுவர்.

அங்கிருந்தவர்கள் எல்லாம் அதிசயிக்கும் வண்ணம் உடனே ஊமைப் பெண் உணர்ச்சி ததும்ப சொல்லுகிறாள்.

''உடலைக் கேட்கிறீர்களா? உணர்வைக் கேட்கிறீர்களா?

''உடலோ சடம் குடம் போல; உணர்வோ சிற் சொரு பம் சிவம் போல; சடமும் சிற் சொருபமும் சேர்ந்து வாழும் இடமே இவ்வுலகமாகும். பிறப் பிறப்பில்லா சிற் சொரூ பம் பிறப் பிறப்புடைய பிண்டத்தில்; உடலில் கட்டுப் பட்ட காரணந்தான் தெரியவில்லை. இதற்கு பதில் சொல்ல வல்லவரைக் காணேன். பதில் சொல்லத் தெரியாதவர்களு டன் பேசுவது பெருந்தவறு என்றெண்ணியே இந்நாள் வரையில் ஒருவருடனும் பேசாமல் மௌனமா யிருந்தேன்.

பதில் சொல்ல வல்ல தங்களைத் தரிசனம் செய்துவிட்டேன். பெயர் சொல்லி அழைத்த பின்னும் பெயரைக் கேட்பது ஏனோ? ஐயனே! அடிமையின் அவா நிறைவேறும் காலம் நெருங்கி விட்டது; அருள் செய்யவேண்டும்''

## 21

தத்துவ விளக்கத்தை அவள் சித்தத்துக்கு விளங்கும் வண்ணம் திருவள்ளுவரும் சொன்னார். அதைச் செவி யேற்ற வாசுகி சித்தம் குளிர்ந்தவாறு சாந்தியுடன் விடை பெற்றுக்கொண்டு தந்தையுடன் வீடு திரும்பினாள்.

பெண்மை மென்மையானதுதான்; எனினும் அதன் தன்மையை உணரவல்லவர் யார்?

முன்னைவினை மூண்டதோ; கண்ணைக் கவர்ந்ததோ; கருத்தை இழுத்ததோ; உண்மையை உணர்ந்ததோ எதுவும் சொல்வதற்கில்லை; வள்ளுவரை நாடியது வாசுகியின் உள்ளம். அதனால் அவள் எந்நேரமும் வள்ளுவரை தன் உள்ளத்திரையில் கண்டவண்ணமாயிருந்தாள்.

காரியம் நிறைவேற இனி யாரிடம் கூறுவது என்றெண்ணிக் கொண்டிருக்கிறாள்.

கட்டழகி ஊமைப் பெண் கேட்போர் அதிசயிக்க தடையின்றி பேசுகிறாள் என்பதைக் கேள்விப்பட்டதும் போதும்; உரிமைக்காரர்கள் பெண் கேட்க வந்த வண்ணமாயிருக்கிறார்கள். ''இந்த உரிமை இத்தனை நாளாக என்ன செய்துக் கொண்டிருந்தது? உரிமையின் அருமையை உணர்ந்தவர்களே; பெண் விரும்பினால் பேசலாம்'' என்று மார்க்கசகாயன் யார்க்கும் பதில் சொல்வார்.

"அப்பா! அவர்களை அனுப்பிவிடுங்கள்" என்ற குரல் வீட்டிலிருந்து வரும். பிறகு வந்தவர்கள் சொல்லாமல் செல்லவேண்டியதுதான்.

ஒருநாள் வள்ளுவரின் பெருமையை வாசுகியின் தாய் பேசிக்கொண்டிருந்தாள். அது சமயம் தன் பாரம் குறைந்தவள் போல் பெருமூச்சு விட்டாள்; "அதனால் தான் அம்மா என் உள்ளமும் அவரையே மணக்க உறுதியாய் கருதிவிட்டது" என்றாள் வாசுகி.

2

## 22

"பாத்திரம் அறிந்து பிச்சை இடு; கோத்திரம் அறிந்து பெண்ணைக்கொடு" என்பது பழமொழி; குலங் கோத்திரம் அறியாமல் இப்படி கணவனை வரிக்கலாமா வாசுகி?" என்றாள் அன்னை அம்புஜம்.

"அதற்கென்ன? அவரையே சென்று கேளுங்கள்" என்று முடித்தாள் வாசுகி.

மகளின் எண்ணம் அறிந்த மார்க்கசகாயன் நண்பர் களுடன் மறுநாளே திருவள்ளுவர் இருப்பிடம் அடைந் தான். வார்த்தையின் இடையில் அவர் கோத்திரத்தைக் கேட்டான் அதற்கு வள்ளுவர் சொல்லுகிறார் :—

1. ஆறுதத்துவ உடலிலே அடங்கியுள தசநாடி
   வேறுவேறாய் விளங்கினன்றோ விடைவேறு [பகர்வேன்
   சாரும்பொருள்யாவும் சடதியில் மலமாகும்
   பேறுதனை விட்டுப்பேத மேது கூறும்?
2. நீர்த்திவலை போன்று நீள்புவியில் ஆன்மா
   வேற்றுமையாய் வீணர்க்கு விளங்கினும்

[—ஓர்த்துணரில்
பரத்துக்கு அன்னியமாய் பாருலகில் யாருமில்லை
திறமறிந்து சொன்னேன் தெளி.

திருவள்ளுவரின் பதிலைக் கேட்ட மார்க்கசகாயனும் மற்றவர்களும் தெளிவு பெற்றனர். சுற்றம் சூழ வாசுகியை வள்ளுவருக்கு வதுவையாக்கி புதுகுடித்தனம் நடத்தி வைத்தனர்.

இப்பொழுது ஏலேலசிங்கன் உதவியை ஏற்க மறுத்தார். ஏன்? இயல்புடைய மூவர்க்கும் இட்டு உண்ண வேண்டிய இல்வாழ்வான் ஏற்பது இகழ்ச்சி. எனவே செய்யும் தொழிலை சீர்நோக்கினார். நெய்யும் தொழிலை அவர் மனம் நாடியது. உய்யும் வாழ்வுக்கு அதிலே ஊதியம் தேடிக்கொண்டார்.

# 6. திருக்கைலாயம்

மானச சரோவர ஏரிக்கரை; புனலாட சென்ற பக்தர்களுக்கும் சித்தர்களுக்கும் வாக்குவாதம் வந்து விட்டது. இல்லறம் பெரிதென்கிறார்கள் பக்தர்கள். அல்ல துறவறம்தான் சிறந்ததென்கிறார்கள் சித்தர்கள்.

பலத்த வாக்குவாதத்தின் பின் பக்தர்களின் பிரதிநிதி எழுந்து சொல்லுகிறார்:

"பரமசிவனையே பாருங்கள்; பார்வதி சமேதராய் கங்கா தேவியை தலையில் தாங்கியவராய்; மூன்றும் பிறை சந்திரனை முடியில் அணிந்தவராய் விளங்குகிறார் அல்லவா? இல்லறமே சிறந்தது. அதற்கு இணையானது

ஏது? இல்லை என்பதற்கு இதைவிட வேறு சான்றும் வேண்டுமா?"

இதைக் கேட்ட பக்தர்கள் வெற்றியின் விளக்கமாக 'படபட' என கை தட்டினர்.

சித்தர்களுக்கா சொல்ல வேண்டும்? சித்தர்கள் தலைவன் எழுந்தான்:

"பக்தர்களே பதறுதீர்கள்! பரமசிவன் இல்லறத்தி லிருந்தார் தான். நாம் இல்லை என்று சொல்லவில்லை. இழிவை உணர்ந்தார்; இமைக்கும் நேரங் கூட பின் தாமதிக்கவில்லை. உமையும் சரி; உற்ற கங்கையும் சந்திரனும் சரி: எல்லாம் தொந்திரவு தான்; இல்வாழ் வால் வருவது இழிவு தான் என்பதை முற்றும் உணர்ந் தார்; பற்றற துறந்தார். பாருக்கே ஓர் விளக்கமாய்; பரஞ்சோதியாய் கல்லால் மரத்தடியில் போய் அமர்ந்து கண் மூடி மௌனியாய் தனியே இருப்பதை என் சொல்வது? பக்தர்களே எண்ணிப் பாருங்கள். எது முந்தியது? எது பிந்தியது? எதிலிருந்து எதுக்குப்



போனார்? எதை வெறுத்து விலகினார்? எதை விரும்பி ஏற்றார்? இதை உணராது வாதத்துக்கு வந்து விட்டீர் களே அந்தோ!"

இதுவரையில் மௌனத்திலிருந்த ஞானிகள் அவர் களை நோக்கி; "உங்களுக்குள் வாதம் வேண்டாம்; வாருங்கள் பரமசிவனிடமே போகலாம்; சர்வமும் உணர்ந்த சாட்சாத் இருக்கையில் கர்வம் எதற்கு? உண்மையை வினவலாம்; நன்மையை அடையலாம்;

சீக்கிரம் போய் நீராடுங்கள் சிவனிடம் செல்லலாம்" என்றனர்.

திருக்கைலாயம்: பார்வதி சமேதராய் கங்கை பொதிய திங்கள் சூடி மங்களம் விளங்க மகாதேவன் வீற்றிருக்கிறார். அக்கோலத்தைக் கண்டு களித்தவண்ணம் காளை ரிஷபவாகனம் வாயிலின் எதிரே அமர்ந்திருக்கிறது. இளங்காளைகளான கணபதியும் கார்த்திகேயனும் பார்த்தோர் அதிசயிக்க, பெற்றோர்கள் பிரியம்போல் பொன் மேனி குலுங்க விளையாடிக் கொண்டிருக்கின்றனர்.

பத்தர்களும் சித்தர்களும் ஞானிகளும் தூய கோலத்துடன் திருவெண்ணீறு விளங்க கைலாயம் அடைந்தனர்; ஏக நாயகனை முறைப்படி வணங்கினர்; அவரவர்க்குரிய இடங்களில் அமர்ந்தனர்.

பக்தர்களின் தலைவன் எழுந்தான்; கைகூப்பிய வண்ணம்:—

"பூத நாதா! புவனத் திறைவா! தேவ தேவா! பார்வதி சமேதா! பக்தர்கள் பரனே! சித்தர்கள் சிவமே! முக்தர்கள் முதலே! துங்கமான தங்கள் நிலையிலேயே எங்களுக்கு மயக்கம்; சந்தேகம் வந்திருக்கிறது. அதை தாங்களே தீர்த்து வைக்க வேண்டுமாய் பிரார்த்திக்கின்றோம்" என்றனன்.

பரமசிவம் எல்லாம் அறிந்தவராய் இருந்தும் அறியாதவர்போல அதிசயம் தோன்ற புன்முறுவலுடன்



"என்ன என்ன! என் நிலையிலா மயக்கம்; சந்தேகம்? சரி, சரி, சொல்லுங்கள் பார்க்கலாம்" என்றார்.

தலைவன் கைகூப்பிய வண்ணம்:—" புண்ணியமூர்த்தி

பவந்தனை அறிக்கும் தவக்கோலம் கொண்டு தாங்களே தனியே போய் கல்லால மரத்தடியில் கண்மூடி மௌனியா யிருக்கின்றீர். மீண்டும் பவத்தை வளர்க்கும் பார்வதி யுடன் வந்து வாழ்கின்றீர். ஆதலின் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டு அறங்களில் எது சிறந்தது என்பது எங்க ளுக்கு விளங்கவில்லை. இதைத் தாங்களே கூறியருள வேண்டும்'' என்றனன்.

''தர்மத்தின் திறவுகோல் மர்மமா யிருக்கிறது. என்றாலும் அது மனித உலகில் இனிது நடமுறையிலிருக் கிறது. காரணம் என்ன? நனவு கனவு உறக்கம் ஆகிய நிலைகள் உள்ள இடமே அறத்துக்கு ஏற்ற இடமாகும். இந்த மூன்று நிலைகளும் அனுபவிக்கப்படுவது மேல் லோகத்திலும் அல்ல; கீழ் லோகத்திலும் அல்ல. நடு நாயகமாய் திராசு முனைபோல மையத்திலிருக்கும் பூலோ கத்தில்தான். எனவே ஐயம் ஏற்படும் பொழுதெல்லாம் வையகம்போய் உண்மையைக் கண்டு உணர்ந்து வருவது தான் உத்தமம். ஆதலின் உங்களில் ஒருவர் பூலோகம் போய் இரண்டறங்களில் எது சிறந்தது என்பதைக் கண்டறிந்து வாருங்கள்'' என்றார் பார்வதி பதி.

அவையிலிருந்த அனைவரும் அணைகடந்த வெள்ளம் போல திறந்த விழி மூடாமல் ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணமே இருந்தார்கள். மௌனமே நிலவியது.

சிறிது நேரம் சென்றது; பெருமூச்சு வந்தது. அமைதி அகன்றது! கொங்கணவர் குதித்து எழுந்தார். கூப்பிய கைகளுடன், ''ஐயனே! அடியேனை அப்பணிக்கு அனுப்புங்கள்'' என்று வேண்டிக் கொண்டார்.

சிவபெருமான் சிரம் அசைத்தார்.

# 7. கொக்கென எண்ணினையா கொங்கணவா ?

கொங்கணவர் விடை பெற்றார். கைலாயம் கடந்தார். பேரிமயம் பின்னடைந்தது. அதோடு பனிவரை முடிந்தது; பெரும் வனத்திடையே வந்தார்; பூலோகம் சேர்ந்தார். கங்கை வழியாகவே காசியை அடைந்தார். விசுவேசர் பூஜையைக் கண்டு பெருமிதங் கொண்டார். தபசிகளைக் கண்டு தற்பெருமை கொண்டார். பக்தர்களைக் கண்டு பலதும் வினவினார். பாமரர்களைப் பார்த்ததும் பரபரப்பாய் நடந்தார். யோகிகளைக் கண்டு உற்றதை வினவினார்.

இவ்வண்ணமாகவே தெற்கு நோக்கி வருகிறார். இது வரையில் அவர் பெற்ற அனுபவங்கள் அநேகம். என்றாலும் எதை அறிய வந்தாரோ அதன் அனுபவந்தான் அகப்படவில்லை.

திருப்பதி அடைந்தார். பாண்டவர் தீர்த்தத்தில் வேண்டியமட்டும் விளையாடினார். ஆகாச தீர்த்தத்தில் அடக்கமாய் குளித்தார். பாபநாசத்தில் பக்தியுடன் மூழ்கினார். அலமேலுமங்கைபுரம் வந்தார். அங்கேயே தங்கினார். மறுநாள் பட்டணம் நோக்கி நடந்தார். கூவம் நதியில் குளித்தார். குதூகலமாய் அருகேயிருந்த ஆலமரத் தடியில்போய் அமர்ந்தார். கண்மூடி மௌனமானார். கருத்து என்ன செய்கிறது என்பதைக் கண்டறிய வல்லார்

யார்? என்றாலும் ஒன்றுமட்டும் உறுதியாய் சொல்லலாம். என்ன? கருத்தும் அடங்கி உடல்போல் அசைவற்று இருங்குமானால் விருத்துப்போன (இரத்த ஓட்டம் தடைபட்ட) உடலுருப்பு உடனே வினையாற்ற தடையாயிருப்பதுபோல உள்ளமும் உடனே வெளிப்படாது. மெல்லத்



தான் உணர்ச்சி யுண்டாகும்; அதோடு அனுபவித்த அமைதியும் சேர்ந்துவரும். எனவே துடிப்போ; கடுமொழியோ; வெகுளியோ அந்த நேரத்தில் இந்த மனதை ஆட்கொள்ள முடியாது.

ஆனால் சிந்தையை அடக்கி சும்மாயிருப்பது சாமானியமான காரியமல்ல. அதைக் காட்டிலும் அருமையான காரியம் வேறில்லை.

அந்நதியில் அகப்பட்ட தவளை ஒன்றை அலகில்பற்றிக் கொண்டு பறந்தது; பக்கத்திலிருந்த ஆலமரத்தின் கிளை ஒன்றில்போய் அமர்ந்தது; தவளையின் ஆருயிரை நீக்கி அங்கமங்கமாய் கொத்தி விழுங்கியது அக்கொக்கு. என்றாலும் அதன் கொடும்பசி அடங்கவில்லை. மீண்டும் நதியை நாட நினைந்தது. அதற்குள் அதன் மலத்துவாரம் திறந்தது. அவ்வளவுதான்.

அம்மரத்தடியில் மௌனமாயிருந்த கொங்கணவர் மேல் கழிந்துவிட்டது, பட்டதுதான் தாமதம்; உடனே கண் விழித்தார். பட்சியின் எச்சம் என்பதை அறிந்தார்; கோபம் கொந்தளித்தெழுந்தது; கண்ணில் கொடுங்கனல் வீசியது. அண்ணாந்து பார்த்தார். அவ்வளவுதான்.

கொக்கு எரிந்தவண்ணம் அவர் கால்முன் வந்து விழுந்தது.

தன் தபசின் வல்லமையை எண்ணி மகிழ்ந்தார் பெருமிதங் கொண்டார்.

அதனால் ஆணவம் வளர்ந்ததை, அறியாமை வளர்ந்ததை, தன் தபசின் பலன் பறிபோனதை அறவே மறந்தார். என்னே மதியீனம்!

" கோபமிக்க போதேவ ராறுவார்;
குறுகுவோர் தமைக்கொடிய கோய்புகும்
சாபமிட்டு மாதவர்க ளாயினும்;
தலைமைமிக்க தந்தவம் இழப்பரே"



என்னும் அஞ்ஞவதை பரணியின் கருத்துக் கிணங்க ஆணவநோய் அவருக்கு அளவு கடந்தது. மமதையுடன் எழுந்தார். தன் தவ வலிமையை தானே மெச்சிக்கொண்டார். தன் கோபம் கொக்கை எரித்ததோடு நிற்கவில்லை; அது தன் வலதுகால் விரலையும் சுட்டுவிட்டதே என்று உண்டாகும் வேதனைக்கு வருத்தப்படாமல் ஆச்சரியப்பட்டார். அகம்பாவத்தின் மகாத்மியம் அத்தகையதாயிருந்தது. இறுமாப்புடன் நடந்தார்.

திருவள்ளுவர் வீட்டு வாசல்முன் வந்தார் "அம்மா பிச்சை" என்றார்.

"சற்று பொறும்" என்ற பதில் வீட்டிலிருந்து வந்தது.

இதைக் கேட்டதும் கொங்கணவருக்குக் கோபம் கொதித்தெழுந்தது.

"என் மகிமையை உணராது இம்மாது இப்படி மறு

மொழி கூறுகிறாளே" என்று தனக்குள் எண்ணிய வண்ணம் கனைத்தார் கொங்கணவர்.

கனைப்பொலி அடங்குவதற்குள் "கொக்கென எண்ணினையா கொங்கணவா?" என்று வீட்டிலிருந்து பதில் வந்தது.

உடனே கருடனைக் கண்ட நாகம்போல கொங்கணவன் கொட்டம் அடங்கிவிட்டது. வாய்மூடி மௌனியாய் கம்பம்போல் அசைவற கைகட்டி நின்றான்.

பதி சேவை முடிந்தது. பாத்திரத்தில் அன்னத்துடன் காத்திருக்கும் கொங்கணவரை நோக்கி வந்தாள் வாசுகி.

ஏழ்மையின் சின்னத்தில் இறைவியே மறு உருவாய் தன்முன் வந்து அமுதுடன் நிற்பதாகவே எண்ணினான்



அவனுக்கு அம்மையின் வடிவம் அம்பிகையின் உருவம் போலவே தோன்றியது. கற்பரசியைக் கண்டதும் நல்லாரைக் காண்பதும் நன்றே என்பதற்கிணங்க கொங்கணவர் வணங்கினார். அவர் குணம் மாறியது.

"அம்மா! நான் கொக்கை எரித்தது தங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று பணிவுடன் முனிவர் கேட்டார்.

"தவமுனியே! அது எனக்குத் தெரியாது தெரிந்துக் கொள்ளவேண்டிய அவசியமும் இல்லை. கற்புடைய மனைவிக்குக் கணவன் சேவை ஒன்றே முக்கியம். அதில் எல்லாம் அடங்கி விடுகிறது. மேல் கொண்டு ஏதேனும் கேட்க விரும்பினால் அடுத்த ஊரில்

ஏலேல சிங்கன் என்ருெருவர் இருக்கிறார். அவரிடம் சென்று கேட்டுக்கொள்ளுங்கள்" என்று வார்த்தையை முடித்துக்கொண்டார் வாசுகி.

* * *

தன் வீட்டு வெளித் திண்ணையில் ஏலேல சிங்கன் வியாபாரிகளிடம் பேரம் பேசிக் கொண்டிருக்கிறான். கொங்கணவர் வீட்டை விசாரித்துக்கொண்டு வந்து வாசலில் நின்றார்.

கொங்கணவரைக் கண்டதும் "வாசுகி அம்மையார் அனுப்பினரல்லவா?" என்றான் ஏலேலன்.

"இது இவனுக்கு எப்படித் தெரியும்? வியாபாரிகளுடன் விலை பேசிக் கொண்டிருந்தவன் தன்னைக் கண்டதுமே முக்காலம் உணர்ந்த முனிவரைப் போல இப்படிக் கேட்கிறானே" என வியப்புடன் தனக்குள் எண்ணினன்.

முனிவன் எண்ணத்தை அவன் முகக்குறிப்பால் உணர்ந்த ஏலேலன்:—

"குறிப்பில் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்;
என்ன பயத்தவோ கண்" என்றான்.

30

"முகக் குறியைக் கொண்டே மனக் குறிப்பைக் கூற வல்ல ஒருவரை இன்றுதான் காண்கிறேன்" என்றான் கொங்கணவன்.

"அப்படியாயின் நல்லது." எதிர் திண்ணையைச் சுட்டியபடி "போய் அமரும்; வியாபாரம் முடித்து ஆகாரம் கொண்டபின் பேசலாம்" என்றான் ஏலேல

சிங்கன்.

# 8. இல்வாழ்வான் ஏற்பதா?

வள்ளுவர் வெளியே போயிருக்கிறார். வாசுகி பிழக் கடையில் புடவையை உலர்த்திக் கொண்டிருக்கிறார். முன் கதவும் பின் கதவும் தாழ்ப்பாள் போடப்பட்டிருக்கிறது.

"அம்மா பிச்சை" என்றொரு குரல் முன் வாசலிலிருந்து வந்தது.

"ஐயனே! தானம் செய்ய வழியிருந்தும் தற்போது நான் வெளி வந்துக் கொடுக்க வழியில்லை" என்ற குரல் வீட்டிலிருந்து வெளிப்பட்டது.

"நல்லது; ஒரு சிறு கல்லையாவது எடுத்து சாளர வழியே வெளியே போடுங்கள்; அதுவே எனக்குப் போதும்" என்றது வாசலில் நின்று அவர்கள் வறுமையை உணர்ந்த அவ் வுருவம்.

வியப்புற்ற வாசுகிக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்றாலும் வெளிநிற்பவர் விருப்பம்போல் ஒரு சிறு கல்லை எடுத்துப் போட அவர் உள்ளம் எண்ணியது. எனவே பிழக்கடையிலிருந்து ஒரு சிறு கல்லை எடுத்து வந்து சாளர வழியே வெளியே போட்டார்.

"அம்மா! இதோ தங்கக் கட்டி. இதைக் கொண்டு உங்கள் வறுமையைப் போக்கிக் கொள்ளுங்கள்" என்றவாறு அக் கல்லை அடுத்த கணமே தங்கமாக்கி சாளர

வழியே போட்டு விட்டு போய் மறைந்தது அவ்வுருவம்.

சிறிது நேரம் சென்றது; வள்ளுவர் வந்தார்.

மடி உடுத்திய வாசுகியார் வந்து கதவைத் திறந்தார்; கலசத்தில் கால் கழுவ நீர் கொடுத்தார்.

32

தொல்லுலகம் துதிக்கும் வள்ளுவர் கை கால் முகங் கழுவினார்; கலசத்தை நீட்டினார்; வாசுகி வாங்கி அதை வீட்டில் வைத்தார். முன் திண்ணையில் அமர்ந்தார் வள்ளுவர். தங்கக் கட்டியைக் கொண்டு வந்து முன் நீட்டினாள் வாசுகி. வள்ளுவர் அதை வாங்கவில்லை.

வாசுகியின் முகத்தை உற்று நோக்கினார். பிறகு அமைதியுடன் "என்ன இது?" என்றார்.

வாசுகி நடந்த விருத்தாந்தங்களை எல்லாம் சொன்னாள்.

"ஐயம் இட்டு உண்ண வேண்டிய நாம் ஏற்பது இகழ்ச்சி" என்பதை இந்நாள் வரையில் நீ அறியாத தென்னே!" என்றார் வள்ளுவர்.

"அடிமை அறியேன்" என்றார் வாசுகி.

"இல்லறத்தை விரும்பவர்கள் "நல்லா றெனினும் கொளல் தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று" என்பதை இன்றையிலிருந்தாவது அறிந்துகொள் வாசுகி" என்றார் வள்ளுவர்.

மூச்சு வாங்கினார். மேலும் கொட்டாவி விட்டார்.

"உனக்குத் தங்கம் வேண்டுமா?" என்றார். எழுந்து பிழக்கடை பக்கம் போனார். சிறிது நேரம் கழிந்தது.

"வாசுகி! வாசுகி!" என்றார்.

அம்மையார் அங்கே போனார்.

என்ன ஆச்சரியம்! அங்கே முன் கற்களாக இருந்தவை எல்லாம் இப்பொழுது தங்கக் கட்டிகளாகக் காணப்படுகின்றன. வியப்புற்ற வாசுகி விம்மினார்: கண் கலங்கியது; கணவனை நோக்கி கை குவித்து நின்றார்.

## 33

வள்ளுவர்:

1) நிலையாமை நோக்கியபின் நீள்புவியில் நீயும்
நிலையாத செல்வத்தில் நிலகுலைவை தேனோ?
கலைவாணி! கனகமும் கால்கட்டும் வேறல்ல
தளையாகும் என்றே தெளி.

2) செல்வம் விரும்பி சீர்கெடுவதை விட்டு
அல்லும் பகலும் அறநெறி நாடி நின்றால்
வெல்லலாம் பிறப்பிறப்பை பெண்களின் திலகமே!
பல்லூழி வாழினும் பயனில்லை காண்.

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின்நின்ற துணை"

எனவே கொள்வாயா கொடுப்பாயா நீயே கூறு" என்றார் தர்மத்தின் மர்மம் அறிந்த தெய்வப் புலவர்.

நிலை கலங்கிய வாசுகி "அண்ணலே அறிந்தேன்; ஆருயிர் வள்ளலே அறிந்தேன். அந்தோ! அறியாமை

யால்—" நா குழறியது; பெருமூச்சு கிளம்பியது.

இங்கிலியில் மறைவில் நின்று இவைகளை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்த கொங்கணவர் தன் குற்றம் உணர்ந்தார். இனி என்ன ஏற்படுமோ என்று பயந்தார். உண்மையை உரைக்க இனி தாமதம் செய்தால் தனக்கே ஒருவேளை தீங்கு ஏற்பட்டாலும் ஏற்படக்கூடும் என்ற எண்ணம் வேறு எழுந்தது. கொழுந்து விட்டெரியும் கோபக் கனலால் கொக்கையே எரித்தவன் இக் குடும்பியின் முன் நடுங்க வேண்டிய நிலையும் வந்து விட்டது என நினைத்தான்.

கூப்பிய கைகளுடன் அவர்கள் முன் வந்தான்:—

" எல்லாம் என் அறியாமையால் ஏற்பட்ட வேதனை. அண்ணலே அடியேனை மன்னிக்க வேண்டும்; மாணவனாய் ஏற்றருள வேண்டும். மன மாசு நீங்கி நான்



மனித உலகில் நிலவ வேண்டும்" என்றதும் அவர்கள் முன் விழுந்து வணங்கினான் கொங்கணவர்.

உண்மையை உணர்ந்தார் செந்நாப்போதார். எந்நாளும் ஏழ்மையில் இன்பத்தைக் காணும் வள்ளல் தங்கத்தை என் செய்வார்?

" பொறுமையின் இருப்பிடமே பூதேவி தாயே
மறுமைக்கும் ஆகாது மக்களையே மயக்குமித்
துருவற்ற தங்கத்தை தோன்றாமல் செய்துமுன்
மறுவற்ற உருவமாம் கல்லையே காட்டு."

என்றார் வள்ளுவர். அவ்வளவுதான் அங்கிருந்த கனகக் கட்டிகள் எல்லாம் பழையபடியே கற்களாய் மாறி விட்டன.

இதைக் கண்ட கொங்கணவருக்கு பாடலின் பெருமையும்; பண்பினால் பலவும் பெறலாம் என்ற எண்ணமும் தர்மத்தின் மர்மமும் ஓரளவு உணர்ந்தார். அதன் அறிகுறியாக உணர்ச்சிவயமானார்; நாடி நரம்புகள் துடித்தன; உடல் சிலிர்த்தது. திருவள்ளுவர் முன் திரும்பவும் பணிந்து வணங்கினார்.

## 9. சோதனையா?

(1) பகல் பத்து நாழிகை என்பதை சாளர வழியே வந்த சூரிய ஒளி சொல்லுகிறது. திருவள்ளுவர் சேலை நெய்துக் கொண்டிருக்கிறார். கொங்கணவர் முன் வீட்டில் உட்கார்ந்து நூல் சுற்றிக் கொண்டிருக்கிறார். வாசுகி அம்மியில் கூட்டு அரைத்துக் கொண்டிருக்கிறார்.

நூல் குச்சி தவறி கீழே விழுந்துவிட்டது. வள்ளுவர் மாணவனை கூப்பிட்டார். கொங்கணவர் வந்தார்.

"விளக்கேற்றிக் கொண்டுவா; கீழே விழுந்த நூல் குச்சியை எடுக்க வேண்டும்" என்றார் வள்ளுவர்.

"வெளிச்சம் இருக்கிறதே; விளக்கு எதற்கு?" என்று மறுப்பு கூறினார். மறுகணமே நெசவுக்குழியில் இறங்கி நூல் குச்சி தேடத் தொடங்கினார் கொங்கணவர்.

"வாசுகி" என்றார் வள்ளுவர்.

"ஐயனே!" என்று வந்தார் அம்மையார்.

"விளக்கேற்றி வந்து விழுந்த நூல்குச்சியை எடுத்துக்கொடு" என்றார் கணவர்.

மறுமொழியில்லை. விளக்கொளியுடன் அம்மை வந்தார்; நெசவுக்குழியில் இறங்கினார். நூல் குச்சியைத் தேடி எடுத்துக் கொடுத்தார்.

இதற்குள் வள்ளுவர் சொல்லை தள்ளிவிட்டு நெசவுக் குழியில் இறங்கித் தேட ஆரம்பித்த கொங்கணவர் தேள் கொட்டுக்கு இரையாகித் தேம்பத் தொடங்கினார். விம்புடன் வேதனையைச் சகித்துக் கொண்டு "ஐயனே! தேள்விடம்; நஞ்சு நெஞ்சை அடைக்கிறது; மூச்சு தடுமாறுகிறது" என்றார்.

36

வாசுகியை நோக்கி "தேங்காய் பால் பிழிஞ்சி கொண்டு வந்து கொடு" என்றார் வள்ளுவர். பிறகு தானே பிழக்கடைக்குப் போய் கிணற்றருகிலிருந்து கிணற்றுப் பூண்டைக் கொண்டுவந்து அதன் ரசம் கடிவாயிக்குத் தடவி நெருப்புக் காட்டினார். நிமிஷத்தில் நஞ்சு இறங்கியது.

(2) காலை வேளை, தியானம் முடிந்தது; எழுந்து போய் உணவுக்கு உட்கார்ந்தார் வள்ளுவர். பழங் கூழும் ஊறுகாயும் கொண்டு வந்து அவர் முன் வைத்தார் வாசுகி. மாணவனைக் கூப்பிட்டார். உடனே கொங்கணவர் வந்தார்.

"விசிறி வேண்டும்" என்றார் வள்ளுவர்.

"பழங் கூழுக்கு விசிறி எதற்கு ஐயா?" என்றான் சீடன்.

"வாசுகி விசிறி வேண்டும்"

மறுமொழியில்லை; உடனே விசிறியுடன் வாசுகி

வந்தார் : விசிறினர். என்ன அதிசயம்! கொஞ்ச நேரத்திற்குள் வள்ளுவர் உடலில் வெப்பமான வாயு வெளிப்பட்டது. அதோடு வியர்வையும் வடிய வாரம்பித்தது. இதைக்கண்ட கொங்கணவருக்குக் காரணந்தான் விளங்கவில்லை. கேட்கவும் மனந் துணியவில்லை. மௌனமாய் இருந்து விட்டார்.

(3) உச்சி உணவுக்குப் பின் வள்ளுவர் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறர். அவர் பார்வை சாளர வழியே வெளியே சென்றது. ஊர் சிறுவர்கள் சிலர் வள்ளுவர் வாசலிலிருந்த சம்பங்கி மரத்தடியில் விளையாடிக் கொண்டிருக்கின்றனர். மதங்கொண்ட யானை கண்டதை வாரி இறைத்துக் கொண்டு வருகிறது. பார்த்து விட்டார் பெருநாவலர்.

" மாணவா சீக்கிரம் வா " என்றார் வள்ளுவர்.

37

" ஐயா ; துணி துவைத்துக் கொண்டிருக்கிறேன் " என்ற தொனி வந்தது.

" வாசுகி வா சீக்கிரம் "

பிழக்கடை கிணற்றில் நீர் சேந்திக் கொண்டிருந்தார் வாசுகி. குடம் நீருடன் பாதி கிணற்றளவுதான் கயிற்றுடன் வந்திருக்கிறது. பதி சேவையை விட பாரில் மனைவிக்கு என்ன வேண்டியிருக்கிறது? சட்டி சுட்டது கைவிட்டது என்பதுபோல கணவன் குரல் கேட்டதுதான் தாமதம் ; கை கடையில் கயிற்றை தள்ளிவிட்டது; கால் கணவன் இருப்பிடம் சேர்ந்தது. கணவன் குறிப்பை அறிந்தார். உடனே வாசலுக்குப் போனர். விளையாடிக் கொண்டிருந்த பிள்ளைகளைத் தூக்கி திண்ணைமேல் விட்டார். யானையும் நெருங்கி விட்டது. கணவனை நினைந்து

களிறை நோக்கினார்.

கற்பரசிகளைக் கண்டு கடவுள்களே கௌரவிக்கும் போது களிறு என் செய்யும்?

மதம் மாண்டது; மன்னிப்பு வேண்டுகிறேன் என்பது போல பாவனை செய்தது; பின் அமைதியுடன் அவ்விடத்தை விட்டு அகன்றது அம்மதயானை.

(4) காசி யாத்திரை போகிறான் கரும் பார்ப்பான் ஒருவன். எல்லாரும் அவனுக்கு வெள்ளிப்பணம் கொண்டு வந்து கொடுக்கின்றனர். வள்ளுவரிடமா வெள்ளிப் பணம் இல்லை. எஞ்சியிருந்தது ஒரு செம்புக் காசுதான். அதை எடுத்துக் கொண்டு யாத்திரை வாசியிடம் போனார்.

"இதை மனமுவந்து ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றவாறு அக்காசை அவரிடம் நீட்டினார்.

வெள்ளிப் பணம் வெகுவாக வந்துக் கொண்டிருக்கும் பொழுது அச்செம்புக் காசை ஏற்கும் எண்ணம் அவனுக்கு இல்லை. அதே சமயத்தில் மற்றவர்கள் என்ன

3



நினைப்பார்களோ என்ற எண்ணம் வேறு எழுந்தது. எனவே இரு எண்ணத்திலிருந்து ஒரு முடிவுக்கு வர எண்ணினான், எல்லாரையும் ஏறிட்டுப் பார்த்தான். அங்கிருக்கும் அத்தனைக் கண்களும் பித்துப் பிடித்தது போல் தன்னையே பார்த்து நிற்பதைக் கண்டான். வசைக்கு அஞ்சினான்; வாங்கி அக்காசை தனியே தன் மேல் துணியின் ஒரு மூலையில் முடிந்துக் கொண்டான்.

"பணத்துக்கும் காசுக்கும் பேதம் தெரியவேண்டு

மல்லவா ?" என்றான் எல்லாரையும் பார்த்து.

கைப் பொருள் இல்லாதான் கொடுக்கும் கொடையே கொடை என்பதை அம்மடையன் அறியான் போலும். எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டு நடந்தான் யாத்திரை வாசி.

49790




# 10. நாரதர் வேலை

நாளுக்கு ஒரு குறள் எழுதுவது. அதை மாலையிலோ; மறுநாள் காலையிலோ ஏலேலசிங்கனுக்கு பாடம் சொல்லி விளக்குவது. இவ்வண்ணமாகவே ஆயிரத்து மூந்நூற்று முப்பது நாட்கள் ஆயின. முப்பாலும் அன்று மாலையுடன் முடிவடைந்தது.

"ஐயா! முக்தி நெறி (வீட்டுப்பால்) நாளையிலிருந்து ஆரம்பமாகும் பாடம்" என்றான் ஏலேலன். வியப்புடன் "முக்தி நெறியா? வீட்டுப் பாலா? அதைக் கேட்டுப் பயனில்லை. அவரவர்கள் சக்திக்கேற்றபடி சிந்தித்துச் சாதிக்க வேண்டிய காரியம் அது." என்றார் வள்ளுவர்.

அடக்கத்துடன் "ஐயா! அது ஆகக் கூடிய காரியமா?" என்றான் ஏலேலன்.

உறுதியுடன் "சந்தேகம் என்ன! பூ; பிஞ்சு; காய் முறையாக தோன்றி நல்ல விதமாய் வளருமாயின் கனி யாவதற்கு யார் உதவி வேண்டும்? யார் கூற வேண்டும்?

காய் முதிர்ந்தால் கனியாவது இயற்கை அல்லவா? அதைப் போலவே முப்பாலேயும் முறையாய் அனுசரித்து நடந்தால் தப்பாமல் நான்காம் நிலையாகிய வீடு (மோட்சம்) தானே அடையப்படும். இதற்குத் தர்க்க வாதங்கள் தேவையில்லை."

"ஆக்கம் அளிப்பது அறத்துப்பால். அறிவுடன் வாழ வைப்பது பொருட்பால். இன்பத்தை இனிது அனுபவிக்கச் செய்வது மூன்றாம்பால். ஆக்கம்; அறிவு; இன்பம் இம்மூன்றையும் பூவுக்கும் பிஞ்சுக்கும் காயிக்கும் ஒப்பிடலாம். பூ இல்லா விட்டால் பிஞ்சு ஏது? பிஞ்சே இல்லாதபோது காயேது? கனிதான் ஏது? இல்லை அல்லவா? அதைப் போலவே ஆக்கம் இல்லாதபோது



அறிவு ஏது? அறிவில்லாதபோது இன்பம் ஏது? இன்பத்தையே உணரா மனது இணையில்லா வீட்டு நெறியை நினைப்ப தெங்ஙனம்?" என்றார் வள்ளுவர்.

இதற்குள் யாழ் ஓசை வருகிறது. ஓசை வரும் திசை நோக்கினார் திருவள்ளுவர். திரிலோக சஞ்சாரியான நாரதர் வருவதை பார்த்தார்.

"நல்ல சமயத்தில் நாரதர் வருகிறார்" என்றார் வள்ளுவர்.

உலகம் சுற்றும் கலகப் பிரியன் இந்த நேரத்தில்தானு வரவேண்டும் என்று தனக்குள் எண்ணினான் ஏலேலன்.

"நல்ல நேரத்தில் வந்தீர்" என்றவாறு நாரதரை வரவேற்றார்: உபசரித்தார்; உட்கார வைத்தார் வள்ளுவர். அவர் இடதுபக்கம் அடக்கமாய் நின்றான் ஏலேலசிங்கன்.

"என்ன செய்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்றார் நாரதர்.

"குறள் பாடம் முடிந்தது" என்றார் வள்ளுவர்.

"எங்கே அதைக் காட்டுங்கள் பார்க்கலாம்" என்றார் நாரதர்.

ஏலேலசிங்கன் ஏட்டுச்சுவடியை எடுத்து நாரதர் முன் நீட்டினான்.

வாங்கினார்; புரட்டினார்; பக்கம் விடாமல் திருப்பினார்; தலை அங்கங்களைக் கூர்ந்து கவனித்தார், ஒவ்வொரு தலை அங்கமும் பத்து குறள்களே கொண்டிருப்பதைக் கண்டு "கல கல" என சிரித்தார். அச்சிரிப்பில் ஏளனமும் குறும்பும் இறுமாப்பும் நிறைந்திருந்ததை உணர்ந்தார் வள்ளுவர்.

"பத்து தலை கொண்டதால் இராவணன் பட்டபாடு உமக்குத் தெரியாதா?" என்றார் நாரதர்.

41

"பத்துக்குள் தானே எல்லா கணக்கும் அடங்குகிறது. அது மட்டுமா? அல்ல. ஒவ்வொரு உடலுக்கும் வாயுக்கள் பத்து; இந்திரியங்கள் பத்து; நாடிகள் பத்து இருப்பதை மறந்து விட்டீர்களா? கை விரல்கள் பத்து கால் விரல்கள் பத்து என்பதையாவது ஒத்துக் கொள்கிறீர்களா?" என்றார் வள்ளுவர்,

"அது இருக்கட்டும்; எல்லாம் ஈரடியாக இருக்கிறதே!" என்றார் வாய்சப்பிய வண்ணம் நாரதர்.

வள்ளுவர் "வாமனவதாரத்தில் ஈரடியால் தானே விஷ்ணு உலகளந்தான், இருவினையால் தானே பிறப்பு வருகிறது. பிறந்த பின்னும் பகுத்தறிவு உடைய மக்கள்

ஈரடியால் தானே நிற்பது? இருகைகளால் தானே காரியங்கள் செய்வது? இரவு பகல் இரண்டு தானே உருண்டு உருண்டு மாறி வருகிறது? உலக வாழ்வுக்கே வரையறையாக அமைந்திருப்பது?" என்றார்.

"அப்படியா? சரி; நல்லது; எல்லாம் ஏழு ஏழாகவே இருக்கின்றனவே இதற்கென்ன சொல்லுகிறீர்?" என்றார் வேறொன்றும் அறியாதவர் போன்று நாரதர்.

"இவ்வுலகமோ ஏழு கடலால் சூழப்பட்டிருப்பதை அறியாதவரும் உண்டா? ஞான பூமிகள் ஏழு; அஞ்ஞான பூமிகள் ஏழு; சொர்க்கங்கள் ஏழு; நரகங்கள் ஏழு அல்லவா?" என்றார் வள்ளுவர்.

"ஓகோ அப்படியா? சரி முப்பாலைத் தானே எழுதியிருக்கிறீர்?"

"ஆம்; அப்பால் இருப்பதைத் தப்பாது அடையலாம் முப்பாலையுங் கடந்தால்".

மூக்கறுந்த நாரதர் கலகத்துக்குக் காரணங் கிடைக்கவில்லையே என்று கலங்கினார். மீண்டும் சுவடிகளை புரட்டினார். "கயமை" என்ற அதிகாரம் அவர் கண்முன் நின்றது. உற்று நோக்கினார். அவர் உள்ளத்தின் கவலை



ஒழிந்தது. உற்சாகமுடன் மேலும் புரட்டினார். "நீத்தார் பெருமை" என்ற அதிகாரம் வந்தது. பார்த்தார் பொங்குகிறது ஆனந்தம். வேறென்ன வேண்டும்? ஏட்டை மூடினார்.

"வள்ளுவரே வருகிறேன்" என்றவாறு குறளைக் கொடுத்துவிட்டு குதூகலமாய் நடந்தார்.

* * *

இந்திர லோகம்; அந்தி நேரம். ஆனந்த பவனத்தில் அமர்ந்திருக்கிறான் தேவேந்திரன். அரம்பை, ஊர்வசி; திலோத்தமை; மேனகை ஆகிய நடன மாதர்கள் நால்வரும் தேவேந்திரன் முன் நாட்டியப் போட்டியில் இறங்கி விட்டனர். போட்டி நெடுநேரமாய் நடந்துக் கொண்டிருக்கிறது. ஏற்றத் தாழ்வை கண்டுணர முடியாது தேவேந்திரன் திகைப்புற்றவனாய் தீர்ப்புக் கூற என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கிறான்.

யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்பதைப் போல இந்த சமயத்தில் யாழ் ஓசை வந்தது. ஆலோசனை அகன்றது. திரும்பிப் பார்த்தான் தேவேந்திரன்.

நல்ல சமயத்தில் நாரதர் வருகிறார் என்றெண்ணிக் கொண்டே எழுந்தான் இந்திரன். ஆடிய மாதர்கள் நாரதர் வரவைக் கண்டதும் நாணம் மேலிட்டவர்களாய் ஓடி பக்கவாட்டில் மறைந்தனர். தேவேந்திரன் எழுந்து நாரதரை வரவேற்று இருக்கை அளித்தான். அவனும் அமர்ந்தான்.

நாரதர்: தேவேந்திரா; உன் உல்லாச நேரத்தில் வந்து விட்டேன் அல்லவா?

தேவேந்திரன்: இல்லை; என் உபத்திரவமான நேரத்தில் தான் வந்திருக்கிறீர்கள்.

நா: (ஆச்சரியமுடன்) என்ன?



தே: (உறுதியுடன்) சந்தேகம் என்ன! இப் பெண்கள் நாட்டியப் போட்டியில் என்னை நடுநாயக

மாக ஏற்படுத்திக் கொண்டு ஆட ஆரம்பித்து விட்டனர். தீர்ப்புச் சொல்லத் தெரியாது தயங்கி நிற்கும் நேரத்தில் தான் வந்திருக்கிறீர்கள்.

நா: அப்படியா? சரி; பின் சொல்லுகிறேன்.

தே: சரி; வந்த காரியத்தைக் கூறுங்கள்.

நா: (யாழை மீட்டிக் கொண்டே)

தேவாதி தேவனே! தேவலோக நாதனே!
பூலோக வாசிகள் பொய்யுங்களவு மின்றியே
மேலாக வாழவே மெய்வழியை நாட்டினன்.

தே: யாரது?

நா: திருவள்ளுவனுமே.

தே: நல்லது நானே!

நா: அதில் உன்னை

தே: போற்றி இருப்பானே!

நா: தூற்றி இருக்கானே!

தே: காரணம் இல்லை.

நா: காரணமும் காரியமும் கண்டுதானே!

தே: சொல்லு பார்க்கலாம்.

நா: (புன் முறுவலுடன்) அப்படிக் கேளு:—

ஆரிய வேதம் உன்னை
அங்கங்கே போற்றி நிற்கும்—நீ
சீறிடின் மழையும் பெய்யா
செல்வமும் அழியும் என்றே.
கூரிய மதியே கொண்டான்உன்
கொள்கையில் தவறே கண்டான்
நேரிய முறையில் சொன்னன்
நீசன்நீ தேவர் யாரும்.

தே: (கண்கள் சிவந்தன; கோபத்துடன்) அப்படியா? சரி; சரி; இருக்கட்டும். (சற்று நிதானித்து) அவன் சொல்லியபடியே சொல்லுங்கள் பார்க்கலாம். அப்பொழுதுதான் எனக்கு நன்ருக விளங்கும்.

நா: அதற்கென்ன தடை? சொல்கிறேன். இதோ அவன் சொல்லிய சொல்:

1) "ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு [ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி."

உன்னேடு மட்டும் விட்டாஞ? இல்லை. இதோ இன்னெ ரிடத்தில் தேவர் குலத்தையே மட்டம் தட்டு கிருன் பார்.

2) "தேவர் அனையர் கயவர் அவருந்தான்
ஏவன செய்தொழுக லான்."

தே: (கோபரிக்கவனுய் கண்கள் கனல்வீச) என்ன! ஒரு மானிடனுல் என் மானம் மட்டுமல்ல; தேவர்களுடைய; தேவ பரம்பரையினுடைய மானமே போவதை என்னுல் இனி விட்டு வைக்கவே முடியாது. கட்டாயம் அவனுக்கு புத்தி கற்பிக்க வேண்டும்.

நா: (அழுத்தமாக) ஆம்; கால தாமதம் செய்யாமல் கற்பிக்க வேண்டியதுதான். புகழ்படைத்தோன் பின்னர் அடையும் அபகீர்த்தி மரணத்திலும் கொடியது அல்லவா? ஆயிரம் அசுவமேத யாகம் செய்து அரிய இப்பதவியை அடைந்திருக்கிருய்; அற்ப மானிடன் ஒருவனுல் அபகீர்த்தி அடைவதா? என்ன!

தே: எதற்கும் ஆலோசனை செய்யவேண்டுமல்லவா?

நா. ஆலோசனை அப்புறம் செய்யலாம். நாட்டிய

மாதர்கள் நால்வரையும் முதலில் அவனிடம் அனுப்பி தீர்ப்பு அறிந்து வரச் சொல்லும். இதற்கே திண்டாடு வான் அதற்குள் உன் திட்டத்தைத் தயாரித்துக் கொள்.

45

(தனக்குள் காரியம் கைகூடி விட்டது. கலகம் உலகம் உள்ள வரையில் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் என் தலை ஆயிரம் சுக்காய் போய்விடுமே இதற்கு நான் என்ன செய்வது? என்றெண்ணியவனாய்) நல்லது; நீ உன் திட்டத்தை நிறைவேற்று தேவேந்திரா! நான் போய் வருகிறேன்.

நாரதர் மறைந்தார். நடன மாதர்கள் நால்வரும் தேவேந்திரன் முன் வந்தனர்.

தே: ஏன் நாரதரைக் கண்டதும் மறைந்து விட்டீர்கள்? பிறவியிலேயே துறவி அல்லவா?

அரம்பை: இருக்கலாம்; உலகம் சுற்றும் கலகப் பிரியனைக் காணாமலிருப்பதே நல்லது.

தே: ஏன்?

மேனகை: கண்ணனிடமே ஒரு பெண்ணை விரும்பிக் கேட்டு அவன் மானங்கெட்ட சம்பவத்தை முற்றும் மறந்து விட்டீர்களா? மும்மூர்த்திகளும் அவன் வார்த்தையைக் கேட்டு அம்முனி பத்தினியிடம் போய் மூக்கறுந்த கதையைக் கேட்டறியீரா?

ஊர்வசி: ஏன் கலகப் பிரியனைக் காணவேண்டும்? பிறகு அவன் சுழலில் சிக்கி வாடவேண்டும்?

தே: உண்மைதான்; இருந்தாலும் என்னைப் பொருத்த வரையில் அப்படியில்லை, என் மானங் கெடுவதை அவன் மனம் விரும்பவில்லை என்பதை நான் நன்கு அறிவேன்.

திலோத்தமை: என்ன அப்படிச்சொல்லுகிறீர்கள்?

தே: ஆம்; உங்கள் நடனப் போட்டி நிறைவேறு வதற்குள் நாரதர் வந்தது எவ்வளவோ நல்லதாய் விட்டது தெரியுமா? கேவலம் ஒரு மானிடன் தேவர்களையே இழிவாய் எண்ணிவிட்டான்; ஒரு நூலும் எழுதிவிட்டான். இது உங்களுக்குச் சம்மதமா?



(நால்வரும் ஒருவர் முகம் ஒருவர் பார்த்து மௌன மாயினர்.)

தே: அவன் கொட்டம் அடங்கவேண்டும். என் திட்டம் தடையின்றி நிறைவேற வேண்டும். உடனே நால்வரும் அந்த வள்ளுவனிடம் செல்லுங்கள். நால்வரில் நடனத்தில் சிறந்தது யார் என்று கூறச் சொல்லுங்கள். விழிப்பான்; திணறுவான்! திண்டாடுவான்; இனி இழிவாக தேவர்களை எண்ணுதே! எழுதாதே! என்று எச்சரிக்கை செய்யுங்கள். அதற்குள் நான் வந்து விடுகிறேன். பிறகு பாருங்களே அவன் படும் பாட்டை.

அ: (வியப்புடன்) ஒரு மானிடனு எங்கள் மதிப்பை அறிவான்? தீர்ப்பு கூறுவான்?

தே: (அழுத்தமாக) இல்லை. அது முடியாத காரியம். முதலில் மாதர்களிடமே அவன் மதிப்பிழந்து விழிக்கச் செய்ய வேண்டும்; பிறகே பழிவாங்க வேண்டும் பதறுதீர்கள்; பின் வாங்கவேண்டாம் நான் வந்து அவன் மானத்தைக் கெடுக்கிறேன்; மாதர்களே! மனங்கோணுது செல்லுங்கள்.

# 11. மாதவி மாண்பு

தன் கோத்திரத்துக்கு ஏற்ப நடன கலையில் தேர்ச்சி பெற்றாள்; அரங்கேற்றுவதற்குமுன் ஆலயம் தீர்த்தம்; பெரியோர் தரிசனம் விரும்பி பரிவாரங்களுடன் யாத்திரைப் பட்டாள் காவிரிப்பூம்பட்டணத்து பொது மகள் சித்திராவதியின் புத்திரி மாதவி.

முறையாக யாத்திரை வந்த மாதவி மைலாப்பூரில் தங்கினாள். தமிழ் அறிஞர் ஒருவர் வாழ்வதாகக் கேள்விப் பட்டாள். அவரைக் காண விரும்பி கனிவர்க்கங்களுடன் தனி ஒரு சேடி தொடர சென்றாள்.

மாலை வேளை. மந்தமாருதம் வீசுகிறது. முன்வாசல்; பந்தல்அடி; பலகைமேல் அமர்ந்திருக்கிறார் திருவள்ளுவர். பந்தல் மேல் படர்ந்துள்ள முல்லை மலர்கள் மொக்கு விரிந்தன. அதன் மணம் அதன் அடியில் அமர்ந்திருப்பவர்க்குமட்டுமல்ல; அவ்வழி செல்வோர்க்கெல்லாம் வலிய சென்று களிப்பூட்டியவண்ணமாய் இருக்கிறது. அவர்கள் வீட்டுக்கு மூன்று கதவு உண்டு. அம்மூன்று கதவுகளும் ஒரே நேராக அமைக்கப்பட்டிருந்தன. அதனால், முன் வாசலில் இருந்து பார்த்தால் பின் வாசலில் இருப்பவர்களை பார்க்கலாம்.

பின் வாசலில் வாசுகி நின்றுக் கொண்டிருந்தார். மாதவி தன் சேடியுடன் சென்று முன் வாசுகியை வணங்கி நின்றாள். தன் வரலாற்றை கூறினாள்.

அதைச் செவி ஏற்ற வாசுகியார் யோசனையில் ஆழ்ந்தார்.

மாதவி பின் சென்ற சேடி பின் வாசலிலிருந்தபடியே முன் வாசலை நோக்கினாள். பந்தல் மேல் மலர்ந்திருந்த

முல்லை மலர்கள் அவள் மனத்தைக் கொள்ளை கொண்டன.



வாசுகியின் கூந்தலை நோக்கினாள். மலர் என்பதையே அறியாத கரிய கூந்தலாய் முடிந்திருப்பதைக் கண்டாள். அவள் வெள்ளை உள்ளம் சும்மாயிருக்க விடவில்லை; வினவி அறிய விரும்பியது.

"அம்மா" என்றாள். வாசுகி நிலை கலைந்து "என்ன வேண்டும்" என்றார்.

சேடி: முல்லை மலர்கள் கொள்ளையாக பூத்திருக்கின்றன.

வாசுகி: ஆம்; வேண்டுமா?

சே: இல்லை அம்மா; அணியாது இருக்கிறீர்களே! வீணாகத்தானே போகும்.

வா: நீ நினைப்பது அப்படி; நான் நினைப்பதைச் சொல்லுகிறேன் கேள்:—

மலர் மற்றவர்களைப் போலவே அதன் இனத்தோடிருப்பதுதான் நல்லது. அதைப் பறித்து அணிவதால் அது குறித்த ஒருவருக்குத்தான் உபயோகப்படும். அதோடு மட்டுமல்ல; பறித்த சில நாழிகைக்குள் மலர்கள் வருத்தப்படுவதுபோல வாடி வதங்கி விடுகின்றன. இதை நினைத்தால் போதும் மலரைப் பறிக்கும் எண்ணமே மறைந்து விடுகிறது.

செடியிலேயே மலர் இருந்தால் சீக்கிரம் வாடுவதில்லை; வருந்துவதும் கிடையாது. பார்வைக்கும் இரம்மியமாயிருக்கிறது. உடையவர்களுக்கு மட்டுமா? அல்ல. அதை உற்று நோக்குபவர்களுக்கெல்லாம் அல்லவா?

வாசல் வழியே செல்லுவோர் மலர் மணத்தால் களிப் படைந்து எவ்வளவு மகிழ்ச்சியுடன் செல்கிறார்கள் என்பதை உண்மையாகவே உணர்ந்த மனம் மலர் கொய்ய இணங்குமா ? கன்னியே ! எண்ணிப்பார் !

சுயநலத்துக்காக பரநலத்தைப் பாழ்படுத்துவதா ? உள்ளவர்கள் எவ்வளவோ நல்ல காரியங்களைச் செய்கி



றார்கள். இல்லாதவர்கள் இயற்கையிலிருப்பதையாவது பிறருக்குப் பயன்படும்படி செய்யவேண்டுமல்லவா ? அதனால் தான் நான் மட்டுமல்ல; பிறரையும் மலர் பறிக்க விடுவதில்லை.

கே : உண்மைதான். நான் நேற்று அவ்வழியே சென்றேன். அப்பொழுது வழிப்பெண் ஒருவள் மலர் கொய்தாள். அதைக் கண்டதும் தாங்கள் கண்டித்ததும் கண்டேன்.

வா : பிறர் பொருளை கேளாமல் தீண்டுவது எவ்வளவு கெட்ட பழக்கம் தெரியுமா ? அதை வளரவிடக் கூடாது. அரும்பிலேயே போக்கவேண்டும். காணும் பொழுதே கண்டித்துவிட வேண்டும். நம் போன்றவர் களே நற்பழக்கத்துக்கு பிற்பட்டால் வழிகாட்டா விட்டால்—

சே : தாங்கள் நினைப்பது அப்படி ; ஆனால் அப் பெண் அதை அறிந்துக்கொள்ளவில்லை. தானும் அணிவ தில்லை ; பிறரையும் பறித்து அணிய விடுவதில்லை; தேன் குழவி என உம்மை திட்டிக்கொண்டே போனாள்.

வா : தீயோர் திருந்தார்; திட்டத்தான் செய்வர். அதற்காக நல்லார் தம் திட்டத்தை விட்டு விடுவரோ ;

அன்றி அத்தீயோர் எண்ணத்துக்கு இரையாவரோ ?

" மாதவி குறுக்கிட்டாள்; தன் சேடியை நோக்கி: அது முடியாத காரியம்" என்றாள்.

வாசுகியை நோக்கி :— தன்னலமற்ற தாயே! தாங்கள் நினைப்பதே தர்மம்; நினைப்பதே நியாயம். பாவிகள் பலதும் பேசுவர். புண்ணியர் அதைப்பற்றி எண்ணார்; தம் வினையிலே முனைந்திருப்பர்.

சிறிது நேரம் மௌனம்.

மா : (வாசுகியை மீண்டும் நோக்கி) அம்மா ; ஐயாவிடம் என்னை அறிமுகப்படுத்தி வையுங்கள். காவிரிப்பூம்



பட்டணத்தைச் சேர்ந்த ஆடல்மகள் சித்திராவதியின் புத்திரி யான். நாட்டியக் கலையின் தேர்ச்சி முடிந்தது. நாட்டிலுள்ள நல்லோர் ஆசி பெறுவதற்காகவே யாத்திரை வந்திருக்கிறேன். யாத்திரை முடிந்ததும் போய் அரங்கேற்று விழாவை ஆரம்பிக்க எண்ணி இருக்கிறேன். ஆதலின் தாமதம் செய்யாது தாயே ; ஐயாவிடம் அறிமுகப்படுத்தி வையுங்கள்.

வா : (மலர்ந்த முகத்துடன்) மார்க்கம் உணர்ந்த மாதவி! யார்க்கும் இல்லாத பண்பு உன்னிடம் இருக்கிறது.

மா : அது என்ன அம்மா ?

வா : அறிமுகமில்லாத ஆணுடன் பெண் பேச நேரும்போது ஆணுக்குரிய பெண் மூலமாகவோ; அல்லது தனக்குரிய பெரியோர்கள் மூலமாகவோ அறிமுகமாவது தான் அறிவோர்க்கழகு ; பெண்ணுக்குரிய தர்மமுமாகும்.

மா : (முன்வாயிலே சுட்டியபடி) அதோ! ஐயாமுன் நால்வர் வந்து நிற்கின்றனரே ; அவர்கள் யார் அம்மா ?

வா : (பார்த்துவிட்டு) புதுமையா யிருக்கிறது ; யாரென்று தெரியவில்லை. பண்பறியா பெண்கள்; தர்மம் தெரியார்; தான் தோன்றித் தனமாக அவர்முன் சென்றிருக்கின்றனர். இருக்கட்டும் வாருங்கள் அறிமுகப்படுத்தி வைக்கிறேன். முதலில் அக்கும்பத்தின் நீரில் அலம்பிக் கொள்ளுங்கள்.

வள்ளுவர் முன்னே வாடையுடன் தேவப் பெண்கள் நால்வர் வந்து நிற்கின்றனர்.

வள்ளுவர் : என்ன! அந்தரத்தில் நிற்கிறீர்களே இந்திரலோகப் பெண்களா ?

அரம்பை : ஆம்.

வ : வந்த காரியம் என்ன ?



அ : நால்வரில் நடனத்தில் சிறந்தவள் யார் என்று அறிந்து போகவே வந்தோம்.

இதற்குள் மாதவி கைகால் முகம் கழுவிக் கொண்டாள். தூய்மையுடன் கனிவர்க்கங்களை தட்டத்தில் ஏந்திய வண்ணம் வாசுகியின் பின் மாதவி சேடி பின் வர சென்று வள்ளுவர் திருவடிமுன் பழத்தட்டை வைத்து விட்டு வணங்கி நின்றாள்.

வாசுகி அறிமுகப்படுத்தினார்.

மாதவி சொல்லுகிறாள் கூப்பிய கைகளுடன் :

ஆடல்மகளாய் அவனியில் தோன்றி
அருங்கலை நடனத்தில் முற்றுப்பெற்று
பாடல்வகையில் பயிற்சியும் பெற்றேன்

பார்மிசை யாத்திரைப் பட்டேன்
மேடையில் ஆடுமுன்னர்; மேன்மக்கள்
தரிசனம்; தீர்த்தம்; தெய்வம்
நாடினன் ஐயா! நாயினுங்கடையள்
நற்றவ உருவே கருணைசெய்.

தேவ மாதர்கள் நால்வரும் திகைப்புடன் மாதவியை உற்று நோக்கினர். அவர்களுள் அரம்பை

ஆச்சரியமுடன்: என்ன! அருங்கலை நடனத்தில் முற்றுப் பெற்றாயா?

மாதவி: அதோடு மட்டுமல்ல; பாடல் வகையிலும் பயிற்சி பெற்றிருக்கிறேன்.

ஊர்வசி: அப்படியா?

திலோத்தமை: சிறு பிள்ளைத்தனமாக உளறுதே!

மாதவி: வரட்டு வாதம் வேண்டாம்.

மேனகை: அப்படியாயின் ஐவரும் ஆடுவோம்.

மா: சரி.

அரம்பை: (திருவள்ளுவரைச் சுட்டி) இவரே நடுவராயிருக்கட்டும்; தீர்ப்பு கூறட்டும்,



வள்ளுவர்: நாளை காலை ஏழு நாழிகைக்கு ஐவரும் வந்து சேருங்கள்; ஆடுங்கள். அவரவர்களே தீர்ப்பைக் கண்டறியுங்கள்.

மறுநாள் காலை திருவள்ளுவர் சொல்லியபடியே ஐவரும் வந்து சேர்ந்தனர்.

அவர்கள் வருவதற்கு முன்னரே ஒரே விதமாக ஐந்து பூச்செண்டு தயார் செய்து வைத்திருந்தார் வள்ளுவர். அவர்கள் ஐவரையும் நோக்கி வள்ளுவர் சொல்லுகிறார்:—

"பெண்மை மென்மையானது; அதன் தன்மைக் கேற்ப தாளம் தவறாது இராக வரிசையுடன் ஆட வேண்டும். அடியோ; அபிநயமோ; இராகமோ தவறினால் தாமே அரங்கத்தை நீங்கி நிற்க வேண்டியதுதான். வேறொருவர் சொல்ல வேண்டியதில்லை. ஏன்? மற்றவர் சொல்வதால் மன வருத்தம் ஏற்படும்; தன்னெஞ்சே உரைப்பதால் உண்மை உணரப்படும். தமக்குத் தாமே நடுவராய் இருந்துவிட்டால் கெடுதல் இல்லை அல்லவா?"

(பூச்செண்டை சுட்டியபடி) அப் பூச்செண்டில் ஆளுக்கொன்று எடுத்துக் கொள்ளுங்கள். மலர் நலம் கெடாது மென்மையுடன் ஆட வேண்டும். சரி; போட்டி ஆரம்பமாகட்டும்."

ஐவரும் ஆளுக்கொரு பூச்செண்டை கையில் பிடித்த வண்ணம் நடிக்க ஆரம்பித்தனர்.

இரு லோக நடனமும் கண்டு களிப்பாரின்றி கானல் நீர் போல கணத்துக்குக் கணம் மாற்றமடைகிறது. ஒருவர்முன் நடக்கிறது என்றாலும் அவ்வொருவரும் கண்டு களிப்பவராகவோ, நடுவராகவோ இல்லை. உள்ளொளி கண்டு உலக ஒளியுடன் ஒன்றுபட்டிருக்கிறார். அதனால் இரண்டென்பது இப்பொழுது அவருக்கில்லை. எனவே அவர் காண்பதும் கேட்பதும் ஊனுடல் கடந்த உத்தமப் பொருளாகும்.



நாட்டியம் ஆடுபவர்களே நடுவர்களாம். இதுவரையில் இத்தகையதைக் கேட்டதும் இல்லை; கண்டதும் இல்லை. என்ன விந்தை? வள்ளுவர் வாய்மொழி செல்லுமா? சீர் அழியுமா?

நடனம் இரு நடனமாகவே இருக்கிறது. நாழிகை கழிவதும் தெரியவில்லை. நடன கலைகள் ஒன்றன்பின் ஒன்றாக அவர்கள் மூலம் வெளிப்பட விரும்பி விட்டன போலும். தடையில்லை; தாளம் தவறவில்லை; அடி பிசக வில்லை; அபிநயம் வெகு அழகாய் அமைந்திருக்கிறது.

முதல் முகூர்த்தம் ($1\frac{1}{2}$ மணி) முடிந்தது. ஏனோ மேனகை முனகி நின்றாள். அதன்பின் அரை நாழிகை கழிந்தது; அரம்பை ஆணவம் குன்ற நின்றாள். கால் நாழிகைதான் கழிந்தது; வேல் விழியாள் ஊர்வசி கால் தவறி நின்றாள். சிறிது நேரம் சென்றது; மைவிழியாள் திலோத்தமை கை பிசகி விட்டாள்.

மண்மகள் மாதவியோ யாதுமின்றி பெண்மையின் மென்மையில் பிசகாது மலரோடு மலராய் விளங்கினாள். கலையாது கை செண்டு குலையாது விளையாடினாள்; நடன கலைகள் யாவும் விளையாடினாள். முடிவாக வள்ளுவர் அடி பணிந்து நிலை நாடினாள்.

தேவ மாதர்கள் நால்வரும் தற்பெருமை யற்றனர்; திகைப்புற்றனர். பூலோக பெண்ணிடம் மேலோக மாதர்கள் தாழ்வடைந்தது; தோல்வி அடைந்ததைக் கேள்விப்பட்டால் தேவேந்திரன் என்ன எண்ணுவான்; தேவர்கள் என்ன சொல்லுவார்கள் என்ற வருத்தத் துடன் மாதவியை நோக்கினர்.

மாதவி இருகரங்கூப்பியபடி :— தேவ தாசிகளே! ஆசீர்வதியுங்கள்.

நால்வரும் தம் வலது கை தூக்கி சைகை செய்த வண்ணம் :—" மாதவியே நடன திலகம்."

# 12. தேவிகள்

நடன மாதர்கள் நால்வரும் நாணம் மேலிட்டவர்களாய் தேவேந்திரன் முன் கலங்கிய கண்களுடன் வந்து நின்றனர். அவர்கள் நிலையைக் கண்டதும் தேவேந்திரனுக்கு கோபம் பொங்கி எழுந்தது.

தே: உங்களையும் அவமானப் படுத்தி விட்டானா?

அரம்பை: இல்லை; அவர் அத்தகையவர் அல்ல.

தே: பின் ஏன் கலங்கி நிற்கிறீர்கள்?

ஊர்வசி: பூலோக பெண் வெற்றி பெற்றாள்.

தே: என்ன!

திலோத்தமை: நடனத்தில்.

தே: உன்னைத் தானே?

தி: எங்கள் நால்வரையுந்தான்.

தே: (வியப்புடன்) என்ன! ஒரு பூலோக பெண் மேல்லோக மாதர்கள் நால்வரையுமே வென்று விட்டாளா?

மேனகை: (மெதுவாக) ஆம்.

தே: நான் நம்புவது எப்படி?

அ: தங்களிடம் பொய்த்தபின் நாங்கள் உய்வது எங்கே?

தே: (இறுமாப்புடன்) அப்படியா? நடனத்துக்கும் பெண்ணைப் பழக்கப் படுத்தி வைத்திருக்கானா? இருக்கட்டும்.

ஸ்ரீதேவி மூதேவிகாள் சீக்கிரம் வாருங்கள்.

**55**

அக்காளும் தங்கையும் அமைதியுடன் வந்து கை குவித்தபடியே, "தேவர் தலைவா! வணக்கம்."

தே: வள்ளுவன் என்றொரு மானிடனும்—அவன்
வல்லமை அறிந்து வாரீரோ?
தொல்லை கொடுக்கும் மூதேவி!
நல்லது செய்யும் சீதேவி! (வள்ளு)
அல்லல் கொடுக்கிறான் பாரீர்!—அவன்
சொல்லில் இகழ்கிறான் கேளீர்!
தேவர்கள் அனைவரும் சுபவர்களாம்—அவன்
தேர்ந்து அளித்ததே இருக்குறளாம். (வள்ளு)
கூர்ந்த அறிவினன் ஆதலால்
குறும்புகள் செய்யவும் வேண்டாம்
ஓர்ந்துரை எங்கள் அறமை
உள்ளவா றென்றே வினவும். (வள்ளு)

தேவிகள் அவ்விடம் விட்டு அகன்றனர்.

*   *   *

காசி அடைந்தான் யாத்திரை வாசி. கர்மங்களை முடித்துக் கொண்டான். மணிகர்ணிகையில் முன்னோர்க்கு பிண்டோதகம் அளித்தான். கொண்டு சென்றவைகளை தானம் செய்தான். காசி விஸ்வநாதரை வணங்கினான். கையில் கட்டும் கறுப்பு காசி கயிறும் நிறைய வாங்கினான். கங்காதீர்த்தமும் எடுத்துக் கொண்டான். கரை ஏறும் சமயம் அவன் வலதுகால் தடைபட்டது. நிதானித்து நின்றான். பயணத்தின் ஆரம்பத்

திலிருந்து நினைந்து பார்த்தான். எல்லாவற்றையும் இறக்கி வைத்தான்.

வள்ளுவர் அளித்த காசு அவன் கவனத்துக்கு வந்தது. தேடினான். அது அவன் மூட்டையிலிருந்த துணியின் மூலையில் முடிந்திருப்பதைக் கண்டான். அவிழ்த்து எடுத்தான்.

56

அதை யாருக்குக் கொடுப்பது என்ற எண்ணம் எழுந்தது. ஏன்? அவன் பரம்பரையே தெரியாது. பார்ப்பனனே அவனுக்குப் பெண்ணையும் கொடுத்து விட்டான். வேறு வழி இல்லை. என்ன செய்யலாம்? "நீசன் காசு" என்றவாறு அதை வீசி கங்கையில் எறிந்தான்.

என்ன ஆச்சரியம்! அதுவரையில் அவன் வாழ்வில் என்றும் பார்த்தறியாத தெய்வீக பெண்ணுருவம் அக் கங்கை நீரினின்றும் புன்முறுவலுடன் எழுந்தது. அக் காசை இரு கைகளாலும் ஏந்தி சிரமேல் வைத்தது; கண்களில் ஒத்திக் கொண்டது. கையில் பிடித்தபடியாய் வந்த வழியே மறைந்தது.

அதைக் கண்ட பார்ப்பான் கலங்கினான்; கண்ணீர் வடித்தான்; கம்பம் போல் அசைவற நின்றான். சிறிது நேரம் சென்றது; அவன் சித்தம் அசைந்தது. மனம் மாறியது; பழைய எண்ணமே எழுந்தது.

குலம் கோத்திரம் தெரியாதவன். குட்டி சாத்தி வேலையில் எல்லாரையும் மிஞ்சி விட்டான். திரும்பி நடந்தான். தன் மூட்டைகளை எடுத்துக்கொண்டு வீட்டை நோக்கி நடக்கிறான்.

*　　　*　　　*

கூவம் நதியில் குளித்தார்; அருகிலிருந்த குளிர்ந்த

மர நிழலில் அமர்ந்தார்; கண் விழி மூடியது; கனத்த இருள் கழிந்தது; உள்ளொளி ஓங்கியது; அதில் வள்ளுவர் உள்ளம் ஒன்றுபட்டிருக்கிறது.

அடக்கமே வடிவமாய் அக்காளும் தங்கையும் வள்ளுவர் முன் வந்து நிற்கின்றனர்.

அக்காள்: (மெதுவாக) அவர் நிட்டை கலைந்தால் நம் நிலை என்னவாகுமோ?

தங்கை: (மெதுவாய்) நம் குட்டு வெளிப்படும்.

அ: (நம்பிக்கை யற்ற நிலையில்) அவர் என்னை வெறுக்கலாம்.



த: (நம்பிக்கையுடன்) விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் அவர் இருக்கிறார்.

அ: (இளமையபடி) என்னை வெறுக்காதவர்களும் இருக்கிறார்களா?

த: (உறுதியுடன்) தன்னை அறிந்தவர்களுக்கு உன்னைப் பற்றிய எண்ணமே இல்லை.

உள்ளம் அசைந்தது; உடல் விறுத்தது; கண் விழி திறந்தது; வள்ளுவர் நினைவு பெற்றார். கண் முன் கனக சிலைபோல நிற்கும் பெண்களைக் கண்டார். தேவதைகளை ஒக்கும் இப் பெண்கள் தன்னைத் தேடி வந்திருப்பது தேவர்களின் சூழ்ச்சியே என்று உணர்ந்தார்.

வள்ளுவர்: (அமைதியாக) சகோதரிகளே!

உடனே இருவரும் அவர் அருகில் வந்து நின்றனர்.

வ: நீங்கள் யார்? வந்த காரியம் என்ன?

அக்காள்:

"குறிப்பில் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்

என்ன பயத்தவோ கண்"
என்று தாங்களே எழுதிவிட்டு எங்களைக் கேட்பது ஏனோ?

வ: (சற்று நிதானித்து) சரி; இரட்டைப் பிறவி போலிருக்கும் உங்களில் மூத்தவள் யார்?

அ: நான்தான் மூத்தவள்.

வ: (அவள் முகத்தை உற்று நோக்கிவிட்டு இளையவளையும் பார்த்தார்) மூத்தவள் மூதேவி; சிறியவள் சீதேவி.

(இருவரும் வெட்கித் தலை குனிந்தனர்.)

மூ: (சிறிது நேரங் கழித்து) உண்மை தான். எங்கள் இருவரில் யார் அழகி என்று தாங்கள் தீர்ப்பு கூற வேண்டும்.

58

வ: அப்படியா? சரி. அந்த அருவியில் இருவரும் போய் முகம் அலம்பி வாருங்கள்.

(இருவரும் அவ்விதமே போய் முகம் அலம்பி வந்தனர்.)

வ: மூதேவி போகும்போது அழகு; சீதேவி வரும் போது அழகு.

ஒரு உருவமே இரு உடலாய் அமைந்தது போலிருந்த அவ் விருவரும் வாய் பேச வழியில்லாது வந்த வழியே திரும்பினர்.

மூதேவி சீதேவிகளின் மொழியைக் கேட்டு தேவேந்திரன் திடுக்குற்றான். மேல் கொண்டு என்ன செய்வது என்று ஆலோசனை செய்துக் கொண்டிருக்கிறான்.

*　　　*　　　*

காசி போனவன் வீடு வந்து சேர்ந்தான். கங்கா தீர்த்தம் எல்லாருக்கும் கொடுத்தான். வள்ளுவருக்கு மட்டும் வழங்கவில்லை. அவர் தாழ்ந்து கேட்டும் தரவில்லை.

பார்ப்பனன் : இவர்கள் கொடுத்தவைகளை எல்லாம் என்னைப் போன்ற மனிதர்களே ஏற்றுக்கொண்டார்கள். அதனால் அவர்களுக்கெல்லாம் நான் தீர்த்தம் கொண்டு வந்து கொடுக்கக் கடமைப்பட்டவனானேன். ஆனால் உன்னால் கொடுக்கப்பட்ட காசையோ கங்காதேவியே ஏற்கும்படி செய்த மாயவித்தைக்காரன் நீ. ஆதலின் அவளிடமிருந்தே தீர்த்தமும் நீ பெற்றுக் கொள். நான் உனக்குக் கொடுக்கக் கூடாது; கொடுக்கவும் முடியாது.

வள்ளுவர் : ஐயா ! அது ஈசன் செயல்.

பா : இது மட்டும் மனிதன் செயலா ? நான் சூத்திரம்; அவன் சூத்திரதாரி.

வ : இருக்கலாம் ; ஆனால்—

பா : அவன்—

வ : (கரங் கூப்பிய வண்ணம்)



கருணைவாரி ! தருணமீதே !
சங்கைதீர—கங்கை ஈவாயே !
மங்கை பாகா திங்கள் சூடா
கங்கை கொண்டாயே ! (கருணை)
பொங்கும் மங்கலம் திங்களொளி போலஉல
கெங்கும் உன்றன் அருளாலே !—எங்கும்
புனித நாமம் கொண்டார்—நாவில்
பொய்யும் பிறந்த துண்டோ ? (கருணை)
சாதி மானிடன் சமய வாதியென

ஓதிக் கொண்டே மீறி விட்டானே!
நீதியை மீறி விட்டானே!
காசி அடைந்தும் கருமம் கழியாது
ஊசி கெட்டானே!—நாச மனதால்
மோசம் போனானே! (கருணை)

வெண் மேகம் வானத்தில் படர்ந்தது. மண்மேல் நிழல் படிந்தது. சூரியன் கதிர்கள் காணப்படவில்லை. இதன் நடுவே ஒப்பற்ற ஒளி வீசியது. வெள்ளையான காளை வாகனம் அதன் நடுவில் விளங்கியது. அதன் மேல் சந்திரசேகரன் சுந்தரியுடன் சடைமுடியில் கங்கை வடிய விளங்கினான்.

வள்ளுவர் வணங்கினார்; இரு கைகளாலும் கங்கையை ஏற்று பருகினார்; தலைமேலும் தெளித்துக் கொண்டார். அதைப் போலவே வாசுகியும் செய்தார். அங்கிருந்தவர்களும் அவ்வாறே செய்தனர். சீடன் அங்கில்லாததை உணர்ந்தார்; உடனே வருமாறு கூப்பிட்டார்.

"துணி உலர வைத்து விட்டு வருகிறேன்" என்றான் சீடன்.

காட்சி மறைந்தது. கண்ட பார்ப்பான் வள்ளுவர் முன் விழுந்து வணங்கி எழுந்தான். மன்னிப்பு வேண்டி நின்றான். இப்பொழுது தான் சீடன் வந்தான்.

## 13. தேவேந்திரன்

இந்திர லோகம். வருண தேவன் வந்தான்; வணங்கினான்.

வருணன்: தேவர் தலைவா! என்னை அழைத்த காரணம் என்ன?

தேவேந்திரன்: (பரிவுடன்) வருண தேவா! வா; அருகில் வா.

(வருணன் வந்து தேவேந்திரன் பக்கத்தில் நின்றான்)

தே: (மெதுவாக) வள்ளுவன் என்றொரு மானிடன் வாழ்கிறான் தெரியுமா?

வ: ஆம்; சேர நாட்டுக்கு வடக்கே வாழ்கிறான்.

தே: அவன் சோர்வடைய வேண்டும்; நீரின்றி அவன் வசிக்கும் ஊர் தவிக்க வேண்டும்.

வ: இவ்வநீதி எதற்கு?

தே: அவன் தேவர்களையும் என்னையும் தான் இயற்றிய நூலில் இகழ்ந்திருக்கிறான் என்ன அகம்பாவம் பார்!

வ: உண்மைக்கு மாறாக ஒருநாளும் சொல்லாதவராச்சே! ஆணவத்தை அறிந்தவர்; அடக்கமே உருவாய் திருவருளுக்குப் பாத்திரமானவர் அல்லவா வள்ளுவர்? அவர் இருக்கும் இடமா தண்ணீரின்றி தவிக்க வேண்டும்?

தே: ஆம்; நீ சொல்வதெல்லாம் உண்மையாக இருக்கலாம். ஆனால் உன் நிலையை எண்ணிப்பார்! என் ஏவல்படி நடக்கவேண்டியவன் அல்லவா நீ?

வ: சந்தேகம் இல்லை. இருந்தாலும்:

(1) "வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும்
தகைமாண்ட தக்கார் செறின்?" [என்னஆம்



தே: நீ தான் சொல் பார்க்கலாம்.

வ: (2)

"ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்."

தே: நான் அஸ்வமேத யாகம் ஆயிரம் செய்து இப் பதவியைப் பெற்றவன் என்பதை முற்றும் மறந்து விட்டாயா?

வ: இல்லை; நான் மறக்கவில்லை.

தே: பின் ஏன் பிதற்றுகிறாய்? யாக பலன் முடியும் வரையில் நான் இப்போக பூமியிலிருப்பேன் அல்லவா?

வ: இல்லை; அது தான் சொல்வதற்றில்லை.

தே: (திகைப்பும் கோபமும் முகத்தில் தோன்ற) என்ன?

வ: (3)

"இறந்துஅமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
(இறந்து அமைந்த—அளவிலடங்காத)
சிறந்து அமைந்த சீரார் செறின்."

தே: எனக்கு இதில் நம்பிக்கை இல்லை.

வ: (ஆச்சரியமுடன்) நம்பிக்கை இல்லையா?

தே: (ஆணவத்துடன்) ஆம்.

வ: கோர தபசு செய்தான்; மூன்றரை கோடி வருஷம் ஆயுளையும் பெற்றான். ஆனால் அரைகோடியாவது இருந்தானா? வாழ்ந்தானா? இராவணனையே எண்ணிப் பாரும்.

தே: (வினயமுடன்) என் மமதை மறைந்தது, ஆணவம் அகன்றது; ஆயினும் மனம் குளிரவில்லையே.

வ: உள்ளதைச் சொன்னால் யாருக்கும் உடம்பெரிச்சல் தானே?

தே: (தன்னம்பிக்கையுடன் வெற்றி மனப்பான்மையில்) ஒன்று சொல்லுகிறேன் கேள். வள்ளுவர் மனைவி வாசுகி மகா பதிவிரதையாம். அதையாவது நீ சோதித்து வரலாமல்லவா?

வ: தங்கள் மனைவியின் பேச்சைக் கேட்டு சதி அனுசூயாவை சோதிக்கப் போன பிரம்மா; விஷ்ணு; ருத்திரர் பட்டபாட்டை நீர் கேள்வியாவது படவில்லையா?

தே: அந்த அளவுக்கு நீ போகவேண்டாம். மழை பெய்யாமலிருந்தால் போதும்.

வ: (4)

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."

தே: அதையாவது அறிந்து வா பார்க்கலாம்.

வ: காந்த மலையை நெருங்கிய இரும்புகள் தம் நிலை இழப்பதுபோல கற்பரசியை நாடுபவை எல்லாம் அற்பமாகிவிடும். இதில் சந்தேகம் வேண்டாம்.

தே: என்ன! எதற்கும் இணங்க மாட்டாய் போலிருக்கிறதே!

வ: அடிபட்டு நொந்து வந்தவன் மீண்டும் போய் தொடை தட்டுவானா?

தே: (ஆச்சரியத்துடன்) என்ன நடந்தது?

வ: மூதேவி சீதேவி முறியடிக்கப்பட்டு வந்தனர். வழியிலேயே அவர்களை சந்தித்தேன்; பின் நானே சென்றேன்; சாமர்த்தியத்தைக் காட்டினேன்; பலிக்கவில்லை; தோல்வியடைந்தேன். பலம் குன்றி வந்தேன். ஆனால் பல உண்மைகளை உணர்ந்தேன்.

*　　　　　　*　　　　　　*

தேவேந்திரன் வைகுண்டம் போனான். அங்கு வாயில் காப்பவர்களை அணுகினான்.

63

தே: துவார பாலர்களே! என் வரவை வைகுண்ட வாசனுக்குத் தெரிவியுங்கள்.

து: தேவர் தலைவா! சற்று இரும்.

தே: (திகைப்புடன்) என்ன!

து: ஆதிநாராயணன் யாது சேதியோ வெளியே போயிருக்கிறார்.

தே: (நிலை கொள்ள முடியவில்லை) சரி; நான் வந்து போனதாக வைகுண்ட வாசன் வந்ததும் சொல்லுங்கள்; நான் போய் வருகிறேன்.

*　　　　　　*　　　　　　*

தேவேந்திரன் நான்முகனை நினைந்தான்! பிரம்ம லோகம் போனான்; வாயில் காப்பவர்களைக் கண்டான்.

தே: துவார பாலர்களே! நான் வந்திருப்பதாய் பிரம்மாவிடம் போய் சொல்லுங்கள்.

து: தேவேந்திரா! பிரம்மாவும் விஷ்ணுவும் வெளியே போயிருக்கிறார்கள்.

தே: அவர்கள் போன இடம் தெரியுமா?

து: சொல்லவில்லை.

தே: நல்லது; நான் இங்கு வந்து போனதாய் அவர்கள் வந்தவுடன் சொல்லுங்கள். வருகிறேன்.

செல்லும் வழியில் தனக்குள் நினைக்கிறான்:

"இவ்வளவு தொல்லைக்கும் நானே சென்று அவ் வள்ளுவனைக் கண்டாலென்ன? ஆம்; அதுதான் நல்லது. அப்பொழுதுதான் நம் மகிமை அவனுக்குத் தெரியும். அரியும் அயனும் வேண்டாம். சரி. நானே இனி செல்வேன்."

# 14. அரி அயனும் வள்ளுவரும்

வள்ளுவர் தன் வீட்டு வெளித் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார். அவர் பக்கத்தில் நூல் நூற்கும் ராட்டையும் பஞ்சும் இருக்கின்றன. முதலில் பஞ்சை எடுத்து பக்குவப் படுத்துகிறார். அவர் முன் வாசலில் இருவரும் வந்து நிற்கின்றனர். பருவமும் உருவமும் ஒன்று போலிருக்கிறது. ஆனால் நிறத்தில்மட்டும் வேற்றுமை தோற்றுகிறது.

அவர்கள் பாதம் பூமியில் படியவில்லை. கண்ணிமையும் அசையவில்லை. அதனால் இவர்கள் தேவர்கள் என்பதை உணர்ந்து கொண்டார் வள்ளுவர். அவர்கள் முகத்தை உற்று நோக்கினார். கார்மேக வண்ணனும் கமலபதியும் என்பதை நன்கு உணர்ந்தார். அவர்களை அறிந்துகொண்டதாய் பாவனை செய்தாலோ மறுமொழியின்றி உடனே மறைந்து விடுவார்கள். அதனால் வந்த காரியம் குந்தகமாகும்; நமக்கும் தெரியாது போகும் என்று எண்ணினார். ஒன்றும் தெரியாதவர் போல் நடந்துக்கொண்டார். சிறிது நேரம் சென்றது, மேலும் சும்மாயிருப்பது சரியல்ல என்றெண்ணினார்.

வ: வந்து அமருங்களே!

இருவரும்: (ஒரு சொல்லாய்) நேரமில்லை; சீக்கிரம் செல்லவேண்டும்.

வ: அடியேனை நாடி ஐயன்மீர் வந்த காரணம் யாதோ?

இருவரும்: ஈசன் திருவடி தூக்கி ஊர்த்துவ தாண்டம் ஆடினார் அல்லவா?

வ: ஆம்; ஆடினார்.



இரு: அதன் காரணம் அறிந்து போக வந்தோம்.

(1) இழையொட்டி நூல்தொடுக்கும் ஏழை ஈசன்
குழையொட்டும் சூத்தறிய வல்லேனோ!—மேலை
தவத்தால் தரிசனமும் தந்தீர் அரியயனுமிப்
பவத்தால் பயனடைய வேண்டி.

(2) மாலயனும் அறியாத மர்மத்தை மேதினியில்
பாலன் அறிய வல்லானோ?—காலன்மார்
கண்டனால் கண்ணியதை எண்ணில் அந்தோ!
கண்டதார் உங்கள் சூதை?

திடுக்கிட்ட இருவரும் தம் தெய்வீக கோலத்துடன் விளங்கினர்.

இருவரும்: திரிகாலம் உணர்ந்தவனே! எதிர் காலத்துக்கு வேண்டியதைக் கேள்.

வ: திரிகாலம் உணர்ந்தவன் எதிர்காலத்துக்குக் கேட்க வேண்டியது என்ன இருக்கிறது? சொல்லுங்கள் கேட்கிறேன்.

இ: (வாதுக்கு வழியில்லாதது கண்டு) வள்ளுவன்

சொல் தொல் உலகம் உள்ள வரையில் இருக்கும்.

(இருவருமே மறைந்தனர்)

*　　　　*　　　　*

வழியில்.

தேவேந்திரன் (இருவர்களைக் கண்டதும்): ஆபத் சகாயா! ஆதிநாராயணா! கமலபதியே! என்னைக் கைவிட வேண்டாம்; காப்பாற்ற வேண்டும்.

அரி: அரக்கர்கள் இல்லையே! உனக்கு ஆபத்து ஏது?

தே: அப்படியா நினைக்கிறீர்கள்? <u>அரக்கரிலும் கொடிய மறத்தமிழன் ஒருவன் இருக்கிறான்.</u>

அரி: யார் அது?

தே: வள்ளுவன்.



அரி: அவன் சொல்லுவதெல்லாம் உண்மையாச்சே!

தே: இருக்கலாம்; இருந்தாலும் அவன் சொல்லில் என்னையும் தேவர்களையும் இழிவு படுத்துகிறானே!

அரி: அத்தகையவன் அல்லவோ!

அயன்: உத்தமனாச்சே!

தே: இல்லை.

அரி: சரி; அவன் சொன்ன சொல்லைத்தான் சொல் பார்க்கலாம்.

தே: தேவர்கள் அனைவரும் கயவர்களாம்' அவன் தேர்ந்து எழுதியதே திருக்குறளாம்; ஐந்தவித்தான் ஆற்றல் முன் நான் தோற்று விட்டேனாம்.

அரி. உண்மைதானே?

தே: இருக்கலாம்; நான் எப்படி இதை சகிப்பேன்? தேவர்கள் எப்படி பொறுப்பார்கள்?

அரி: சகிப்பும் பொறுமையும் சிறப்பான குணங்களாகும். அவைகள் இல்லாத காரணத்தால் அல்லவா தேவர்கள் துன்பப்படுகிறூர்கள்.

தே: உண்மைதான்.

அரி: அச்சக்தி உள்ளவர்களை தேவர்கள் என்ன செய்ய முடியும்?

அயன்:

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்."

அடக்கம் இல்லாததாலேயே அல்லல்படுகிறீர்கள்.

தே: (மனம் முறிந்த நிலையில்) வேறு வழி இல்லையா?

67

(தனக்குள்: என் பொருட்டு அன்று அவதரித்து அரக்கர் குலத்தையே அழித்த அரியே இன்று அற்ப மானிடன் ஒருவனுக்காக இவ்வளவு பரிந்து பேசுகிறூரே என்று எண்ணினுன். அதை அறிந்தான் அரி.)

அரி: தேவேந்திரா! நீ நினைப்பது தவறு.

(எதிரே வரும் தேரைச் சுட்டி) அதோ அத்தேரைப் பார்!

"உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்
கச்சாணி அன்ஞர் உடைத்து." [தேர்க்

நாடி வந்த தேரில் அரியும் அயனும் ஏறிக்கொண்டனர். தேர் மின் வேகத்தில் மறைந்தது.

# 15. இந்திரனும் வள்ளுவரும்

தன் கையே தனக்கு உதவி என்னும் தத்துவத்தை இன்று தான் முற்றும் உணர்ந்தேன். மற்றவர்களை எல்லாம் பற்றுக்கோடாகக் கொள்வது குற்றமேயாகும். ஆதலின் நானே செல்வேன்; வள்ளுவனை வெல்வேன் என்ற உறுதிக்கு வந்தான் தேவேந்திரன்.

அன்று நெய்த துணிகளை அந்தி அங்காடிக்கு எடுத்துக் கொண்டு போகிறார் வள்ளுவர். இடைவழியில் தன் உண்மை வேடத்துடன் அவர் முன் தோன்றினான் தேவேந்திரன். வள்ளுவர் அவனைப் பார்த்தும் பாராதவர்போல ஒதுங்கிப் போகிறார்.

தே: (வழி மறித்து) நான் யார் தெரியுமா?

வ: ஏன் தெரியாது? தேவர் தலைவன்; தேவேந்திரன் அல்லவா?

தே: என்னை அறிந்துங்கூட வணங்காது; பணியாது போகிறாயே இவ்வளவா உனக்கு?

வ: இந்திரா பெருக்கத்து வேண்டும் பணிதல்.

தே: அப்படியா?

வ: ஆம்; சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு.

தே: இது நீ சொல்வது தானே! வேதத்தில் இல்லையே!

வ: வேதத்தின் உட்பொருளே இதுதான். மந்த மதியோருக்கு இந்த உண்மை விளங்குவதில்லை.

தே: "நீதி வேதம்—வகுத்தாய் நீயே
நீசனைப்போல் மீறி நடந்தாய்!"

வ: என்ன!



தே: ஆம்;

"ஆதிவேதம் என்னை அங்கங்கே போற்றி நிற்க
பாதியிலே வந்தவர் பழிசொல்ல துணிந்து விட்டாய்"

வ: எப்படி?

தே: அப்படிக் கேள்;

"கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு" என சொல்லி
எல்லாரும் காண என்னை முன்வைத்தே
நல்லாரும் இகழச் செய்தாய்—உன்னை
எல்லாரும் வெறுக்க வைத்தாய் (நீதி)
மனம்வாக்கு காயங்களில் மாறாது நீதியாய்
வருது என்காதில் உன்வார்த்தை என்றென்றும்
தீரா பழியைச் சுமந்தாய் நீயே
தேவரையும் சந்திக்கிழுத்தாய். (நீதி)

வ: நீ நினைப்பது அப்படி; ஆனால் உண்மை அது அல்ல; சமயம் வரும்பொழுது சத்தியத்தைச் சொல்லியாக வேண்டும். இல்லாவிட்டால் உண்மையே ஒழிந்து விடும் அல்லவா? அது புறங் கூறல் அல்ல; அறங்கூறலாகும். தேவர் தலைவா?

"சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலைஅல்லார் கண்ணுங் கொளல்"

பதில் பேச வழி யின்றி இந்திரன் அந்தரத்தில் மறைந்தான்.

* * *

வள்ளுவர் அங்காடியை நெருங்கினார். இடையே வாலிபன் ஒருவன் வந்தான்.

வாலிபன்: எங்கே விற்கும் துணியைக் காட்டுங்கள் பார்க்கலாம்.

(வள்ளுவர் தான் வைத்திருந்த துணியை எடுத்து நீட்டினார். வாலிபன் வாங்கினான்; விரித்தான்; உற்றுப் பார்த்தான்.)





வா: உறுதியாயிருக்குமா?

வள்ளுவர்: அதற்குரியது இருக்கும்.

(உடனே வாலிபன் தாமதமின்றி அத்துணியை 'டார்' என இரு துண்டாய்க் கிழித்து விட்டான்; பெருமிதமுடன் வெற்றிப் பார்வையோடு வள்ளுவரைப் பார்த்தான்.)

அடுத்த வினாடியே 'பளார்' என்ற சத்தம் வந்தது. வாலிபன் கன்னம் சிவந்தது; வீங்கியது; கண் கலங்கியது. வள்ளுவர் கை பதம் பார்த்துவிட்டது.

வாலிபன்:

"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு."

—இதற்கு சொல்லும் ஐயா!

வள்ளுவர் :

"செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்."

—தெரியுமா பையா !

தேவேந்திரன் : (சுயரூபத்தில் கூப்பிய கரத்துடன்) ஐயனே ! மெய்யுணர்வு வந்தது. அகம்பாவம் அழிந்தது ; அடியேனை மன்னிக்க வேண்டும். தங்கள் கைபட்டதால் என் கன்னம் கருத்தது, ரத்தம் கெட்டது ; என்றாலும் உண்மையை உணர்ந்தேன் ; உத்தமரே ! புத்தி தெளிந்தது.

வ : தேவேந்திரா ! நாம ரூபத்தில் மயங்காதே ! நம்முடைய நிலையை எண்ணிப்பார் !

தே : (பொற்காசு நிறைந்த முடிப்பு ஒன்றை நீட்டியபடி) ஏழ்மையின் இருப்பிடமே ! இதை ஏற்றருள வேண்டும்.

## 71

வ : ஐயம் இட்டு உண்ண வேண்டிய இல்வாழ் வான் ஏற்பதா ? இகழ்ச்சி ; இகழ்ச்சி ! சரி ; நீ போய் உன் காரியத்தைக் கவனி தேவேந்திரா.

* * *

மறுநாள் உச்சி உணவுக்குப் பின் ஓய்வு கொண் டிருக்கிறார் பந்தல் அடியில் வள்ளுவர். ஏலேலசிங்கன் கண் கலங்கியவண்ணம் துணி முடிப்பு ஒன்றைக் கொண்டு வந்தான். அதை வள்ளுவர் முன் அவிழ்த் தான் ; கொட்டினான். வாய்விட்டு 'ஓ' என அழ ஆரம்

பித்து விட்டான்.

வ: (திகைப்புடன் எழுந்து உட்கார்ந்தார்) என்ன இது?

ஏ: (தேம்பிக்கொண்டே) ஐயனே! அடியேனிடம் தாங்கள் கொடுத்து வைத்திருந்த திருக்குறள் ஏட்டுச் சுவடிகள் பத்திரமாய் பெட்டியில்தான் வைத்திருந்தேன். எப்படியோ செல் உள் சென்றுவிட்டது. மூன்றடுக்கு மாடி மேல் இம் முப்பாலையுங் கொண்டு வைத்திருந்தேன். அப்பா! அந்தோ! வேறு பிரதி இல்லையே! ஐயனே! நான் என் செய்வேன்?

(விழுந்து புரண்டு அழுகிறான்)

வள்ளுவருக்கு வா யெழவில்லை.

தேவேந்திரன் கூப்பிய கைகளுடன் அவர்கள் முன் தோன்றினன்.

தே: ஐயா! தாங்கள் என்னை தீண்டும் முன் வேண்டும் என்றே நான் அகம்பாவத்தால் செய்த தீமை யாகும். மூன்றடுக்கு மாடிமேலிருந்த பெட்டகத்தில் புகுந்து அக்கெட்ட காரியம் செய்த கொடியவன் நானே யாகும். இதற்கு என்ன தண்டனை கொடுத்தாலும் இச் சண்டாளன் பணிவுடன் ஏற்றுக் கொள்ள காத்திருக் கிறேன்.

வ: தேவேந்திரா! அது உன் தவறு அல்ல:



வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொடுத்தார்க்கும் துய்த்தல் அரிது."

பிரம்மன் எழுத்தை போக்க முடியுமா?

தே: அந்த பிரமன் தான் இப்படி எழுதலாமா?

வ: "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று ;
சூழினும் தான்முந் துறும்."

ஆதலின் அது பிரமன் தவறல்ல ; ஊழ்.

தே: ஊழை ஒழிக்க வழியில்லையா ?

வ: "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்."

தே: இதற்குத் தெய்வத்தின் துணை வேண்டு மல்லவா ?

வ: "தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்."

தே: சுய முயற்சிக்கு அவ்வளவு சக்தி இருக்கிறதா?

வ: ஆம் ; சந்தேகமே வேண்டாம்.

"முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்."

ஏலேலசிங்கன் : (கையால் காட்டியபடி) ஐயனே! செல்லரித்த ஏட்டுச் சுவடி. தாள்களை இனி என்ன செய்வது?

வ: தீயிலிடவேண்டியதுதான்; அச்சாம்பலை மண்ணொடு மண்ணும் வண்ணம் குப்பையில் கொட்டினாலும் சரி ; கொண்டு நீரில் கொட்டினாலும் சரி ; எல்லாம் பஞ்ச பூத விகாரங்கள் தானே ! பூதங்களோடு பூதமாய் அபேதமாக வேண்டியதுதானே ! இவ்வளவுக்கும் இடங் கொடுப்பது ஆகாயமல்லவா ?



அவர்கள் முன் ஐந்து மனித உருவம் தோன்றின.

ஒவ்வொரு உடலும் வெவ்வேறு விதமாகவே விளங்கின. என்றாலும் உருவங்கள் எல்லாம் ஒன்று போலவே தோன்றின.

சுடர்மேனி வடிவிலுள்ள மனிதன் சொல்லுகிறான் வள்ளுவரை நோக்கி: ஐயனே! தமிழ் மறையான திருக்குறளை பொல்லா இந்திரன் செல்லாய் சென்று அரித்தான், அது அவன் அகம்பாவத்தால் செய்த அட்டூழியமாகும். அதை அக்கினி எரித்தான் என்ற அபவாதத்துக்கு என்னை ஆளாக்க வேண்டாம்.

திரவமேனி மனிதன் சொல்லுகிறான்: ஐயனே! திருக்குறளை இந்திரன் அரித்தான்; அக்கினி எரித்தான்; வருணன் அதைக் கரைத்தான் என்ற அபவாதத்துக்கு என்னை ஆளாக்க வேண்டாம்.

சலன மேனி மனிதன் சொல்லுகிறான்: ஐயனே! திருக்குறளை இந்திரன் அரித்தான்; அக்கினி எரித்தான்; வாயு அக்கினிக்கு சகாயமாயிருந்தான் என்னும் அபவாதத்துக்கு என்னை ஆளாக்க வேண்டாம்.

கடின மேனி மனிதன் சொல்லுகிறான்: ஐயனே! திருக்குறளை இந்திரன் அரித்தான்; அக்கினி எரித்தான்; மண் மறைத்தான் என்ற அபவாதத்துக்கு என்னை ஆளாக்க வேண்டாம்.

சூட்சும மேனி மனிதன் சொல்லுகிறான்: ஐயனே! இவ்வளவுக்கும் ஆகாயம் இடங்கொடுத்தான் என்ற அபவாதத்துக்கு என்னை ஆளாக்க வேண்டாம்.

தேவேந்திரன்: (பதறிக் கொண்டு) பஞ்ச பூதங்களே செய்ய அஞ்சும் காரியத்தை பாவி செய்தேனே! அந்தோ! வெந்தது உன் வாழ்வு. சண்டாளன்; சண்டாளன்; எனக்கும் உய்வு உண்டா? (இரு கைகளாலும்

தலைமேல் அடித்துக் கொள்ளுகிறான்.)



வள்ளுவா: (கருணையுடன்) தேவேந்திரா! திடம் கோள்! கடந்ததைக் கருதி கலங்காதே! நடந்தது நடந்ததுதான். அணைகடந்த வெள்ளம் வருந்துவதால் திரும்புமா? இனி இத்தகைய காரியத்துக்கு உடன்படாதே! உடந்தையாயுமிருக்காதே! அதுதான் நீ இனி செய்யத் தக்கது.

தே: (கூப்பிய கைகளுடன்) ஐயனே! அடியேன் விண்ணப்பத்தை ஏற்றருள வேண்டும்.

வ: (பரிவுடன்) விருப்பத்தைச் சொல் இந்திரா!

தே: இந்த ஏட்டுச் சுவடி தாள்களை என்னிடமே கொடுத்துவிட வேண்டும்.

வ: எதற்காக?

தே: இத்தாள்களைக் கொண்டுபோய் தங்க பேழையில் வைத்து நான் நாள் தவறாது பூசித்து வரவேண்டும்.

வ. ஏன்?

தே: அப்பொழுதுதான் நானும் என்னைச் சார்ந்தவர்களும் உய்வோம்; இல்லாவிட்டால் இக்கதியே எங்களுக்கும் ஏற்படும். இதில் சந்தேகமே இல்லை.

வ: இப்பயம் உனக்கு வேண்டாம்.

தே: ஐயனே! அடியேனை மன்னிக்கவும். துவாரகையில் யாதவர்கள் பெரியாரை அவமதித்ததால் ஒருவராவது தப்பினார்களா? பெரியாரின் சாபத்தால் உண்டானது இரும்பு உலக்கை. அதைக் கண்டதும் கலங்கினார்கள். அதைத் தூளாக்கி கடலில் கொண்டு கொட்டினார்கள். என்றாலும் அவர்கள் எண்ணியதுபோல் அத்

தூண்கள் கடலுக்குள்ளானதா? இல்லை. கரைக்கே வந்து சேர்ந்தன. இரும்புக் கோரைகளாக வளர்ந்தன. கோபாலர்களைக் கூண்டோடு அழித்தே விட்டன அல்லவா? பெரியார்கள் முனிவு பொல்லாதது. அது செல்லாத இடமே இல்லை. வெல்லாத வினைகளும் இல்லை. ஆதலின்



பெருந்தகையே! இத்தூள்களை தாங்கள் என்ன செய்த போதிலும் எங்களை அழித்தே தீரும்.

இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யும் இயல்புடைய தாங்கள் இத்தூள்களை எடுத்துக்கொண்டுபோய் என் விருப்பம்போல் வைத்து வணங்குமாறு அனுக்கிரகம் செய்யவேண்டும்.

வள்ளுவர் முன் விழுந்து வணங்கினன். அவன் உடல் பூமியில் படவில்லை. எழுந்து கைகட்டியபடி பணிவுடன் நிற்கிறுன்.

வ: "அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்."

ஆதலின் தேவேந்திரா! அத்தகையது எதுவும் உனக்கு உண்டாகாது. பயப்பட வேண்டாம்.

தே: பொய்யா மொழியாரே! நான் உய்யவேண்டும். என் விருப்பம் நிறைவேற வேண்டும். நான் செய்த பாவத்துக்கு அதுதான் தக்க பரிகாரமாகும்.

வ: விருப்பம்போல் செய்.

ஏலேலசிங்கன்: அடியேன் கதி என்ன ஆவது?

இவைகளை எல்லாம் கதவண்டை நின்று கவனித்துக் கொண்டிருந்த வாசுகி அம்மையார் ஒரு துணி முடிப்பைக் கொண்டு வந்து வள்ளுவரிடம் மௌனமாக நீட்டினார்.

வள்ளுவர் வாங்கினார்; அதை அவிழ்த்தார். ஓலை நறுக்குகளின் கட்டொன்று காணப்பட்டது. கட்டை பிரித்தார். பெரிய எழுத்தில் ஓலைக்கொரு குறளாக வரிசை கிரமம் தவறாது அதிகார முறையுடன் பாயிரத்தோடு ஆயிரத்து முந்நூற்று முப்பது குறளும் இருந்தது.

வ: (ஆச்சரியமுடன்) இதை எப்பொழுது எழுதினாய்?



வா: (பணிவுடன்) தாங்கள் ஏலேலசிங்கருக்குப் பாடம் சொல்லும்போது வீட்டு வேலைகளுடன் அவைகளையும் கேட்டுக் கொண்டிருப்பேன், ஓய்வு நேரங்களில் உட்கார்ந்து ஓலை நறுக்கில் அவைகளை பொறிப்பேன். அவ்வண்ணம் ஆனதுதான் இக்கட்டு.

வ: (பெருமிதமுடன் தேவேந்திரனை நோக்கி):

"இல்லதுஎன் இல்லவள் மாண்பானால் உள்ளதுஎன்
இல்லவள் மாணாக் கடை."

தே: முற்றும் உண்மை. தேவலோகத்தில் கற்பரசிகளைக் காண்பது பகலில் விண்மீன்களைக் காண்பது போலத்தான். அதனால்தான் ஆண்கள் அல்லல்படுகிறார்கள்.

தேவேந்திரன் தன் மேல் அங்கியில் நான் அரித்த திருக்குறள் ஏட்டுச்சுவடி தாள்களை இம்மியும் விடாமல் சேர்த்தெடுத்துக் கட்டிக்கொண்டான்.

வள்ளுவர் வாசுகி சமேதராய் ஏலேலன் இலக்குமணனைப்போல் நிற்க தேவேந்திரன் மூவரையும் வலம்

வந்தான் ; வணங்கினன் ; விடைபெற்றன்.

தங்கத்தேர் வந்தது. அதில் அமர்ந்தான். ஆகாய மார்க்கமாய் மறைந்தான்.

# 16. திருக்குறள் அரங்கேற்றம்

இவைகளை எல்லாம் உடன் இருந்து கண்டு வந்த கொங்கணவருக்கு உண்மை விளங்கிவிட்டது என்னும் எண்ணத்தால் குதூகலம் ஏற்பட்டது. தான் வந்த காரியம் நிறைவேறியது ; கைலாயம் விட்டு வந்து காத்திருந்ததற்கு ஏற்ற பலன் கிடைத்துவிட்டது. இனி மாணவ வாழ்வு வேண்டியதில்லை.

"இல்லவள் மாண்பானல் இல்லது என்?" ஆ! என்ன அருமையான வாக்கியம். பாக்கியம் பெற்றவர்கள் அல்லவா இல்வாழ்வோர். சிலாக்கியமானது இல்லறமே என்று தனக்குள் உறுதிகொண்டான். வள்ளுவரை அடைந்தான் ; வணங்கினன் ; விடை பெற்றன் கொங்கணவன்.

ஏலேலசிங்கன் : (பணிவுடன்) ஐயா! அடியேன் ஆவலைத் தீர்த்தருள வேண்டும்.

வள்ளுவர் : (வியப்புடன்) புதுமையாயிருக்கிறது ; என்ன அது?

ஏ : தாங்கள் தென்மதுரை செல்லவேண்டும்.

வ : எதற்காக?

ஏ : மதுரை தமிழ் சங்கத்தில் தங்களுடைய குறளை அரங்கேற்ற வேண்டும்.

வ: ஏன்?

ஏ: இந்த எண்ணம் எனக்கு ஏன் வந்தது என்பது தங்களுக்குத்தான் தெரியும்.

(சிறிது நேரம் மௌனம்.)

வ: (வாசுகியை நோக்கி) உன் விருப்பம் என்ன?



வா: தங்கள் ஏவல்படி நடப்பது.

வ: அது சரி; நான் மதுரை போவதா; அல்லது வேண்டாமா?

வா: நான் எதைச் சொல்வது?

வ: நல்லதை சொல்.

வா: தங்கள் விருப்பம்போல் செய்யலாம்.

வ: ஆம்; என் குருவின் கட்டளை உருவடைந்து விட்டது. இனி அது விரிவடைய வேண்டும். அதற்குரிய அறிகுறிதான் ஏலேலன் ஆவல். அதற்காகத் தானே அவரைப் பிரிந்தேன். இங்கு வந்தேன்; உன்னை மணந்தேன்; ஏலேலசிங்கனை மாணவனாய் ஏற்றேன். திருக்குறளை இயற்றினேன்.

(ஏலேலசிங்கனை நோக்கி) ஏலேலா; உன் ஆவல் என் குருவின் ஏவல் அப்பா! தாமதமின்றி நான் மதுரை போக வேண்டியதுதான். அடுத்த வாரமே நடக்க ஆரம்பிக்கிறேன்.

* * *

பலநாள் பயணம் ஒருநாள் முடிவடைந்தது. மதுரையை அடைந்தால் எல்லாம் முடிந்ததாகுமா? எவ்வளவோ இன்னல்கள் மின்னல் வேகத்தில் வரும். அதற்கு அண்ணல் என்ன செய்வார்?

மதுரை பாவலர் புரட்டு யாவரைத்தான் விட்டது. தொட்டதெல்லாம் கவிபாடும் தூண்களைக் கொண்டு கட்டப்பட்டதல்லவா மதுரை தமிழ் சங்கம். பொற் கிளிகள் பேசுமாம். புல்லாங்குழல் ஓசை எல்லா திசையி லிருந்தும் வருமாம். நல்லார்கள் பொல்லார்கள் எல்லா ரையும் எள்ளி நகையாடுமாம் அங்குள்ள அங்கத்தினர்கள் அமரும் சங்கப் பலகை. திங்கள் முடி சூடியோன் திரு வருள் இருந்தால் அல்லது அச்சங்கத்திலிருந்து தேர்ந்து வரமுடியாது என்பது எல்லாருடைய அபிப்பிராயமு மாகும்.

79

இவைகளுக்கெல்லாம் வள்ளுவர் யாரிடம் செல்லு வார்? எவரைத் துணை கொள்ளுவார்? தன்னம்பிக்கை யின் முனையில் தாண்டவமாடுபவர்; தூண்டா விளக்கென யாண்டும் ஒளிர்பவர்; தராசு முனைபோல் அல்லவா வாழ்வார். அத்தகையோர் திக்கற்றோ திரிவர். தெய் வத்தின் திருவருள் தேடியே வரும் என்பது பண்டை உலகம் கண்ட உண்மை அல்லவா? பார்க்கலாம் வள்ளு வர் வாழ்வில்.

தமிழ் சங்கம் இருக்கும் இடம் கேட்டு அறிந்தார்; சென்றார். என்றாலும் உள் நுழைவதற்குத் தடையாக இடைவாள் தொடைபட நடமாடிக் கொண்டிருக்கிறான் முன் வாயிலிலேயே கடைகாப்பாளன். வள்ளுவர் வாயில் காப்பாளனை நெருங்கினார்.

வள்ளுவர்: நான் தமிழ் சங்கத் தலைவரை சந்திக்க வந்திருக்கிறேன்.

காப்பாளன்: எதற்காக?

வ: உடன் கொண்டு வந்திருக்கும் நூலை அரங்

கேற்றுவதற்காக.

கா: அரசர் அனுமதி கிடைத்ததா?

வ: இல்லை.

கா: முதலில் போய் அரசர் அனுமதி பெற்று வாரும்.

மதுரை அரண்மனை. ஏந்திய வாளுடன் பக்கத்துக்கு ஒருவராக இரண்டு மல்லர்கள் முன் வாயிலில் கடைகாப் பாளராக நின்று கொண்டிருக்கின்றனர். வள்ளுவர் அவர்களில் வலது பக்கம் நின்றுக் கொண்டிருப்பவனை நெருங்கினார்.

வள்ளுவர்: நான் அரசரைக் காண வந்திருக்கிறேன்

காப்பாளன்: ஏன்? எதற்காக?



வ: தமிழ் சங்கத்தில் நான் கொண்டு வந்திருக்கும் நூலை அரங்கேற்ற அனுமதி பெறுவதற்காகத்தான்.

கா: (வள்ளுவரை மேலும் கீழும் உற்று நோக்கி விட்டு வியப்புடன்) தாங்களா நூல் இயற்றிக்கொண்டு வந்திருக்கிறீர்கள்.

வ: ஆம்;

கா: (கேலியாக) அரச தரிசனத்துக்குரிய தகுதி இல்லையே.

வ: தகுதி இல்லையா; யாருக்கு?

கா: தரிசனத்துக்கு வந்திருப்பவருக்குத்தான்.

வ: அதை எப்படி அறிந்துக் கொண்டாய்?

பெரும்பறை ஒலித்தது. காவலர்கள் தம் நிலையில்

கம்பம்போல் நின்றனர். வாயில் உள்செல்ல வள்ளுவர் விரும்பவில்லை. அதற்குள் அவருக்கு ஒரு எண்ணம் எழுந்தது. இவ்வளவு தொந்திரவு எதற்கு? ஆராய்ச்சி மணியிருக்கும்; அது இல்லாத அரண்மனை ஏது? சொல்லி அனுப்புவதைவிட அச் சூத்திரத்தை அசைப்பதே மேல். அரசரே ஆள் அனுப்புவார்; அதன் பின் பார்த்துக் கொள்ளலாம் என்றவாறு அவ்விடத்தை விட்டுச் சென்றார்.

முன்வாயில் படிகட்டை விட்டு இறங்கினர். அதற்குள் ஔவை மூதாட்டி எதிரே வந்தார். ஒருவரை ஒருவர் என்றும் கண்டறியார்; கேள்விப்பட்டதோடு சரி. என்றாலும் குறிப்பறிவதில் இருவரும் சரிசமமாய் விளங்கினர். ஒருவரை ஒருவர் பார்வையிலேயே புரிந்துக் கொண்டனர்.

ஔவை: என் அரும் தம்பி! எதற்காக இங்கு வந்தனை?

வள்ளுவர்: அக்கா!



ஔ: ஏதேனும் நூல் இயற்றியிருக்கிறாயா?

வ: ஆம்; இயற்றிக்கொண்டு வந்திருக்கிறேன். அதை தமிழ் சங்கத்தில் அரங்கேற்ற வேண்டும். அதன் பொருட்டு அரசர் அனுமதி அவசியம் வேண்டுமாம். அதற்காக இங்கு வந்தால், அரசரைக் காண தகுதி வேண்டுமாம்.

ஔ: புலவர் புரட்டிலும், காவலர் மிரட்டிலும் பாவலர் அல்லவது ஏனோ? காவலா! ஆவல் நிறைவேற யாவர்க்கும் ஆராய்ச்சி மணி மேலாக உளபோது அயர்வு எதற்கு? அதனடியில் சென்று சூத்திரத்தை அசைத்தால்

அரசரே ஆள் அனுப்புவாரல்லவா ?

வ: உண்மைதான்; அதை உணர்ந்த பிறகு தான் படிக்கட்டை விட்டு இறங்கினேன். அதற்குள் தங்கள் தரிசனம் கிடைத்து விட்டது.

ஔ: (காவலர்களை நோக்கி) என் தம்பிக்குத் தகுதியா வேண்டும்?

கா: தாயே! மன்னிக்க வேண்டும். தங்கள் தம்பி என்று எங்களுக்கு எப்படித் தெரியும்? உண்மையாகவே தெரியாது அம்மா.

ஔ: ஆம். பாவலர்கள் வேடத்தில் பகைவர்களும் வருவார்கள்; அவர்களை அறிவது கடினம்தான்.

ஔவையும் வள்ளுவரும் அரண்மனையுள் சென்றனர். அரசனை கண்டனர்; மன்னன் இருவரையும் வரவேற்றான்; இருக்கை அளித்து உபசரித்தான். பிறகு வள்ளுவர் வந்திருக்கும் செய்தியையும் விசாரித்து அறிந்தான்; பிறகு ஔவையை நோக்கி அரசன் சொல்லுகிறான்:—

" அனுமதியா—? நானே வருகிறேன். என்றும் பாராளும் மன்னன் பாவலர்களுக்கு ஏவலன் தானே! மூதாட்டி முன் முடிவேந்தன் அடிபணியக் கடமைப்பட்



டவனாகும். தாமதம் வேண்டாம் வாருங்கள் நேரே போவோம்."

நாழிகைக் கணக்கன் ஆழி நோக்கி நாழிகை பகல் பத்து என்பதை கண்டாமணி அடித்து அறிவிக்கிறான்.

தமிழ் சங்கப் புலவர்கள் அளவளாவினர். பிறகு பொன்னோர் விழாவைப் பற்றிய வாதம் ஆரம்பித்தனர். வரட்டு வாதம் பிடிவாதமாக வடிவெடுத்தது. அதனால் ஒருவரை ஒருவர் கையாண்டி செய்துக் கொண்டிருக்கின்றனர்.

எதிர்பாராத நேரம் அரசர் வருகைக் கண்டதும் அதிர்ச்சியுற்றனர்; அடக்கமே உருவாயினர். ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணம் இருக்கை விட்டு எழுந்தனர். மரியாதை செய்தனர். அரசர் அமர புலவர்களும் அமர்ந்தனர். வள்ளுவருக்கும் இருக்கை அளிக்கப்பட்டது. ஔவை வருவது வழக்கம்; புதிது அல்ல; ஆனால் பழக்கமில்லாத வள்ளுவர் மன்னர் பின் வந்திருப்பது தான் அவர்களுக்கு ஒரு மயக்கம். தயக்கமுடன் எல்லாரும் வள்ளுவரை உற்று நோக்கிய வண்ணமா யிருக்கின்றனர்.

சிறிது நேர மௌனம். பிறகு அரியாசனத்தில் அமர்ந்திருக்கும் அரசன் எல்லாரிடமும் வள்ளுவரைச் சுட்டி சொல்லுகிறான் :—

" இவரை அறிமுகப்படுத்தவே நான் இந்த அகாலத்தில் வந்திருக்கிறேன். இதனால் உங்களுக்கு இடையூறு இருக்கலாம்; என்றாலும் வெளியூர் வாசியை; வெகு தூரத்திலிருந்து வந்திருப்பவரை வரவேற்காது காலங் கடத்துவது நியாயமல்ல. இவர் நம் மூதாட்டியின் இளைய தம்பி திருவள்ளுவர் என்பதை அறியவும். இவர் ஒரு நூல் இயற்றிக்கொண்டு வந்திருக்கிறார். அதை அரங்கேற்ற வேண்டுமாம். அதற்குரிய அம்சங்கள் எல்லாம் பொருந்தி யிருந்தால் தாமதமின்றி அதை அரங்கேற்றுங்கள். தமிழ்மொழி தழைத்தோங்க எங்கும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

திருவள்ளுவர் தான் கொண்டு வந்திருந்த குறள் ஏட்டுச்சுவடி கட்டை எடுத்து மன்னன் முன்னிருந்த பலகை மேல் வைத்தார். புலவர் தலைவர் அதை எடுத்தார். பிரித்துப் பெருவாரியாய் பார்த்துவிட்டு பெருமூச்சு விட்டார்; உதட்டைப் பிதுக்கினுர்.

புலவர் தலைவர்: அரசே! இத்தகைய நூலுக்கு இங்கு இடமில்லை,

ஔவை: ஏன்?

பு. த: எல்லாம் ஈரடியாகவே இருக்கின்றன. இம்மாதிரி ஈரடிகொண்ட நூல் நம் சங்கப் பலகையில் என்றும் வைக்கப்பட்டதும் இல்லை; அரங்கேற்றியதும் இடையாது.

ஔ: என்றேனும் இங்கு இத்தகைய நூல் வந்ததுண்டா?

பு. த: இல்லை.

ஔ: என்றும் வராதது இன்று வந்திருக்கிறது என்றுல் அது சங்கத்துக்கே ஒரு புதுமை அல்லவா?

பு. த: புதுமை இருக்கலாம்; ஆனுல்—

ஔ: என்ன ஆனுல்?

பு. த: இத்தகைய நூலுக்கு இடங்கொடுத்தால் ஓரடி நூல் ஒன்றை இயற்றி ஒருவன் கொண்டு வருவான் பிறகு ஒரு பதம் கொண்ட நூல் ஒன்றை ஒருவன் இயற்றிக் கொண்டு வருவான். இதனுல் மொழி குன்றி அழிவுக்கு வழிவகுத்ததாகுமே ஒழிய வளர்ச்சியடைய வழியில்லை.

ஔ: அப்படிச் சொல்வது அழகல்ல; சுருங்கச்

சொல்லி விளங்க வைத்தலே நூலுக்குரிய தன்மையும் புலமைக்குரிய கடமையுமாகும். பார் எல்லாம் ஏர் பூட்டி ஓட்டினால் என்ன வாகும்? பக்குவமாய் வாழ விரும்பும்



விவசாயி அகல ஓட்டுவதைவிட ஆழ ஓட்டுவான். காலங் கடத்தாது அதற்குரிய எரு இடுவான்; விதை விதைப் பான்; நீர் விடுவான்; களை களைவான்; காவலிருப்பான்; காலக்கிரமத்தில் அறுவடை செய்வான். தான் அனுப விப்பது மட்டுமல்லாமல் மக்களுக்கும் பயன்படுமாறு செய்வான். அதைப் போலவே தான் சிறந்த புலவன் செயலுமாகும்.

பு. த: ஔவையார் வழக்கத்துக்கு விரோதமாய் தம்பிக்கு சாதகமாய் பேசுகிறார்.

அரசன்: புலவர்களே! இத்தர்ம சங்கடத்திற்கு என்ன செய்யலாம்.

புலவர்கள்: (ஏகமனதாய்) புலவர்கள் பொற்றா மரைக் குளத்து சங்கப் பலகையில் போய் அமரட்டும் சங்கப் பலகை இந்நூல் இருக்க இடங் கொடுத்தால் அரங்கேற்றலாம்.

ஔ: இதுவரையில் இத்தகைய சோதனை எந் நூலுக்காவது செய்தது உண்டா?

பு. த: இந்நாள் வரையில் இத்தகைய நூல் இச் சங்கத்தில் அரங்கேற வந்தது உண்டா?

வள்ளுவர்: 'புதியன புகுதல் கால வழு வல.

பு. த: உண்மைதான். கற்றோர் ஏற்க மறுத்தால்?

புலவர்கள்: (ஏகமனதாய்) பொற்றாமரைக் குளமே

தீர்ப்பளிக்கட்டும்.

வள்ளுவர்:

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினு
நற்றுணை யாவது நமச்சி வாயமே.

—ஆம் உண்மை.

83

எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

—சரி; சங்கப் புலவர்களே! பிரியம் போல் செய்யுங்கள்.

எல்லாரும் பொற்றாமரை குளக்கரை போய் சேர்ந்தனர். சங்கப் புலவர்கள் அனைவரும் பொற்றாமரைக் குளத்தில் மிதந்துக் கொண்டிருந்த சங்கப் பலகையில் போய் அங்குலம் இடைவெளியும் இல்லாமல் அமர்ந்துக் கொண்டனர். வள்ளுவர் குறளுடன் கரைமேல் நிற்கிறார். பலகையில் குறள் வைக்கவும் இடம் இல்லை.

வள்ளுவர்:

1. சான்றோர்கள் போற்றும் சங்கப் பலகையே!
; சங்கப் பலகையே!
மாண்புற்ற தாயின் மண்ணை காக்க—மாண்புற்ற
/ தாயின்
மங்களம் விளங்க தங்க இடங்கொடு
துங்கமறை இருக்க சங்கப்பலகையே! இடங்கொடு,

சங்கப் பலகையின் வடபாகம் வளர்ந்தது; வள்ளுவர் தன் குறளைக் கொண்டு வைத்தார்.

2. துங்கமறை யோர்கள் தோன்றி மறைந்தாலும்
துங்கமறை என்றென்றும் வாழும்—துங்கமறை
உரையுமிடம் தூய்மையாய் விளங்க வேண்டி
மறையுமே மாண்பற்ருர் உறையுமிடம்.

வெண்மேகம் கவிந்தது. மின்னல் இடி தோன்றியது. பொற்ருமரைக் குளம் பொங்க ஆரம்பித்தது. புலவர்களுக்குப் பயம் தோன்றியது. வள்ளுவர் வானத்தை நோக்கினர். இடி குமுறல் கேட்டது. படித்துறையில் இருந்தவர்கள் பரபரப்படைந்தனர். சங்கப் பலகையின் வடபாகம் மேலும் வளர்ந்தது. வள்ளுவர் போய் தன் குறள் ஏட்டுச் சுவடியின் வடப் பக்கத்தில் அமர்ந்துக் கொண்டார்.

6



கண்டோர் வியக்க அசரீரி கேட்கிறது:

திருத்தகு தெய்வத் திருவள்ளுவ ரோடு
உருத்தகு நற்பலகை ஒக்க—இருக்க
உருத்திர சன்மர் எனஉரைத்து வானில்
ஒருக்கஓ என்றதுஓர் சொல்.—அவ்வளவு தான்.

சங்கப் பலகை குறளின் தென்பக்கம் உட்கார்ந்திருக்கும் உருத்திரசன்மரும் வடபக்கம் அமர்ந்திருக்கும் வள்ளுவரையும் தவிர ஏனையோர் இருந்த இடம் திடீரென சுருங்கிவிட்டது. அதனல் இவ்விருவரையும் தவிர மற்ற புலவர்கள் எல்லாரும் தண்ணீரில் தடுமாறிக் கொண்டிருக்கின்றனர்.

புலவர்கள் புத்திவந்தவர்களாய் வள்ளுவரை நோக்கி சொல்லுகின்றனர் :

"திருவள்ளுவரே! திசை தெரியாது தடுமாறு கிறோம். அகம்பாவத்திலிருந்து எங்களைக் கரை ஏற்றி விட்டீர். அதுபோலவே இக் குளத்திலிருந்து எங்களைக் கரை ஏற்றிக் காப்பாற்றுவது தங்கள் கடமையேயாகும். நாங்கள் எவ்வளவோ முயல்கிறோம்; என்றாலும் முடிய வில்லை. பின்னப்பட்ட கால்களை யுடையவர்களாய் இருக்குமிடத்திலேயே தடுமாறிக் கொண்டிருக்கிறோம்.

திருவள்ளுவர்:

பொற்றாமரைக் குளத்தில் பொருந்திய அன்னையே
சற்றே வழிவிடு சாந்தமாய்—கற்றோர்கள்
புத்தி திருந்தி பொறாமையை விட்டுமன
சுத்தியுடன் வாழ வகையருளி.

சங்கப் புலவர்கள் தடுமாற்றம் நீங்கியது; நீந்தி வந்து படித்துறை அடைந்தனர். மறுநாளே திருவள் ளுவர் குறளை அரங்கேற்ற எல்லாவிதமான ஏற்பாடு களும் செய்யப்பட்டன.

87

சங்க மண்டபத்தில் தங்க இடமில்லை. பந்தல் அடி யிலும் இடிபடாது நிற்க இடமில்லை. மேல் மாடியிலோ மாதர்கள் நிரம்பிவிட்டனர். எதிர்பாராது மக்கள் வந்திருப்பதைக் கண்ட மன்னன் சதிராடும் பகுதியி லிருந்த படுதாவையும் எடுத்துவிட்டு மக்கள் இருக்க இடமளித்தான்.

அரசர் தலைமையில் அரங்கேற்றம் ஆரம்பமானது. திருவள்ளுவர் ஒவ்வொரு குறளுக்கும் பொருள் விளக்கங் கொடுக்கும் போதும் புலவர்கள் புகழாமலில்லை. ஆகா! எவ்வளவு அழகாகவும்; அழுத்தமாகவும்; ஆழமாகவும்;

கருத்து நிறைவுங் கொண்டு விளங்குகின்றது ஒவ்வொரு குறளும் என்றனர்.

குறள் அரங்கேற்றம் முடிந்தது; குதூகலம் நிறைந்தது. குறளுக்குக் குறளே நிகர் என்றொரு ஒலி எழுந்தது.

முதலில் குறளுக்குப் புகழ் மாலை பாட நாமகளே ஆரம்பித்தாள். அது கண்டு அங்கிருந்த புலவர்கள் அனைவரும் தம் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்றவாறு புகழ் மாலை பாடினர். மொத்தம் ஐம்பத்து மூன்று புலவர்கள் பாடினர் எனினும் இடைக்காடரும் ஔவை யாரும் பாடியது ஒரு தனி மதிப்புடன் அமைந்தது; குறள் வடிவமாகவே இருந்தது.

திருவள்ளுவருக்கு பரிசும் பட்டமும் விருதும் வழங் கப்பட்டன. அரசன் வள்ளுவரை தன் ஆஸ்தான புலவ ராயிருக்குமாறு வேண்டினன். வள்ளுவர் தான் செல்ல வேண்டிய அவசியத்தை அரசனுக்கு எடுத்துச் சொல்லி சமாதானப்படுத்தினார்.

வள்ளுவர் மேலும் சொல்லுகிறார்:

" அரசே! அவையோர்களே! பட்டமும் பரிசும் பெற்று விருதுடன் செல்வதற்காக அல்ல; அரங்கேற் றத்திற்காகவே இங்கு வந்தேன். அக்காரியம் இனிது



முடிந்தது. பாராளும் மன்னன் ஈவதை பாவலன் மறுப்பது முறையல்ல. நான் நேராக வீடு நோக்கி செல்வதாக இல்லை. சேர சோழ நாட்டு வாழ்வை பார்த்துவிட்டே திரும்ப எண்ணி யிருக்கிறேன். நான் இல்லாதபோது என் இல்லாள் எதுவும் ஏற்காள். ஆதலின் நேராக அனுப்புவதும் அழகல்ல. எல்லாம்

இவ்விடமே இருக்கட்டும். பட்டமும் விருதும் பிறருக்குப் பயன் படாது; அதனால் அவைகளை பார்வேந்தர் பத்திர மாய் வைத்திருக்கலாம். ஆனால் பரிசு தொகை அப்படிப் பட்டதல்ல; அதை சரசமாய் பாமர மக்களுக்குப் பயன்படும்படி செய்யலாம். ஆம்; அவர்கள் போதும் போதும் என்னும் வண்ணம் ஒருநாள் அன்னம் அளிக் கலாம். அவர்கள் திருப்தியை நாம் கண்டு களிக்கலாம்."

அரசனும் இசைந்தான்; அன்னதானத்துக்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்தான். வள்ளுவர் உள்ளம் கண்டு களிக்க வந்தவரெல்லாம் விருந்துண்டு மகிழ்ந்தனர்.

## 17. சோழன் யாகசாலை

காவிரிப்பூம்பட்டினம்; காவேரி கடலோடு கலக்கும் இடத்துக்கு வடக்கு இருக்கும் விரிந்த வெளி; பெரிய பந்தல்: பந்தலில் நாற்பக்கமும் அகன்ற வாயில்கள். வாயிலின் இரு பக்கங்களிலும் வாழையும் கமுகும் குலையோடு கொண்டு வந்து கட்டப்பட்டிருக்கின்றன. அவைகளின் இடையே மலர்களாலும் மா இலைகளாலும் அமைந்த தோரணங்கள் வேதம் ஓதும் யாகசாலை என்பதை விளக்குவன போல் ஊசலாடிக் கொண் டிருந்தன.

பந்தலின் நடுவே ஒரு பெரிய மேடை. அம் மேடையின் இடது பக்கம் சோழ மன்னன் மேலாடை யின்றி சுகாசனத்தில் அமர்ந்திருக்கிறான். வலது பக்கம்

சடை முடியுடைய வயோதிக துறவி ஒருவர் சித்தா சனத்தில் அமர்ந்திருக்கிறார்.

இவர்களுக்கு எதிரே மேடையின் முற்பகுதியில் நெய் மணம் கொண்டு செய்வதை மறைக்கும் யாகத் தீ வளர்ந்துக் கொண்டிருக்கிறது. ஓமகுண்டத்தின் நான்கு பக்கமும் பக்கத்துக்கு மூவராக பனிரண்டு பார்ப்பனர் என்போர் அமர்ந்து பார்ப்போர் வியக்க மந்திரம் ஓதி நெய் வார்த்த வண்ணமா யிருக்கின்றனர்.

நூற்றுக்கணக்கான ஆடுகள் அம்மேடைக்கு எதிரே குளிப்பாட்டப்பட்டு மங்களம் விளங்க மஞ்சள் பூசி மலர் சூடி மண் படா வண்ணம் வரிசை வரிசையாய் நிறுத்திக் கட்டப் பட்டிருக்கின்றன. என்றாலும் அவைகள் பார்வையில் பயமும் ஏக்கமுந்தான் தோன்றுகிறது அது மட்டுமா? அல்ல

90

திங்கள் சடையோன் திருவருளுக்காக எங்களை வதைப்பதா? என்னே மனிதர் கொடுமை! மடமை! உங்கள் ஆறறிவு கூறுவது இது தானா? வதையை மறைக்க இத்தனை ஆடம்பரங்களா? புத்தியுடையோர் களே! எங்கள் சித்தம் துடிக்க கத்தியை எடுத்துக் குத்துகிறீர்களே! இது தான் கற்றோர் செயலா? கடவுள் வழிபாடா?

வேதம் ஓதவும் வேண்டாம்; வீணர்களே! எங்களை விருதாவாக வெட்டவும் வேண்டாம். எங்களை வதைப்

பதால் விண்ணவர் களிப்பதாய் மண்ணவர் நினைப்பது மானக்கேடு அல்லவா?

ஐயா! ஆண்டவன் அருளை வேண்டுகிறீர்களா? எங்களை வீணாக வெட்ட வேண்டாம்; வேள்வித் தீயிலும் கொண்டு கொட்ட வேண்டாம்; கட்டவிழ்த்து விடுங்கள்; கடவுள் உங்களைக் காப்பார் என்று கேட்பது போல இருந்தது அந்த ஆடுகளின் பார்வை.

ஆம்: "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்."

இது மக்களுக்கு மட்டுமல்ல; எல்லா சீவர்களுக்கும் ஏற்பட்ட பொது விதியாகும். இதை மதியுடையோர் கண்டபின் சதி செய்ய நினைவரோ?

வள்ளுவப் பெருந்தகை பந்தல் முன் வந்தார். வடக்கு வாயிலில் நுழைந்தார். "எந்தையே!" "வந்தயோ!" என்று அங்கலாய்ப்பது போல எல்லா ஆடுகளும் ஆவேசமுடன் "ம்மே-ம்மே" என அலறவாரம்பித்துவிட்டன. அவ்வொலி கேட்டதும் தம்பித்து கம்பம்போல நின்றுவிட்டார். ஒலி அடங்கிய பின்னரே கண்விழி திறந்தார். கடவுள் உங்களுக்கு வழிவிடுவார்; களிப்படைவீர் என்று அவைகளை நோக்கி அந்தரங்கமாக ஆசி கூறியவண்ணம் நடந்தார்.

## 91

திடீரென ஏற்பட்ட ஆடுகளின் புலம்பலால் அங்கிருந்த அனைவரும் அதிர்ச்சியடைந்தவர்களாய் உணர்ச்சி வசமாயினர்.

வள்ளுவர் மெல்ல எல்லாம் பார்த்தபடியே மேடை

முன் வந்தார். அரசன் வரவேற்றான். அரசன் அருகே அமர்ந்திருந்த துறவி சமிக்கை செய்தான். ஆனால் இருக்கை எவரும் அளிக்கவில்லை.

ஆம்; யாகசாலையில் அவரவர் தகுதிக்கேற்ப தாமே போய் அமரவேண்டியதுதான்.

வழக்கத்தை அனுசரித்து வள்ளுவர் போய் எங்கும் உட்காரவில்லை. அவர் அமராது நின்ற நிலையிலேயே நிற்பதைக் கண்ட அரசன் எழுந்தான். அவர் அருகில் வந்தான்.

அரசன்: தாங்கள் யார்?

தி: என் பெயர் திருவள்ளுவன் என்பார்கள்.

அ. மதுரையில் கடந்த மாசி மாதம் குறள் அரங்கேற்றியவர்தானே!

தி: ஆம்.

அ: நல்ல சமயத்தில் வந்தீர்கள். (ஓர் இருக்கையைக் காட்டியபடி) போய் அமரும். அவிர்ப்பாகம் உண்டு ஆனந்தமடையலாம்; அதன்பின்—.

தி: அவிர்ப்பாகமா? உயிர்ப்பாதகமா?

அ: (அழுத்தமாக) என்ன அப்படி சொல்லுகிறீர்கள்?

தி: அரசே!

"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று."

அ: (திகைப்புடன்) என்ன இது?

தி: ஆம் அரசே! உண்மை இதுவே.



"உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்அது உணர்வார்ப் பெறின்."

அ: (அமைதியிழந்தவனாய்) ஏன் இப்படி சொல்லு கிறீர்கள்?

தி: (அமைதியுடன் அழுத்தமாக) நானா? அல்ல.

"பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை."

அ: உண்மைதான்; என்றாலும் நீதி முறைப்படி வேத விதிப்படி நல்வினை யாற்றவேண்டுமல்லவா?

தி: ஆம்;

"அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும்."

அ: அப்படியாயின் நாம் இறையருள் பெற வேண்டாமா?

தி: வேண்டும்; அதற்கு இதுவா வழி? அல்ல.

"தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?"

அ: அப்படியாயின், நாம் இன்பமும் சிறப்பும் எய்துவதெப்படி?

தி: அப்படிக் கேளும் அரசே!

"அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு."

அது மாத்திரமல்ல;

"என்பில் அதனை வெயில்போலக் காயுமே
அன்பில் அதனை அறம்."

அ: இதன் பொருள் விளங்கவில்லை,

தி: எலும்பே இல்லாத உடலோடு வாழும் புழுவை வெய்யில் எப்படி காய்ந்து வருத்துகிறதோ அதுபோல

அன்பு இல்லாத உடலோடு வாழும் உயிரை அறம் வருத்தும்.

அ: (வினயமுடன்) இதுகாலம்வரை எனக்கு யாரும் இப்படிச் சொல்லவில்லையே!

தி: அத்தகையவர்களை நாங்கள் ஆதரிக்கவில்லை.

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானுங் கெடும்.—அரசே?"

அரசன்: ஆம்; தன்வினை தன்னைச் சுடும் என்பதை சொல்லவும் வேண்டுமா?

இதற்குள் மேடையில் அமர்ந்திருந்த சடைமுடிதாரி முனகிக்கொண்டே எழுந்தார்; தாடியை வலது கைவிரல் களால் கோதிக்கொண்டே வந்தார்.

சடைமுடிதாரி: குறளை அரங்கேற்ற விட்டதனாலேயே உனக்குக் குறும்பு அதிகமாய் விட்டது; வீணாக வேதத்துக்கு விரோதமாய் ஏதேதோ பிதற்றுகிறாய்.

தி: நானா? அல்ல; வேடதாரியே!

"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கும் குன்றக் கெடும்,"

அதுமட்டுமல்ல;

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்."

நினைவிருக்கட்டும்.

ச: (கோரமாக) என்ன!

தி: உமக்கு இந்த வேடம் எதற்கு? பிறரை மயக்கவா; மிரட்டவா? பிறரை மயக்க எண்ணுபவன் தன்னை அறியாது தானே அம்மயக்கத்துக்கு இரையாகிறான்;

மிரட்ட நினைப்பவனும் பிறரால் மிரட்டப்படுகிறான்; வெறுக்கப்படுகிறான். ஆதலின் இவ்விரண்டும் அற்ப



எண்ணங்களாகும்; வேண்டாம்; இவ்வேடத்தை விட்டு விடும்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்."

ச: ஏது வரம்பின்றி சரமாரியாய் பேசுகிறாயே!

தி: நானா வரம்பின்றி பேசுகிறேன்? இல்லை. இதோ திருமூலர் சொல்கிறார் கேளும்:—

திருமந்திரம் (243):

"கொன்றி லாரைக் கொலச்சொல்லி கூறினார்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றி யாப்படி யிற்பிறந் தேழ்நரகு
ஒன்று வார்அரன் ஆணையி துண்மையே."

(இதற்குள் கொடுவாள் ஏந்திய கையினனாய் அந்தணன் ஒருவன் வந்தான். அவனை நோக்கி)

"தன்உயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்உயிர் நீக்கும் வினை."

அந்தணன். (கோரமுடன்) ஏன்?

தி: பாவத்துக்கு ஆளாக்கும்.

அ: கண்டது யார்? அதற்கு அறிகுறி உண்டா?

தி: சந்தேகம் எதற்கு? நாள்தோறும் நேருக்கு நேராகக் காண்கிறோமே!

"உயிருடம்பின் நீக்கியார் என்பசெயிர் உடம்பின்

செல்லாத்தீ வாழ்க்கை யவர்."

பேதமற நீக்கமின்றி புவனம் எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளை பார்ப்பவனே பார்ப்பான்; பாராதான் ஏற்பவனே யாகும். வீண்வாதம் வேண்டாம். தன்னைப் போல் பிற உயிரை எண்ணுதவன் என்னத்தான் சொன்னாலும் என் செவி ஏற்காது.

95

பார்ப்பனர்கள் கூடினர். கைக்கு எட்டியதை வாய்க்கு வராமல் தட்டி விடுகிறனே! கெட்ட மனிதனாக அல்லவா இருக்கிறான் வள்ளுவன். சொல்லுக்குச் சொல் சுட்ட பணியாரம்போல கொட்டுகிறன் குறளை; மேற்கோளும் கொடுக்கிறனே திருமந்திரத்தில். இவ்வளவு வருமானங்களையும் வீணாக விடுவதா? இவ்வளவு பேர் இருந்தும் ஒருவனை வாதில் வெல்லாது விடுவதா? முடியாது; முடியாது; முடிசூடிய மன்னர் நம் சார்பி லிருக்கும் வரை எவரையும் எதிர்க்கலாம்; யாகம் முடிக்கலாம்; பாகம் பண்ணலாம்; பக்குவமாய் உண்ணலாம் என்றவாறு எழுந்தான்; வள்ளுவரை நோக்கி வந்தான் அந்தணன் ஒருவன்.

அந்தணன்: வள்ளுவரே! செல்லும். உம் வாய் மொழி நம்பி நாங்கள் வேத விதிப்படி ஆரம்பித்த வேள்வியை வீணாகும்படி விட்டு விடுவோமா?

தி: வேதவிதி அறியாத வேதியரே! வாதம் வேண்டாம். காப்பின் கடவுளான விஷ்ணுவின் அவதாரங்களைப் பற்றிப் பேசும் பாகவதத்தில் இதேபோல அயமேத யாகம் செய்ய ஆரம்பித்தான் அரசன் பிராச்சீன பர்கி

ஆவிர்த்தானன். அதுசமயம் தற்செயலாக திரிலோக சஞ்சாரியான நாரதர் அங்கு வந்தார். மேலோகத்தில் இந்த யாகத்தால் யாக தலைவனுக்கு நடக்க இருப்பவை களை எடுத்துச் சொல்லுகிறார்; கேளும் சொல்லுகிறேன்:

பாகவதம் நாலாவது ஸ்கந்தம். பிராச்சீன பரிஷி ஆவிர்த்தானனுக்கு நாரதர் அருளியது :—

1. அயமகத்தினில் அரசநீ படுத்தவம் மறிகள்
   செயிர்த மைந்துகண் டியுக வரவுபார்த் திருக்கும்
   பயில்வி சும்புசெல் காலையில் வெருவரப் பாய்ந்து
   வயிறு போழும்வல் லிருப்பினெண் மருப்பினின்
   [மாதோ.



2. படுத்திடு மறிகள் வேள்வி புரிந்தவன் பனிவி சும்பின்
   அடுத்திடுங் காலநோக்கி அழல்விழி யொழுகப் பாய்ந்து
   வடித்தகா ரிருப்பிற்செய்த மருப்பினால் வயிறு
   [போழ்ந்தது
   எடுத்துநா முரைக்குங் கேட்டி இறைவவென்
   [றுரைக்க லுற்றான்.

3. மகமி யற்றுழி மாய்த்த மறியெலாம்
   நிகழி ருப்பினிற் செய்த மருப்பினால்
   நகுபொன் னுட்டக நண்ணுபு ரஞ்சன
   னகடு கீண்ட அழன்றெதிர் குத்தியே.

4. பண்ணவன் அகல ஒன்றும் பற்றில னாகிச் செங்கட்
   கண்ணனை உளத்து நாடிக் கபிலன திருக்கை சார்ந்து
   விண்ணவர் வழுத்தும் வண்ணம் விழுத்தவம் பலவு
   [மாற்றி
   அண்ணலந் தனிவீட் டின்ப மண்மினன் அரச ரேறே.

அந்தணன்: இது கடந்த யுகத்தின் கதையல்லவா?

இ: ஆம்; இதோ கலியுகத்தில் நடந்த கதையைச் சொல்லுகிறேன் கேள். சற்று ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் நடந்ததாகும்:—

கௌதம புத்தரைப்பற்றி கேள்விப்படாதவர்கள் உண்டா? இல்லை. இருக்க வழியில்லை. அன்பே உருவமானவர்; ஆருயிர் தொண்டே வாழ்வின் லட்சியமாய் கொண்டவர் கண்டவர் வணங்கும் கருணையாளர்.

அரசன் பிம்பிசாகரன் அயமேத யாகம் செய்ய வாரம்பித்தான். அதைக் கேள்வியுற்றார் புத்தர்; யாக சாலையை அடைந்தார்; எல்லாக்கும் உண்மையை எடுத்து உரைத்தார். தன் அறியாமைக்காக அரசன் வருந்தினன்; அக்கணமே திருந்தினன். அனைவருக்கும் அருளாளர் தலைமையில் அஹிம்சா விருந்து அளித்தான். அனைவரும் களித்தனர். ஆடுகளும் கேடின்றி விடுவிக்கப்பட்டன.



அரசன் (ஆத்திரமுடன்): கேள்விப்பட்டிருக்கிறேன். என் கெட்ட காலத்திலும் நல்ல காலம் வந்துவிட்டது. அதனால்தான் ஆடுகள் வெட்டப்படுமுன் அருளாளர் வந்து விட்டீர்கள். பெருந்தகையே! திருந்தி விட்டேன். என் அறியாமை அகன்றது; அநியாயம் தெரிந்தது. மக்களைக் கொன்று என்றேனும் மாதா பிதாக்களை மகிழ் வித்தோரும் உண்டா? அந்தோ! ஆருயிர்களை வதைத்து ஆண்டவனை பூசிப்பதா? ஆருயிர்களிடம் நேச மனப்பான்மை இல்லாதவன் நீசனே யாகும். அவன் ஈசனை பூசிப்பதாய் சொல்வதெல்லாம் கொல்வதை மறைக்கச்

செய்யும் பித்தலாட்டமேயாகும்.

அவிர்ப்பாகமா இது? அல்ல; அறியாப் பாதகம். வேண்டாம்; வேண்டாம்; வேள்வியும் வேண்டாம்; விண்ணவர் மகிழ்வும் வேண்டாம். என் கண்முன் இருப் பவைகளுக்கு நான் காலனாக விரும்பவில்லை.

ஆடுகளை அவிழ்த்துவிடும். அந்தணர்களே! அந் தணலில் அறுசுவை உணவை ஆக்குங்கள். திருவள்ளு வரின் போதனையைக் கேட்டுத் திருந்தியதற்கு அறிகுறி யாக அவருடன் விருந்துண்போம்.

திருவள்ளுவப் பெருந்தகையே! தொல்லுலகம் உள்ள வரை தேவரீர் கீர்த்தி இளரொளியுடன் விளங்கும்.

விருந்து முடிந்தது. திருவள்ளுவர் மன்னனிடம் விடைகேட்கிறார்.

தி: அரசே! போய் வருகிறேன்.

அ: ஐயனே! அடியேனுக்கு ஒரு சந்தேகம்.

தி: என்ன அது?

அ: நல்லாரை பேணுவதும் தீயோரை தண்டிப் பதும் அரசன் வேலை அல்லவா?

தி: ஆம்; சந்தேகமென்ன!



"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்."

இது மன்னனுக்கு மட்டுமல்ல; மக்களாய் பிறந்த ஒவ்வொருவருக்கும் உண்டான கடமையாகும். இதை மறுப்பவர்கள் மடமைக்கிடமாய் மக்களுக்குள் மாக்களாய் வாழ்பவரேயாகும். அதிலும் மன்னனாயிருப்பவன் மக்களுக்கு நன்மை செய்ய எவ்வளவு உரிமை உண்டோ; அவ்வளவுக்குத் தீயோரைத் தண்டிக்கவும் கொடுமையை அழிக்கவும் உரிமையுண்டு.

அ: (சந்தேகமுடன்) உண்மையாகவே சொல்கிறீர்களா?

தி: இதில் சந்தேகம் வேண்டாம், வேந்தே!

"கொலையில் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்."

என்பது எப்போதும் நினைவிலிருக்கட்டும்.

# 18. வாசுகி

வள்ளுவரை வழி அனுப்பிய பின் வாசுகி அம்மைக்கு வேலை இரட்டிப்பானது. வீட்டு வேலையையும் கவனிக்க வேண்டும்; அதோடு வாழ்வுக்கு வேண்டிய வருவாயையும் தேடிக்கொள்ள வேண்டும். எனவே வீட்டு வேலை முடிந்தவுடன் உண்ணும் உறங்கும் நேரம்போக ஓய்வின்றி நூல் நூற்கும் வேலையை மேற்கொண்டார். அதனால் வரும் ஊதியத்தைக் கொண்டே தன் வாழ்வை நடத்தினார். கூழுங் கீரையுமே அவர் வாழ்வுக்குப் போதுமானதாயிருந்தது. அதனால் சிறு ஊதியமும் நாள்தோறும் மீதியானது. தன் கணவர் திரும்பி வந்தபின் கொஞ்சகாலம் ஓய்வுகொள்ள ஏதுவாயிருக்க வேண்டும் என்னும் ஆவல்

அதிகரித்தது அதனால் மேன்மேலும் உழைத்து மிச்சப் படுத்தினார்.

தன் மகள் தனிமையில் இருப்பதைக் கேள்வியுற்ற மார்க்கசகாயன் வாசுகியின் இல்லம் வந்தார். வள்ளுவர் சென்ற விவரம் தெரிந்தார். அவர் திரும்பி வரும் வரையிலாவது வந்து தன் வீட்டிலிருக்கும் வண்ணம் சொன்னார். வாசுகி இணங்கவில்லை.

மார்: அம்மா! கணவன் இல்லாதபோது பெண்கள் பெற்றோர்களுடனிருப்பதே உற்ற துணையும் போற்றத் தக்கதுமாகும்.

வாசுகி: அப்பா!

"சிறைகாக்குங் காப்புளவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை."

—ஆதலின் எங்கும் யான் செல்ல வேண்டியதில்லை.

மா: தந்தை சொல் மிக்க மந்திரமில்லை.



வா: எந்தையே! தன் கையே தனக்கு உதவி என்பதற்கு இணையாக எதுவுமே இல்லை.

மா: உண்மைதான்; என்றாலும் தனிமையிலிருக்க உனக்கு இவ்வளவு துணிவு எப்படி வந்தது?

வா: உள்ளத் துணிவு இல்லாதவர்களுக்கு உலகத்தில் வாழ்வேது? அவர்கள் வாழ்ந்தும் வாழாதவர்களே யாகும். நானோ வாழ விரும்புகிறேன். அதனால் துணிவு என்னுள் வலிய வந்து வாழ்கிறது.

மா: அப்படியாயின் நான் தனியே திரும்ப வேண்டியதுதானு?

வா: தனியேதானே வந்தீர்கள்?

(ஒரே மௌனம்.)

அப்பா; எனக்கு ஒரு குறைவும் இல்லை. குறிப்பறிந்து உதவ ஏலேலசிங்கம் ஏங்கி நிற்கிறார். அவர் மனைவி சிந்தாமணியோ சிந்தாமணியே (விரும்பியதைக் கொடுக்கவல்ல தெய்வமணி)தான். எனவே சிந்தாகுலம் விட்டு எந்தையே மீரும்.

மா: என்ன அப்படிச் சொல்லுகிறாய்?

வா: ஆம் அப்பா! எங்கள் மேல் அச்சதிபதிகளுக்கு இருக்கும் அன்பை அளவிட்டுரைக்க முடியாது. ஒரு சமயம் அவ்விருவரும் இங்கு வந்திருந்தபோது என் நாயகர் "எங்கள்மேல் உங்களுக்கு இவ்வளவு பற்றுண்டாகக் காரணம் என்ன" என்றார். அதற்கு மறு உத்திரமாக சிந்தாமணி "ஐயா; இதில் அதிசயமென்ன? பற்றற்றோரை பற்றுடையோர் பராமரிக்க விரும்புவதும் போற்றுவதும் இயல்புதானே!" என்றார். இதைச் செவியுற்ற என் நாதர் மௌனமானார். பிறகு நான் "என்னரும் சிந்தாமணி! சேடிகள் உன் ஏவலுக்காக காத்திருக்கும் போது உன் கை நோக இங்கு உழைப்பது ஏனோ?".



என்றேன். "நீதி முறைக்கேற்ப நடக்கிறேன்" என்றார். நானும் மௌனமானேன்.

மா: நானும் மௌனமானேன்.

வா: அப்பா; புத்திரவாஞ்சை பொல்லாதது; அது

கொல்லாது கொல்லும் சுபாவமுடையது; வல்லோரை யும் கட்டிவிடும் வழுக்குப் பாறைக்கு நிகரானது. எல்லாரும் இதற்கிரையாகி இன்னலடைகின்றனர். ஆதலின் என் பொருட்டு எதையும் சேர்த்து வைக்க வேண்டாம். தானம் செய்வதே தன் சொத்து; தனக்கு உதவுவதாகும். சேர்த்து வைப்பதோ பிறர் சொத்து; தொத்து வியாதிக்கு இணையாகும்.

மா: பேசுவது வாசுகிதானு?

வா: அப்பா; இராமனுக்காக தசரதன் உயிர் விட்டான். திரியோதனுதியர்களுக்காக திருதராஷ்டிரன் நீதி தவறினன் அதனல் ஏற்பட்ட அல்லலைச் சொல்லவும் வேண்டுமா? பொல்லாத சசிவன்னனுக்காக பாகளக்குன் பட்டபாடு கொஞ்சமா? தான பலனை விரும்பிய வாசஸ்ரவஸ் என்ற மகரிஷி தன் மகன் நசிகேதசுக்காக நல்ல பொருளை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு ஒன்றுக் கும் உதவாதவைகளையே தர்மம் செய்தான் அல்லவா?

மா: உண்மைதான்.

வா: ஆதலின் ஆனவரை தானம் செய்யும்; அதற்குப்பின் இருப்பவைகளை பொறுப்புள்ள புண்ணிய வான்களிடம் விட்டுவையும். அதனல் தர்மம் தலைத் தோங்கும்; அதர்மம் குறையும்.

மா: மர்மம் அறிந்தேன்; மகளே வருகிறேன்.

* * *

மார்க்கசகாயன் மூலம் வாசுகியின் நிலையைக் கேட் டுணர்ந்த வாசுகியின் பால தோழிகள் பலர்கூடி பார்க்க வந்துவிட்டனர். எல்லாரையும் அன்றுபோல் இன்றும்

இன்முகமுடன் வரவேற்ருள் வாசுகி. இடைவேளைக கேற்ற சிற்றுண்டியையும் செய்து அளித்தாள். எல்லாரும் உண்டு களித்தனர். இனி வாயாடிவிட்டு விடைபெற வேண்டியது தான்.

மல்லிகா: (ஏளனமாக வாசுகியை நோக்கி) பயித்தியக்காரி!

வாசுகி: உண்மைதான். எல்லாரும் ஏதேனும் ஒன்றுக்காக பயித்தியம் பிடித்துத்தானே அலைகிறுர்கள்.

மஞேரஞ்சிதம்: ஏது ஊமைப் பெண் பேசுகிறுளே!

(எல்லாரும் 'கொல்' என்று சிரித்தார்கள்)

சுந்தரம்: அப்பன் உதவியையும் மறுத்துவிட்டு தான் இப்படியா உழைப்பது?

வாசுகி: தந்தை உதவியை ஏற்பதாயிருந்தால் தனக்குக் கை இருப்பது எதற்கு? தனித்து வந்து குடும்பம் நடத்துவதின் அர்த்தம் என்ன?

கோகிலம்: அப்படியாளுல் அப்பன் சொத்தை மகள் அனுபவிக்கக் கூடாது என்கிறுயா?

வா: அப்படியாளுல் அப்பன் சொத்து அறவழியில் பயன்படக்கூடாது என்கிறுயா?

கோ: இல்லை. ஆளுல்—

வா: பிறர் உழைப்பில் தான் வாழவிரும்பும்போது; சுயநலம் கருதும்போது; பரநலம் பாழ்பாடுகிறது என்பதை உணர்கிறுயா?

மல்லிகா: இந்த எளிய வாழ்வை எப்படி மேற்கொண்டாய்?

வா: வாழ்வின் இரகசியம் உணர்ந்தபின் வேண்டுவன அதிகம் இல்லையே!

ம: வாழ்வின் இரகசியம் என்ன?



வா: ஊக்கங் குன்றாதிருத்தல்; உள்ளதைக்கொண்டு திருப்தியடைதல்; ஏற்பதை வெறுத்தல்; எல்லாரையும் தன்னைப்போல் நேசித்தல்.

கோ: அப்படியா?

வா: ஆம்; உண்டுறங்கி மனோராஜ்யம் செய்வதால் கண்டபலன் என்ன? நேற்றைய நிலையோ இன்றைய கனவு; நாளைய நிலையோ கானலின் அலையாகும், இவ்விரண்டையும் உணர்ந்தபின் வாழ்வை நோக்கினால்—.

எல்லாரும்: (எழுந்து ஏகமனதாக) உண்மைதான்.

* * *

வாசுகி வியாதிக்கிரையானார். நோய் நாளுக்கு நாள் வளர்ந்தது. அதனால் உடல் தளர்ந்தது, படுக்கையோடு படுக்கையானார். முன்னை வினையால் வந்த தொடர்பென ஏலேலசிங்கன் மனைவி சிந்தாமணி வந்தாள். வாசுகியின் நிலையறிந்து மனமுவந்து தானே எல்லா வினைகளையும் ஏற்று ஆற்றிவருகிறாள்.

மாதம் ஒன்று, இரண்டு என மூன்றும் கழிந்தது. நான்காம் மாதமும் ஆரம்பமானது. தன் நாயகனைப் பற்றி வாசுகிக்கு ஒன்றும் தெரியாது; சொல்வாரும் இல்லை.

என்றாலும் இடையிடையே சிந்தாமணியிடம் வள்ளுவரைப் பற்றி வாசுகி ஏதேனும் சொல்வார். அதை

நோயாளியின் பிதற்றல் என்றே சிந்தாமணி நினைத்தாள்.

மாலை வெய்யில்பட வேண்டி முன் வாசலில் வந்து நாள்தோறும் கொஞ்சநேரம் வாசுகி நிற்பதுண்டு. ஒருநாள் வழக்கம்போல் வந்து நின்றார். வெகு தூரத்தில் வள்ளுவர் வருவதைக் கண்டார். "சிந்தாமணி! அதோ ஐயா வருகிறார்; திட்டி கழிக்கவேண்டும்; சீக்கிரம் அதற் கான மஞ்சள் நீர் முதலானவைகளைக் கொண்டு வா" என்றார்.

104

திருவள்ளுவர் முன் வாயிலுக்கு வந்ததும் தானே இட்டிகழித்து வரவேற்றார். அதை சிந்தாமணி கண்டு களித்தாள்.

வாசுகியின் நிலையைக் கண்ட வள்ளுவர் தமக்குள் விண்ணுறியுங் காலம் வெகு தூரம் இல்லை என்பதை நன்குணர்ந்துக் கொண்டார். என்றாலும் அவர் சும்மா யிருக்கவில்லை.

"நோய்நாடி நோய்முத லுடி அதுதனிக்கும்
வாய்நாடி வாய்ப்ப செய்தார்."

அதனால் வாசுகியின் நோய், நீங்காவிட்டாலும் உடல் கொஞ்சம் குணப்பட்டது. பிறர் உதவியின்றி நடமாடினார்.

ஒருநாள் மாலை நேரம்; மென்காற்று வீசுகிறது. பந்தல்மேல் படர்ந்துள்ள முல்லை மலரின் மணம் வேறு வருகிறது. முன் திண்ணையில் வள்ளுவர் வந்து உட்கார்ந் தார். வாசுகி வந்து வாசல்படியண்டை நின்றார். சிந்தாமணி செல்லக் குழந்தைபோல் வந்து அவர்களி

டையே அமர்ந்தாள்.

வாசுகி: தாங்கள் திருக்குறளுடன் பொற்றாமரைக் குளத்து சங்கப்பலகையில் வீற்றிருந்த காட்சியை அன்று மாலையே கண்டு களித்தேன். புலவர்கள் தண்ணீரில் தத்தளித்தனர். ஆகாசவாணியும் அருள்கூர்ந்து ஆசி கூறியதையும் கேட்டுக் களிப்படைந்தேன்.

தி: அப்படியா? எங்கே அச் செய்யுளை சொல் பார்க்கலாம்.

வா: (மெல்ல வீட்டுள்ளே சென்றார். ஏட்டோலை ஒன்றை எடுத்து வந்து நீட்டிபடி) இதோ அச் செய்யுள். அப்படியே குறித்து வைத்திருக்கிறேன்; வாசித்துப் பாருங்கள்.



தி: (அதை வாங்கி வாசித்து விட்டு) சரிதான்.

வா: மறுநாள் தாங்கள் தமிழ் சங்கத்தில் திருக்குறளை அரங்கேற்றிய வைபவம் வெகு விமரிசையாக இருந்தது.

தி: அதையும் கண்டு களித்தாயா?

வா: (ஏட்டோலை கட்டொன்றை நீட்டிய வண்ணம்) ஆம்; இதோ அரங்கேற்றம் முடிந்ததும் அங்கிருந்த புலவர்கள் திருக்குறளுக்குப் பாடிய புகழ் மாலையையும் குறித்து வைத்திருக்கிறேன்.

தி: (அமைதியுடன் அதையும் வாங்கி விரித்துப் பார்த்து விட்டு) எல்லாம் சரிதான்.

வா: இவைகளையும் திருக்குறள் கட்டோடு சேர்த்துக் கட்டி வைக்கலாம் அல்லவா?

தி: செய்.

வா: தாங்கள் சோழ மன்னன் யாகசாலையில் செய்த வாதங்களையும் கேட்டேன்; ஆடுகள் எல்லாம் அவிழ்த்து விடப்பட்டதையும்; அஹிம்சா விருந்து நடந்ததையும் கண்டு களித்தேன்.

தி: அப்படியா? சரி: சரி; எல்லாவற்றையும் குணமான பின் கூறலாமென்றிருந்தேன்; நீயோ எல்லாவற்றையும் நேருக்கு நேராய் கண்டனுபவித்திருக்கிறாய்.

சிந்தாமணி: ஐயா! அம்மா அவ்வப்பொழுது எல்லாவற்றையும் சொன்னார்கள்தாம். நானே அதை நம்பவில்லை. நோயினால் ஏதேதோ ஏற்பட்ட எண்ணத்தை என்னிடம் சொல்லுகிறார்கள் என்றே எண்ணினேன். இன்றுதான் அன்று அம்மா சொன்னது எல்லாம் உண்மையே என்று உணர்கிறேன். இத்தகைய சக்தி அம்மாளுக்கு எப்படி ஏற்பட்டது என்பதை தாங்கள் கருணைகூர்ந்து சொல்ல வேண்டும்.



தி: அதை என்னிடம் கேட்பது ஏனோ? அம்மாளிடமே கேட்டறியலாமே.

சி: (வாசுகியை நோக்கி) அம்மா; எனக்கு அதை அருள்கூர்ந்து சொல்லியருள வேண்டும்.

வா: என் கண்ணே! – சிந்தாமணி! கற்புடைய பெண்களுக்குக் கணவர் செயல் யாவும் கண்ணாடியில் தோன்றும் சாயைபோல செவ்வையாய் தோன்றும். இதில் சந்தேகம் வேண்டாம்.

திருமணம் ஆனபின் இருமணம் இல்லை; ஒரு மனம்

தான் இரு உடலிலும் இயங்குகிறது. கணவர் மனம் சுதந்திரமானது; மனைவியின் மனம் அதைச் சார்ந்து வாழ்வது இவ்வுண்மையை உணர்ந்து நடக்கும் சதிபதிகளிடையே வாதம் வர வழியில்லை. கணவர் கருத்தறிந்து நடப்பதால் பெண்ணின் மனம் எப்பொழுதும் பின்னமின்றி கணவர் மனத்தோடு கலந்தே நிற்கும், அத்தகைய நிலையில் ஊனுடல் பிரிந்தாலும் உள்ளம் மட்டும் பிரிவதே இல்லை. எனவே வெகு தூரத்திலிருக்கும் கணவர் செயலை மனைவி உணர்வது கடினமல்ல; சகஜம்.

இதில் நம்பிக்கை வை; நாணயமாயிரு; நான் என்பதை அகற்று: எல்லாம் அவர் என்றே எண்ணு என் கண்ணே! அப்பொழுது உன் உடல் மட்டுந்தான் தனித்திருக்கும். உள்ளமோ அவர் உடலோடு ஒன்றியே செல்லும். அப்பொழுது கருமாதீனமாக வந்த உன் உடலோ மென்மை மிகுந்து சடம் நடமாடுவதை ஒக்க இருக்கும். இது சிரமமான காரியம் என்று எண்ணாதே! சித்த சுத்தி யுள்ளவர்களுக்குச் சுலபமாய் கைகூடும்.

சி: அம்மா; கணவர் மனத்தோடு ஒன்றுபட்டு வாழும் தங்களுக்கு இந்த ரத்தக் கொதிப்பு வரக் காரணம் என்ன?



வா: என் செல்வமே? அவர் புகழைக் கண்டு நான் பெரு மகிழ்ச்சி யடைந்தேன்; அதன் விளைவுதான்.

சி: என்ன அப்படிச் சொல்கிறீர்கள்.

வா: ஆம்; அப்படித்தான். ரத்தக் கொதிப்பு நால்

வகையோர்களுக்கு வருவது வழக்கம். (1) அளவுக்கு மீறிய இன்பம்; (2) அளவுக்குமீறிய துன்பம்; (3) அளவுக்கு மீறிய போகம்; (4) அளவுக்குமீறிய ஆராய்ச்சி ஆகிய நால்வகையோர்களுக்கு வருவது இயற்கை.

## 19. திருக்கைலாயம்

பூத நாதன் ஏதோரு எண்ணமும் இன்றி அமர்ந்திருக்கிறார். இறைவியோ துறவியின் அருகில் அமர்ந்திருக்கும் இளம் நங்கையின் நிலைக்கு ஏற்ப உடலும் உள்ளமும் கொண்டவளாய் அவர் அருகில் அமர்ந்திருக்கிறாள்.

பக்தர்களும் யோகிகளும் பரபரப்புடன் வந்து வணங்கிய பின் தமக்குரிய இருக்கையி லமர்ந்தனர்.

இவர்கள் நடுவில் கந்தன் காவடி தூக்கி ஆடுகிறான். கணேசன் அவன் ஆடுதற் கேற்ப தலையை அசைத்த வண்ணம் தன் தொந்தியின் மேல் இரு கைகளாலும் தாளம் போடுகிறான். துதிக்கை தூக்கி தாரை போல் ஊதுகிறான்.

நந்தி தேவனோ மூன் வாயில் அமர்ந்தபடியே எல்லாவற்றையும் கூர்ந்து கவனிக்கிறான்.

ஆட்டம் முடிந்ததும் கந்தன் ஓட்டம் பிடித்தான். கணேசனும் அவனைப் பின் தொடர்ந்தான். கந்தனை தாவி அணைத்து முத்த மிட்டாள் பார்வதி. கணேசனை சேர்த்து அணைத்து முத்த மிட்டான் பரமசிவன். அது

மற்றவர்களுக்கு :

"பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற."

என்பது போல இருந்ததாம். ஆ! அந்த இன்பத்தை என்னென்பது? ஆடிய உடலைத் தடவி இன்பமடைகிறாள் அன்னை. தலை அசைத்துத் தாளம் போட்ட தொந்தியையும் கைகளையும் தடவி மகிழ்கிறான் தந்தை. அது அங்கிருந்தவர்களுக் கெல்லாம்

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு"

என்று கூறுவது போல இருந்ததாம். கந்தனும் கணேசனும் பேச ஆரம்பித்தனர். பெற்றோர்கள் தடவுவதை விட்டனர். மக்கள் மழலை மொழியில் மகிழ்ச்சி யுற்றனர். அது அங்கிருந்தவர்களுக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணியதோடு ;

"குழல் இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளா தவர்."

என்று சொல்லுவது போல இருந்ததாம். என்ன விந்தை! கந்தனும் கணேசனும் வெடுக்கென தம்மை விடுவித்துக் கொண்டு ஓடி மறைந்தனர் அது அவர்களுக்கு :

"நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை."

என்பது போல இருந்ததாம். ஆம் அது முற்றும் உண்மை தான். உடல் இன்பம் எல்லார்க்கும் ஒரு நிலையில் நில்லாதது தானே ?

பிள்ளைகள் போனபின் பார்வதி சொல்லுகிறாள் ;

" இல்லறம் துறவறம் இரண்டின் உயர்வை அறிந்துவர சென்ற கொங்கணவர் இன்னும் வரவில்லையே ".

பரமசிவன் : போன காரியம் பூர்த்தியானால் தானே திரும்பி வருவான்.

பார்வதி : கைலாயம் விட்டுப் போனதும் கர்ம பூமியின் மர்மத்தில் மயங்கி விட்டாரோ என்னமோ.

ப : அப்படிப் பட்டவன் அல்ல ; வைராக்கியவான். காரியம் முடிவதற்காகவே காத்திருப்பான். வெற்றியுடன் வருவான் பொறு.

திருமூலர் : அம்மா ! அதோ வருகிறான்.

நந்தி தேவன் : வாரும் கொங்கணவரே !



எங்கெங்கு சென்றீர் ? ஏதேது கண்டீர் ?
பொங்கும் கடல்சூழ் பூஉலகு எங்கும்
மங்கா மகிமையுள மார்க்கம் இரண்டின்
சங்கை தீர்ந்ததா ? சென்றது முடிந்ததா ?

கொங்கணவர் : (குதூகலத்துடன்) சங்கை தீரா மலா திரும்பி வருவேன்.

நந்தி : (மெதுவாக) எது ?

கொ . (இனிமை தோன்ற) இல்லறம்.

ந : (வியப்புடன்) என்ன !

கொ : (உறுதியுடன்) ஆம்.

ந : (அழுத்தமாக) எப்படி ?

கொ : (புன்முறுவலுடன்) கூறுகிறேன் கேள் :

பாடுகிறான் :

கைலாய வாசிகள் கருத்தைக் கவர்ந்தானோர்

மைலாப்பூர் வாசி; மைலாப்பூர் வாசி.

ந: (வியப்புடன்) என்ன! தமிழனு?

கொ: (பெருமிதமுடன்) ஆம்;

ஓயிலாக செய்வான்; உயர்வாக வாழ்வான்
அயலாரை நாடான்; ஐயுறவு அகன்றுன்
செயல்வழியில் நின்றுன்; சித்திகளை வென்றுன்
கயல்விழி மனையாள் கற்புக்கு உரியாள்
கர்மம்பக்தி யோகம் கலங்காத ஞானம்
சர்வமும் கொண்டான்; சகலரையும் வென்றுன்
இல்லறத்தி லிருந்தே யாவையும் கண்டான் (கை)

ந: (ஆச்சரியமுடன்) இவ்வளவுமா?

கொ: (புன்முறுவலுடன்) இன்னும் கூறுகிறேன் கேள்:

சங்கரரே வந்தார் கங்கையை தந்தார்
அரியயன் வந்தார் அருள்கூர்ந்து சென்றுர்



இந்திரனே வந்தான் இறுமாப்பை விட்டான்
நாதர் வந்தார் நாணியே சென்றுர்
சீதேவி மூதேவி செயலற்றுப் போனுர்கள் (கை)

ந: (அழுத்தமுடன்) இத்தனைப் பேரும் வந்தார்களா? யார் அவன்?

கொ: சந்தேகம் எதற்கு? இன்றும்:

நல்லுணர்வு உள்ளோர் நாளும் போற்றுர்
தொல்வினை உணர்ந்தோர் துதிபாடுகின்றுர்
வல்வினை வலியால் வள்ளுவரை சந்தித்து
இல்லறமே உயர்ந்ததென யான்உணர்ந்து வந்தேன்
(கை)

பார்வதி பெருமித மடைந்தாள்; பாரிஜாத மலர் ஒன்றை கொங்கணவருக்கு பரிசாக கொடுத்தாள். பக்தர்கள் போற்றினர்; தேவர்கள் துதி பாடினர். பூத கணங்கள் பூரித்தனர். பரமசிவனோ உறங்கியவனைப் போல உள்ளொளியில் விழி நாட்டங் கொண்டு வீற்றிருக்கிறான்.

சித்தர்களும் யோகிகளும் சிந்திக்கலாயினர்.
மூற்றுணர்ந்த ஞானிகள் மௌனமுற்றனர்.

வாதிகள் எழுந்தனர்: கொங்கணவர் கூறியதில் எங்களுக்கு—

பார்வதி: (வியப்புடன்) என்ன!

வா: (அடக்கமுடன்) அன்னையே மன்னிக்க வேண்டும்.

பக்தர்கள்: (அழுத்தமுடன்) கொங்கணவர் கண்டறிந்து வந்ததின் கருத்தென்ன?

சித்தர்கள்: (விழிப்புற்றவர்களாய்) நிறுத்துங்கள்.

பரமசிவன்: (அமைதியுடன்) சபையோர்களே! சற்று பொறுங்கள். சார்பற்ற சுகதேவர் கண்டறிந்து வரட்டும்.

## 20. வாசுகியின் மறைவு

தன் தந்தையான மார்க்கசகாயனை பார்க்க விரும்பினார் வாசுகி. வாசுகியின் உடல்நிலை நடமாடுவதற்குக் கூட முடியாத நிலைக்கு வந்துவிட்டது. அதனால் வள்ளுவர் சொல்லி அனுப்பினார். ஏலேல சிங்கரின் ஏவலாள் மறுநாளே மார்க்கசகாயனுடன் வாசுகியின் அன்னையை

யும் அழைத்து வந்தான். இளைத்த உடலோடு இயங்கும் பாவை போலிருக்கும் தன் மகனைக் கண்ட பெற்றோர்கள் வருத்தமுற்றனர்.

வாசுகி: (தன் அன்னையை நோக்கி) வருத்தம் வேண்டாம் அம்மா! கரு தரித்த காலம் இருந்தே உருவம் மாறிக்கொண்டே வருவதை உணர்ந்திருக்கும் தாங்கள் வருந்துவது ஏனோ? கரு தரித்தல்; பிறத்தல்; வளர்தல்; பருத்தல்; சுருங்கல்; ஒருங்கல் ஆகிய ஆறு விகாரங்களும் உடையது தானே ஊனுடல்?

அன்னை: (தேம்பிக்கொண்டே) கண்ணே! உண்மை தான் எனக்கும் தெரிகிறது. தாய் உள்ளம் தடுமாறத் தானே செய்யும்.

வா: (வேதனையுடன்) அம்மா அழவேண்டாம்; இறைவனை; இதயத்துள் உறைபவனை கண்டறிய உறுதி கொள்ளுங்கள். கவலை நீங்கும்; வேதனை விலகும்.

(தந்தையை நோக்கி) அப்பா; அன்று நான் சொன்னதை.

மார்க்கசகாயன்: அம்மா! அப்படியே உன் விருப்பம்போல் பெரும் பொருளை அறவழியில் செலவழித்து விட்டேன். எதிர்காலத்துக்கு வேண்டிய சேமநிதி மட்டும் தான் எஞ்சியிருக்கிறது.



வா: (பெருமூச்சுவிட்டபின்) என் சஞ்சலம் ஒழிந்த தப்பா!

இவ்வார்த்தை மார்க்கசகாயனுக்கு:

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்

பண்புடை மக்கட் பெறின்"

என்று உறுதி கூறுவதுபோல தோன்றியதாம். ஆம்; அறவழியில் பொருளை செலவழிப்பவர்களுக்கு பிற வழி ஏது? இல்லை அல்லவா?

இந்நிலையில் சிந்தாமணி வந்தாள். அவளிடம் வாசுகி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். வாசுகியின் கலங்கிய வார்த்தை வள்ளுவர் காதுக்கெட்டியது. உடனே வெளித் திண்ணையிலிருந்தவர் உள்ளே வந்தார்.

வள்ளுவர்: வாசுகி!

மண்ணுலகம் உள்ளவரை மாறா புகழிருக்க
என்னகுறை கண்டு ஏங்குறாய்? என்இறைமையே!
ஒள்ளும் தமிழும் ஒப்பற்ற குறளும்
வெல்லுமே உன்வேதனையைத் தாம்.

வாசுகி:

(1) மக்கட்பே றில்லார் மாநிலத்தில் வாழ்ந்தாலும்
சொக்கம் கிட்டாதென சொல்லுகிறார்—எக்காலும்
பதிசேவை அல்லாது பாருலகில் வேறோர்
கதியுண்டோ? மதியுண்டு காண்!

(2) பேணுவா ரற்றுநாடு பிறர்க்கடிமை யாயினும்
வானுலகம் உள்ளவரை வாழுமே!—வேணும்
அறம்பொருள் இன்பம் வீட்டுநெறி யாவுக்கும்
தரம் அறிந்து கூறும் குறள்.

(3) மதத்தை வெறுக்குமவர் குறளை உணருங்கால்
மதம்அடங்கி மாறுவர் மற்று—இதமுடன்
தேடுவர் தெய்வத்தை தம்முள்ளே என்றென்றும்
நாடுவர் உள்காட்ட மதையே.

வ: உண்மைதான்.

வா: ஐயா; அடியாளுக்கு ஒன்று அருள் கூற வேண்டும்.

வ: (ஆச்சரியமுடன்) என்ன அது? என் இதய நாயகி! உடனே சொல்.

வா: தாங்கள் உண்ண உட்காரும் சமயமெல்லாம் கிண்ணத்தில் தண்ணீரும் ஊசியும் கொண்டுவந்து பக்கத்தில் வைக்கச் சொன்னீர்களே! அது எதற்காக? அதைத் தாங்கள் ஒரு சமயம் கூட உபயோகப்படுத்தவில்லையே ஏன்? அதை அறிய ஆசைப்படுகிறேன்.

வ: பரிமாறும் பொழுது உணவு சிதறினால் உடனே பக்குவமாய் அதை அவ்வூசியினால் எடுத்து அந்நீரில் அலம்பி உண்ணுவதற்காகவே அவ்விரண்டும் கொண்டுவந்து வைக்கச் சொன்னேன். அவைகளை பயன்படுத்த என் கண்ணே! நீ எனக்கு வாய்ப்பளிக்கவில்லை.

வாசுகி அம்மையாருக்கு அவ்வார்த்தைகளைக் கேட்டதும் பிறவிப் பயனை பூரணமாய் பெற்று விட்டோம் என்ற எண்ணம் எழுந்தது; இதயம் குளிர்ந்தது; மலர்ந்த முகத்தோடு கணவனை நோக்கினார். அந்நோக்கில் பதி சேவையில் பாக்கியம் பெற்றவளாகி விட்டேன் என்ற கருத்து விளங்கியது.

ஆடி அணையும் சுடர்போல அம்மையாருக்கு அடுத்த விநாடியே மேல் மூச்சு வாங்க ஆரம்பித்தது. அந்தோ! விம்மிய வண்ணம் கணவன் முகத்தையே கூர்ந்து பார்க்கிறார் வாசுகி.

வள்ளுவர்: வாசுகி!

(1) அந்திசந்தி போல அனைவர்க்கும் தொடர்பு

முந்திய வினையால் மூட்டிய ஈசன்
பிந்திய வினைநாடி பிரித்திடும் பொழுது
நொந்திடல் அழகோ நுண்மதி யுடையாய்?

115

(2) எல்லாம் எமையாளும் ஈசன் செயலென
எல்லாரும் எண்ணி இருந்து பிரிவதலால்
எல்லாரும் இருந்திடின் இவ்வுலகம் கொள்ளுமோ
நல்லாளே நீயே நவில்.

மூச்சோடு மூச்சாக "உண்மை" என்றவாறு தலை அசைத்தார். சிறிது தேக்கம் தேறி தெளிவு ஏற்பட்டது. வாசுகி கைகுவித்து நெஞ்சுக்கு நேராக நிறுத்திய வண்ணம்:

பேராழி மாமுனிக்குப் பிள்ளையாய் வந்தவரே!
ஆராரும் அறியாது அகத்தியர்க்கு அன்பராய்
நேராக வந்தவரே! என்னை மணந்தவரே!
போறேன்முன் புவிவிட்டுப் புண்ணியரே பின்வாரீர்.

கைகள் சாய்ந்தன; கண்கள் சுழன்றன; கருவிழி மேலேறியது. முகத்தில் ஒளி வீசியது; அவ்விநாடியே ஒளி யுருவாய் உயிர் அகன்றது. உடல் தளர்ந்தது.

திருவள்ளுவர் தேம்பினார்; தேம்புகிறார்; வாய் தடுமாற வேதனையுடன்:

(1) இருந்து முகமலர்ந்து என்னுடன் வாழ்ந்தாளை
மறைந்த மாகுறளை மாறாது ஈந்தாளைவாய்
இருந்தும் பேசாது வாயற்றி ருந்தானை
பிரிந்து வாழ்வது பிரமன் கட்டளையோ.

(2) வாசுகி என்றவுடன் வாய்திறந்து பேசி

ஆசையுடன் மணந்து அறநெறியிலே யிருந்து
நேசமுடன் வாழ்ந்தாயே நின்னையன்றி வேறோர்
பாசம் எனக்குண்டோ பகர்.

சிறிது தேக்கம் தேறி தெளிவு வந்த பின்:

ஆம்;

ஈசன் கட்டளையை யாரே எதிர்ப்பர்?
மாசுற்ற மனத்தோர் மாறாது வருந்துவர்

**116**

மாசற்ற மனத்தோர் மர்மம் அறிந்து
பேச்சற்றிருப்பர் பேதமை விட்டு.

கையை அசைத்த வண்ணம்:

(1) மாதான பங்கி நீமாழ வில்லை
வேதாகமக் குறளை விட்டே சென்றாய்
நாதக்கள் போற்றுவர் நாளும் உன்னையே
தீதான எண்ணம் தேய்ந்தறியவே.

(2) "உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு" என்ற நானே
வரன்முறை யற்று வருந்துதல் தவறு
கரங்குவித்து வணங்கினேன் கற்பரசி.

அங்குக் கூடி இருந்தவர்களை நோக்கி:

மார்க்க சகாயன் மகளாய் பிறந்து
தீர்க்க சுமங்கலியாய் என்னுடன் வாழ்ந்து
ஈர்க்கும் நோயினால் இன்னுயிர் விட்டாளை
சேர்ப்பம் மயானம் சேகுத்தீரே வாரும்.

மயானம்; குழியில் மனைவியை படுக்க வைத்து விட்டு:

(1) அறுசுவை யிட்டஎன் அன்புமனை யாளுக்கோ
வெறுமண்ணை இடுவேன் ஐயகோ! ஆண்டவனே!

எரியுதே என்னெஞ்சம் இன்றேடே இவளுடன்
பிரியுதே பிரபஞ்ச வாழ்வுதாமே.

(2) இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாள் இறந்திட இருப்பதே தொல்லை
பொல்லாத தொடர்பு போய்மடியும் பொழுது
தொல்லை வாழ்வே தொல்லை.

வானத்தை நோக்கி இருகைகளையும் நீட்டிய வண்ணம்:

வந்தாளோ நின்பதம் வையகத்து இறைவனே
நொந்தாளோ நுண்மதி நுணுக்கம் அறிந்தாளோ



சிந்தாகுலம் விட்டு செயலற்ற நிலையில்
எந்தாய் நீஇருப்பாய் தான்.

மனைவியை மண்ணிட்டு மறைத்த பிறகு அங்கிருந்தோரை நோக்கி:

தொல்லை வினைஅறிய துறவறம் ஏற்பேன்
எல்லை "யாதனின் யாதனின் நீங்கியானோ
தல்அதனின் அதனின்இலன்" எனுங்குறள்
சொல்லை மேற்கொண்டேன் இன்றே.

# 21. திருவள்ளுவரின் துறவு

திருவள்ளுவர் திரும்பி வந்தார். எல்லாவற்றையும் தானம் செய்தார். துறவுகோலத்துடன் வீட்டை விட்டு வெளியேறினார்.

ஏலேலசிங்கன்: (அவரடி வணங்கி) ஐயனே! அடி-

யேனுடன் இருக்க வேண்டுகிறேன்.

திருவள்ளுவர்: என்ன சொல்லுகிறாய்?

ஏ: (பணிவுடன்) அல்லது அடியேனையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டும்.

தி: சிங்கம் சிற்றெறும்பு ஆகுமா? பற்றற்ற பின்;

"மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை"

ஏலேலா; எண்ணிப்பார்! துறவு அதிகாரத்தை மறவாதே!

* * *

அருவியில் நீராடினார்; அருகே இருந்த மரநிழலை நாடினார்; அமர்ந்தார் அறிவாகாரமாய் உருவு கடந்த பெரு வெளியில் ஒளிக்கு ஒளியாய் உள்ளத்தை நிறுத்தினார். அதனால் கள்ள வாதனை கழிந்தது. கடலோடு கலந்த ஓடை நீர் போல கடவுளோடு அபேதமானார்.

நாழிகை பல கழிந்தது. ஊழித்தீ யுகத்துக்கு ஒரு முறைதான் உண்டாகி எரிக்கும். ஆனால் சீவர்களின் உடலிலிருக்கும் உதராக்கினியோ நேரந்தவறாது யாரைத் தான் எரிக்காமல் விட்டிருக்கிறது? அது அடிவயிற்றில் சுடர் விட்டு எரிய வாரம்பித்தது. அடுத்த வினாடியே உள்ளம் அசைந்தது; ஒன்றான தன்மை மறைந்தது; கருவி கரணங்கள் உணர்வூட்டப்பட்டன; மெல்ல எழுந்தார் திருவள்ளுவர்.

## 119

அருவிக்கு நேர் எதிரே இருந்த ஊருக்கு வந்தார், ஏற்பது அறியாதிருந்தவர்; ஏற்கத் துணிந்து விட்டார்.

பார்க்கிறார் ஒவ்வொரு வீடாக; உச்சி நேரமானதால் எல்லாரும் உணவு கொண்டிருக்கிறார்கள். எனவே ஊர் சாவடியை நோக்கி நடந்தார்.

## 1. மனையாளை அஞ்சும் மறுமையிலாளன்

உண்டு அலம்பி வெளிவந்த ஒருவன் திருவள்ளுவர் வருவதைக் கண்டான். உடனே அவன் தன் மனைவியிடம் போய் "அருளாளர் ஒருவர் வருகிறார்; அவருக்கு அன்ன மிடலாமா?

மனைவி: உன்னை இடவேண்டியதுதான்.

கணவன்: என்ன அது?

ம: அன்னம்.

அவ்வார்த்தைகளைக் கேட்டபடியே தெருவழி செல் லும் திருவள்ளுவர்:

"நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்"

என்றார். இது திருவள்ளுவரையே நோக்கி நிற்கும் அந்த ஆண்மகன் காதில் பட்டது. உடனே அவன் வீட்டை விட்டு வீதிக்கு வந்தான்; திருவள்ளுவரை வணங்கினான்.

கணவன்: (பணிவுடன்) ஐயனே! தாங்கள் சொன் னது முற்றும் உண்மை. அப்படித்தான் என் வாழ்வும் இருக்கிறது. இதனால் எனக்கு என்ன ஏற்படும்?

திருவள்ளுவர்:
"அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்."

க: உண்மைதான். அதனால் என்றால் எந்த நல்ல காரியமும் செய்ய முடிவதில்லை. அதனால் பொருளாவது செலவாகாமலிருக்கிறதா என்றால்; அதுதானில்லை. ஆடம்பரங்களிலும் அவள் தேவையைப் பெருக்கிக் கொள்வதிலும் செல்வமும் சீரும் குறைந்துக் கொண்டே வருகிறது.

திருவள்ளுவர்:

"இல்லாள்கட் டாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்."

க: ஆம்; அதனால்தான் நான் நல்லவர்களைக் காண நாணமடைகிறேன்.

தி: "மனையாளை அஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று."

க: அது அவ்வளவும் உண்மை; நான் அவளுக்கு பயந்தே இருக்கவேண்டியிருக்கிறது. இதற்கு நான் என் செய்வேன்?

தி: "இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்
அமையார்தோ ளஞ்சு பவர்"

க: (ஆச்சரியமுடன்) அப்படியா?

திருவள்ளுவர்:

"பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின்
பெண்ணே பெருமை யுடைத்து." [ஆணுடைப்

க: இப்படி நான் நினைக்க வில்லையே!

தி: "பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்"

க: அவள் தேவையைக் கொடுத்துத்தான்; அவள் பெண்மையை அனுபவிக்கிறேன்.

தி: தேவையைக் கொடுப்பதல்ல; தன் கடமையில்

தவறாது நடப்பதே கணவனுக்குரிய தர்மமாகும். மனைவி கேட்பதை எல்லாம் கொடுப்பது மடமையாகும்.

## 121

க: இது வேறா?

தி: "இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்"

க: பாருங்களேன்! உங்களுக்கே ஒருவேளை உணவு கொடுக்க என்ன பாடுபடுகிறேன் பாருங்களேன்!

திருவள்ளுவர்:

"எண்சேர்ந்த நெஞ்சத்து இடனுடையார்க்கு
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்" [எஞ்ஞான்றும்

க: சரி; சரி.

திருவள்ளுவர்:

"மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது"

க: ஐயனே! இனி நான் செய்யத்தக்கது என்ன?

திருவள்ளுவர்:

"உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போடு உடனுறைந் தற்று"

க: என் அன்றாட வாழ்வும் அப்படியே தானிருக்கிறது.

வீட்டுக்குள் இருந்தபடியே இவர்கள் வீதியில் பேசிக் கொண்டிருப்பதை பார்த்துக் கொண்டிருந்த அவன் மனைவி சாப்பாட்டுக்கு ஏதோ சந்நியாசி வந்துவிடப் போகிறான் என்றெண்ணி தன் கணவனை சத்தம் போட்டு வைய வாரம்பித்து விட்டாள்.

க: (வருத்தத்துடன்) அவள் வாயில் நல்ல வார்த்

தையே வருவதில்லை. இப்படியே தான் நாள் தவறாது என்னை திட்டுகிறாள்.

திருவள்ளுவர்:

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்"

**122**

க: அப்படியாயின் நான் என்ன செய்யலாம்?

தி: "பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை யார்க்கும் கயிறு"

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

உனக்கு இன்பம் வேண்டுமா? இருக்கும் பொழுதே விட்டு விடு.

"வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல"

இதற்கு இணையான இன்பம் எங்குமே இல்லை.

"வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில்"

க: (இருகரங்களையும் நெஞ்சிக்கு நேர் கூப்பியபடி வணக்கத்துடன்) ஐயனே! அடியேன் உய்ய வழி காட்டிய மெய்யனே; ஐயுறவு அகன்றது; அறியாமை அழிந்தது; அந்தோ! பாசபந்தங்கள்பறந்தோடி விட்டன. பகவனே! புனிதனானேன்: இவைகளின் நிலையாமையை உணரலானேன்.

தி: "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப்படும்"

க: பற்றற்றால் பிறப்பும் அறுமா? உய்ந்தேன்; உய்ந்தேன். இதோ எல்லாவற்றையும் விட்டு இப்

பொழுதே ஓடி விடுகிறேன்.

திருவள்ளுவர் திருவடி தொட்டு வணங்கினான். "அருளாசி அடைந்து விட்டேன்" என்றவாறு வேகமாக நடந்து விட்டான்.

அவன் மனைவி திருவள்ளுவரிடம் வந்தாள்.

மனைவி: என் வீட்டுக்காரர் எங்கே இவ்வளவு வேகமாய் போகிறார்?

**123**

தி: தலைப்பட்டார் தீரத் துறந்தார்.

ம: இப்படியா ஆண்கள் எல்லாம் மனைவியை விட்டு விட்டுப் போகிறார்கள்?

தி: மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்.

ம: ஓகோ! அப்படியா சமாசாரம்? சரி; ஓங்க மனைவி உயிரோடிருக்காளா?

தி: இல்லை; இறந்துவிட்டாள்.

ம: அதனால் துறவியாய் விட்டார்; நான் இருக்கும் போது என் வீட்டுக்காரர் இப்படிப் போகலாமா?

தி: "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்."

"பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எக்காலும் கூடி வாழலாம்—சற்றேற
மாறாக நடப்பாளே யாமாகில் மகனே!
கூறாமல் சந்நியாசம் கொள்."

என்று ஔவை மூதாட்டி அன்று சொன்னதை அறவே மறந்து விட்டாயோ?

ம: ஐயையோ! அநியாயமாக என் வாழ்வில் இடி விழுந்து விட்டதே!

(வேதனையுடன் புலம்புகிறாள்.)

தி: புலம்பிப் பயனில்லை; எல்லா வினையும் உன்னால் உண்டானதுதானே!

ம: (வெடுக்கென) நான் என்ன செய்தேன்? ஒரு பாவமும் அறியேனே!

தி: ஆம்; பாவம் அறிந்தால் பின் பதட்டம் ஏது? இனியாவது:

"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

124

ம: வார்த்தை அவ்வளவு முக்கியமா? பொல்லாததா?

தி: சந்தேகமென்ன;

"தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு."

ம: சொல்லுக்கு அவ்வளவு வல்லமை இருக்கிறதா? (தலைமேல் அடித்துக்கொண்டு) பாவியானேன்; பாவியானேன்; படுபாவியானேன்.

## 2. புலவர்

மாலை நேரம்: மழை பெய்கிறது. மரத்தடியில் படுத்திருந்த திருவள்ளுவர் எழுந்தார். மழையின் வேகம் அதிகமானது. அருகே இருந்த ஊர் சாவடிக்கு நனைந்தபடியே நடந்தார்.

சாவடியில் அநேகர் மழைக்காக வந்திருந்தனர். திருவள்ளுவர் சாவடியின் பின்பக்கம் வந்தார்; நனைந்த மேல் துணியை பிழிந்து கம்பத்துக்குக் கம்பம் கட்டினார்.

இடை வேட்டியுடன் கம்பத்தைச் சார்ந்து அமர்ந்தார்.

அங்கிருந்தவர்களில் ஒருவன் எழுந்து திருவள்ளுவர் எதிரே வந்து அமர்ந்தான்.

வந்தவன்: தாங்கள்தான் தமிழ் சங்கத்தில் திருக்குறளை அரங்கேற்றியவரா?

திருவள்ளுவர்: ஏன்?

வ: கேட்கிறேன்.

தி: சொல்லும்.

வ: நானும் ஒரு புலவர்தான். நான் "திருவருள்" என்றொரு நூலை இயற்றினேன். அதைக் கண்டவர்கள் அனைவரும் வெகு நன்றாயிருக்கிறது; இதை மதுரை தமிழ் சங்கம் கொண்டுபோய் அரங்கேற்றுங்கள் என்றனர்.



அவ்விதமே கொண்டு போனேன். தெய்வ சகாயத்தால் அரங்கேற்ற வாய்ப்புங் கிடைத்ததுதான்; இருந்தாலும் (பெருமூச்சு விட்டான்)

அரங்கேற்றம் முடிந்தது. அடுத்த விநாடியே அது போலவே ஒரு நூலை கொண்டு வந்து என்னிடம் காட்டினார்கள். கலங்கினேன்; பட்ட பாடெல்லாம் பாழுக்கு உழைத்தது போலானது. வேதனையும் துக்கமும் வாட்ட மதுரையை விட்டு நீங்கினேன். என்னைப்போல் விருதாவாய் திரும்பி வந்தவர்கள் எண்ணில் அடங்கார் என்பது பிறகுதான் கேட்டுணர்ந்தேன்.

தி: அப்படியா?

வ: ஆம்; அவர்கள் அரங்கேற்ற மண்டபத்துக்கு அடுத்து ஒரு தனி அறை இருக்கிறதாம். அதில் அரங்கேற்ற மண்டபத்தில் நடப்பவைகளை எல்லாம் வேகமாய்

எழுதக் கூடியவர்கள் இருப்பார்களாம். அவர்கள் அவ்வப் பொழுது அரங்கேற்றப்படுபவைகளை எல்லாம் விரைவில் எழுதி விடுவார்களாம். அதனால் எப்புலவர் எத்தகைய நூலைக் கொண்டு வந்தாலும் அந்நூல் அங்கே தயாராகி விடுகிறதாம். எனவே வேறுவழியின்றி அரங்கேற்றத் துக்கு வந்த புலவர்கள் மனம் முறிந்தவராய் திரும்பிவிட வேண்டியதுதான். அதனால் அச்சங்கத்தில் அந்நியருக்கு இடமில்லை. அவர்கள் ரகசியமும் உரிமையும் அவர்களோ டேயே இருக்கிறது.

தி: அது எனக்குத் தெரியாது; அத்தகைய சங்கடம் எதுவும் எனக்கு ஏற்படவில்லை.

## 3. தேர்

தேர் நிலையம்: ஊர்வலம் வந்து தேர் நிலை நின்றது. திரளான மக்கள் தேவாராதனை முடித்துக்கொண்டு வீடு திரும்பினர். ஏகநாயகனை மறந்த போகப் பிரியர்கள் தேரில் செதுக்கப்பட்டிருக்கும் பொம்மைகளில் புத்தி



யைப் பறிகொடுத்தவர்களாய் கண்டு களித்தும் கேலி பேசியும் காலங் கழித்துக் கொண்டிருக்கின்றனர்.

ஏக நாயகனை அறிய எண்ணங் கொண்ட பக்தன் ஒருவன் சிரமேல் இரு கரங்கூப்பி மேல்தளம் நோக்கி துதிபாடி வணங்கினான். அவன் செயலை உற்று நோக்கிய வண்ணமிருந்த அக்காமுகர்கள் அவனை நெருங்கி நையாண்டி செய்தனர்.

அதற்கு அப்பக்தன் "நையாண்டி செய்வதால் நியாயம் விளங்காது; மெய்யுணர முடியாது. ஐயா;

யைப் பெரியோர்களை அணுகி ஐயம் வினவிடின் மெய்மை யுணரலாம்; மேன்மை அடையலாம். அதோ பெரியார் ஒருவர் வருகிறார். அவரை நானே கேட்கிறேன். அடக்க முடன் இருந்து அவர் கூறுவதை அறிந்துக் கொள் ளுங்கள்.'' என்றான்.

ஆழ்ந்த யோசனையுடன் அவ்வழியே வருகிறார் திருவள்ளுவர்.

பக்தன் : (அடக்கமுடன் கை குவித்தபடி) ஐயனே, அடியேன் சந்தேகத்தை நீக்கியருள வேண்டும்.

தி: (கருணையுடன்) என்ன அது?

ப: (தேரைச் சுட்டியபடி) பக்திக்குரியது அத்தேர். அதில் எதற்காக உலக ஆபாசங்களை செதுக்கி வைக்க வேண்டும்?

தி: உள்ளதைக் காட்டினால்தானே நல்வழியை நம் மனம் நாடும்; இயற்கையைக் கடந்த பின்பல்லவா இறைவனை அடைய முடியும்; உலக நிலையைக் கடந்த மனமே உண்மை நிலையை அடையும்; இவைகளை விளக் கவே அவைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

ப: எனக்கு விளங்கவில்லை; விளக்கிச் சொல்லியருள வேண்டும்.

127

தி: தேரைச்சுற்றி செதுக்கப்பட்டிருக்கும் பொம் மைகள் எல்லாம் இவ்வுலகில் நடப்பவைகளையே அறிவிக் கின்றன அல்லவா?

ப: ஆம்.

தி: அப்பொம்மைகளில் புத்தி போகும் அளவுக்கு அவைகளுக்கு அந்நியமாய், உயர்வாய், ஏகமாய் மேல்

தளத்தில் எழுந்தருளி யிருக்கும் இறைவன் உருவில் மனம் செல்லுகிறதா ?

ப: இல்லை.

தி: ஏன்?

ப: கீழ் பார்வை இருக்கும்பொழுது மேல் தளத்துக்கு மனம் எப்படிச் செல்லும்?

தி: செல்லாதல்லவா ?

ப: ஆம்; செல்லாது.

தி: எனவே மனம் உலக வாழ்வில் (சிற்றின்பத்தில்) ஈடுபட்டிருக்கும் வரை உயர்ந்த வாழ்வில் (பேரின்பத்தில்) பொருந்தியிருக்க முடியாது; இருப்பதும் இல்லை என்பதை அறிவிக்கவே ஆன்றோர்கள் அவ்விதம் தேரிலும் கோயில்களிலும் சித்திரங்களை அமைத்திருக்கிறார்கள்.

ப: உண்மை விளங்குகிறது.

தி: பாமரர்கள் பொம்மைகளில் புத்தியைச் செலுத்தியவர்களாய் இம்மையிலும் மறுமையிலும் இன்பதுன்பங்களுக்கு இரையாகி யிரையாகி கடல் அலை போல கணக்கற்ற பிறப்பிறப்புகளை அடைகின்றனர். பக்தர்களோ பரம்பொருளில் புத்தி செலுத்தியவர்களாய் இனி பிறவா நெறியை பெற பாடுபடுகின்றனர்.

பக்தனும் அவன் பின்வந்த இருவரும் சேர்ந்து: ஐயனே! அறியாமை அகன்றது. வணக்கம்.



## 4. விதவையின் வேண்டுகோள்

மாசி மாதம்; மாமரச் சோலை; மத்தியான உணவை

முடித்துக்கொண்டு போய் ஆயாசம்தீர மரநிழலில் அமர்ந்தார். அவரை நாடி கணவனை இழந்த கைம்பெண் ஒருவள் வந்தாள்.

விதவை: நான் கணவனை இழந்த கைம்பெண் ஐயா; தங்களுடைய இன்பத்துப்பாலை படித்துப் படித்து நான் துன்பத்துக்காளாகி விட்டேன். அத்துன்பத்தைத் தணிக்கத் தக்க மருந்து தாங்களேயாகும். ஆதலின் என்னுடன் கூடி—

திருவள்ளுவர்: அறத்துப்பாலையும் பொருட்பாலையும் படித்தனையா?

வி: அவைகளையும்தான் படித்தேன். அவைகளால் எனக்கு இப்பொழுது ஆக வேண்டியவைகள் ஒன்றுமில்லை. இன்பத்துப்பாலே என் துன்பத்தைப் போக்க வல்லதாயிருக்கிறது. ஆதலின் அப்பாலை இயற்றிய தாங்களே எனக்கேற்ற துணைவராயிருக்கவேண்டும். என் துன்பத்தைத் துடைத்து இன்பமூட்டியருள வேண்டும். (நெருங்குகிறாள்)

தி: பெண்ணே! முன்னே நீ இச்சிக்கும் இன்பத்தின் தன்மையைச் சொல்லுகிறேன். பின்னே உன் துன்பத்தைப் போக்கும் மார்க்கமும் கூறுகிறேன்; கிட்ட வராதே! எட்ட இருந்தே கேள்.

காதல் என்றாலும் காமம் என்றாலும் ஒன்றுதான். அது ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே ஏற்படும் மயக்கமாகும்; வேறொன்றுமில்லை.

வி: என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்?

தி: ஆம்; சிலர்களால் விரும்பிக் காக்கப்படும் மயக்கம் அல்லது தெளிவின்மை என்பதுதான் அதற்

குரிய அர்த்தமாகும். உண்மையைத்தான் சொல்லு கிறேன்.

வி: அப்படியாயின் எனக்கு என்ன சொல்லு கிறீர்கள்?

ஓி: அம்மயக்கம் இருவருக்கும் ஏற்பட வேண்டும். அப்பொழுதுதான் நீ நினைக்கும் இன்பம் கிட்டும். அப்படி யல்லாது ஒருவர் மயக்கத்துக்குள்ளாய் மற்றவரை அழைப்பதோ, பலவந்தப்படுத்துவதோ தன் மானத் தையே கெடுத்துக் கொள்வதாகும். அதுமட்டுமல்ல அத்தகைய பலாத்காரமான சேர்க்கையானது மரக் கட்டையை அணைவதற்கு இணையாகவே இருக்கும். ஆதலின் அந்த எண்ணம் உனக்கு வேண்டாம், விட்டுவிடு.

மேலும் உடல் சேர்க்கையால் உண்டாவது உளுத்த இன்பம்; கடைபட்ட சுகம். அதனால்தான் கற்றோர்கள் அதனை சிற்றின்பம் என்று சொல்லுகின்றனர். ஆதலின் அச்செய்கை உனக்கு வேண்டாம். உடல் உறவு கடல் அலைபோன்றது; அதைச் சொப்பனத்து இணையாகவும் சொல்லலாம் நீ உன் கணவனுடன் கலந்து அனுபவித் ததை இப்பொழுது கண்ட கனவைப்போல் நினைந்து பார்ப்பதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? ஆதலின் கணத்துக்குக் கணம் கனவாகப் போகும் காரி யங்களை இனியாவது கருதாதிருப்பாயாக. அதனால் மன அமைதி அடைவாய்.

உன்னையே நீ எண்ணிப்பார்! நீ யார்?

(அவள் உடலைச் சுட்டியபடி) இவ் ஊனுடல் நீயா?

வி: (தன்னையே மேலுங் கீழும் பார்த்துவிட்டு) அல்ல.

தி: பின் நீ யார்?

வி: உடலுக்குள் இருக்கும் உயிர்தான் நான்.



தி: சரி; உன் சொல்படியே வைத்துக் கொள்வோம். உன்னால் விரும்பப்படும் இன்பத்தில் உயிரும் உயிரும் சேர்கிறதா? அல்லது உடலும் உடலும் உராய்கிறதா?

வி: உயிர் அல்ல; உடல்தான் கூடுகிறது.

தி: அதனால் ஏற்படுவது என்ன? உடலுக்குத் தளர்ச்சி; உயிருக்கு மயக்கம். இதைத்தான் புணர்ச்சி இன்பம் என்பதல்லவா?

வி: ஆம்.

தி: இச்செய்கையால் அறியாமைக்கிரையான ஆண் தன்னையே அழித்துக் கொள்கிறான்: அந்தோ! பெண் தன்னை பந்தத்துக்குள்ளாக்கிக் கொள்ளுகிறாள் இல்லையா?

வி: உண்மைதான்.

தி: உண்மையை உணர்ந்த நீ நாளும் நன்மைக்கு; இன்பத்துக்குப் பாடுபட வேண்டுமல்லவா? ஒருவனுடன் பந்தப்பட்டிருந்ததே உனக்குப் போதாதா? ஏனோ வீணாக இன்னொரு ஆணுக்கும் இரையாகப் பார்க்கிறாய்? வேண்டாம். உண்மையை நாடு. விடுதலைக்குப் பாடுபடு. "தன்னை அறிவதே அறிவாம் அஃதன்றி பின்னை அறிவது பேய் அறிவாமே" என்பது ஔவையின் அமுதமொழி யாகும் அல்லவா?

"ஆம்; "பிறப்பென்னும் பேதமை நீங்க சிறப் பென்னும் செம்பொருள் காண்பது அறிவு" ஆதலின்

அம்மா ! சும்மா வருந்தாதே !

உன்னையே நீ எண்ணிப்பார் ! உடல் நீ அல்ல ; உள்ளம் நீ அல்ல ; மற்றவற்றின் உள்ளிருக்கும் உணர்வே வடிவமான ஆன்மாவே நீ.

உடலோடு உறவுகொண்டு புணரப் புணர உணர்வு வடிவமான ஆன்மாவே நீ என்பதை அறவே மறக்கிறாய். அதனால் அசுத்தம், துக்கம், அநித்தியம் ஆகியவைகளையே சுத்தம், சுகம், நித்தியம் என யெண்ணி பந்தத்துக்கிரை



யாகி அந்தோ ! அநாதிகாலமாய் அல்லல் பட்டது போதாதா ? அதர்ம வழியில் அழிந்தது போதாதா ?

வேண்டாம் அந்த எண்ணத்தை அறவே விட்டுவிடு. இத்தியாகம் ஆரம்பத்தில் அளவற்ற துன்பம்போல் தோன்றும் ; ஆனால் பழகப்பழக இது அளவில்லாத இன்பத்தின் இருப்பிடமாயிருப்பதை நீயே பின் உணர்வாய்.

ஐம்புலனை அடக்கு ; ஐயுணர்வு அடங்கும் ; மெய்யுணர்வு தானே விளங்கும். ஐயுறவு வேண்டாம்.

வி : அப்படியானால் இருக்குறளில் இன்பத்துப்பாலை எதற்காக எழுதினீர்கள் ? எழுதாமலேயே இருந்திருக்கலாம் அல்லவா ?

தி : நீ நினைப்பது நியாயமல்ல ; அவ்விதம் இன்பத்துப்பாலை எழுதாமலே இருந்திருப்பேனேயாயின் அது ஒரு நிறை நூலாயிருக்க முடியாது. குறை நூலாகவே இருக்கும். அதுமட்டுமல்ல ; உள்ளதைச் சொல்லாதவனு

மாவேன். எல்லாருக்கும் பருவத்தில் உருவெடுக்கும் எண்ணத்தையும் செயலையும் தான் அதில் சொல்லியிருக்கிறேனே தவிர வேறென்ன ?

✓ உள்ளதைச் சொல்லி ; உலக நிகழ்ச்சியை ஒழியாமல் கூறி உயர்ந்த நிலைக்கு ; உண்மையான மார்க்கத்திற்கு மக்களை உயர்த்திக் கொண்டு போவதுதான் உத்தமமான சிறந்த நூலின் தன்மையாகும்.

காமத்தைப்பற்றி கூறாது; கடமையை எடுத்துக் கூறாது; கடவுளைப் பற்றி மட்டும் எழுதுவது இறைவனுக்கே துரோகம் செய்வதாகும். எங்கும் நிறைந்த இறைவன் எல்லாருள்ளும் இருக்கிறான். ஆகவே எல்லாருடைய இருதயத்திலும் எழும் ; அதாவது சீவர்கள் சீவர்களோடு சேர்வதால் உண்டாகும் சிற்றின்பத்தைப் பற்றியே சொல்ல வாரம்பித்து சிறுகச் சிறுக மக்கள் மனநிலையை உயர்த்திக் கொண்டு போய் சீவனை பேரின்ப



மாகிய பிறவா நிலையை ; சிவனாகும் வழியைச் சொல்லியிருக்கிறேன். இதுதான் முறையுங்கூட.

ஆதலின் நூலைக் குறை கூறுவதை விட்டு நுண்ணறிவை வளர்க்கப் பாடுபடு. பிறவா நிலையை யடைய ; பேதமை ஒழிய; பெண்ணே ! முன்னே நீ பாடுபடு. பின்னே அம்மயக்கம் தானாகவே நீங்கும். அதுதான் பெறுதற்கரிய மனிதப் பிறவியின் தன்மைக் குரியதாகும். ஏனையவெல்லாம் மானை மயக்கும் கானல் நீரேயாகும்.

## 5. உடன்கட்டை ஏறுதல்

மயானம் கணவனை இழந்த கைம்பெண் கணவ

னுடன் உடன்கட்டை ஏற எத்தனிக்கிறாள். அருகேயிருந்தவர்கள் சத்தம் போட்டு "நெருப்பில் விழ வேண்டாம்; வேண்டாம்" என கத்துகின்றனர். அது சமயம் அவ்வழி சென்ற திருவள்ளுவர் சுடலையை நோக்கி நடந்தார்.

கொழுந்து விட்டெரியும் தீ; கொழுநனை இழந்தவள் நறுமணம் கமழும் பூ சூடி மங்கல கோலத்துடன் மனத் தீ எரிக்க அச்செந்தீயை வலம் வருகிறாள். சூழ்ந்திருப்பவர்கள் சோகத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். திருவள்ளுவரைக் கண்டவுடன் தூக்கத்திலிருந்து விழித்தவர்களைப் போல தயக்கத்துடன் பார்க்கின்றனர்.

திருவள்ளுவர்: (தீயை வலம் வரும் விதவையை நோக்கி) குழந்தாய் கொஞ்சம் பொறு.

வி: ஐயனே! இனி நான் இருந்து வருந்துவதைவிட இதோடு இறப்பதே மேல்.

தி: பதறாதே! பொறு.

வி: எதிர்காலத்தை எப்படி கழிப்பேன்? இனி இவ்வுலகில் எனக்கு இன்பம் ஏது? துன்பம்; தொலையா துன்பமேதான்.



தி. ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?

வி: என் இன்பக்களஞ்சியமே இன்று நெருப்போடு நெருப்பாய் விட்டது. இனி நீராகி மண்ணாகி மறையப் போகிறது. இனி நான் இருந்து என்ன இன்பம் அனுபவிக்கப் போகிறேன்? (தலைமேல் அடித்துக் கொண்டு) ஐயையோ! (விழுந்து புரளுகிறாள்)

தி: பெண்ணே பொறு; சொல்வதைக் கொஞ்சம் கேள்.

வி: (மெல்ல எழுந்து) எதைக் கேட்டுத்தான் இனி எனக்கு என்ன ஆகப் போகிறது. இனி நான் இருப்பதே தொல்லைதான்.

தி: அப்படிச் சொல்லாதே!

"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்"

வி: (திடுக்கிட்டவளாய்) என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்?

தி: (அழுத்தமாக) ஆம்; ஒருபோதும் நிரம்பாதது இவ்வுடல்; இவ்வுடல் உறவால் உண்டாகும் ஆசை மாத்திரம் நிரம்புமா? அல்லது நிரந்தரமாயிருக்குமா? இராதல்லவா? எனவே இவ் வற்ப ஆசையை விட்டால் எஞ்சியிருப்பது என்ன? மாறாத இன்பம்; மற்றவர்களால் அழிக்க முடியாத ஆனந்தமே அல்லவா? பெண்ணே! எண்ணிப்பார்!

நில்லாத உடல் உறவை விடு; நிலையான உள்ளுணர்வை வளர். இனி ஒருக்காலும் துன்பத்துக்கு இரையாக மாட்டாய்; இன்பமே வடிவமா யிருப்பாய். நீ அடைந்திருக்கும் இப்பிறவி என்ன சாதாரணமானதா? அல்ல.

பெருதற் கரிய பிறப்பிது இதன்போக்கு
அறிதற் கரிய அவதி—பிறிதொன்றை



நாடுதற்கு நேரமுண்டோ நங்கையே! முத்திநெறி
கூடுதற் கல்லாது குறித்து?

பெண்ணே! இன்பம் என்று நீ முன்னே எண்ணியிருந்த தெல்லாம் உன் உடலுக்கு வேறானதும்; ஆன்மா

வாகிய உனக்கு அந்நியமா யிருந்ததினாலேயே உன்னை விட்டு விலகியது. அதனால் துன்பத்துக் கிரையானாய். எனவே இத்துன்பம் உனக்குரியதல்ல; ஆதலின் அத் துன்பம் உனக்கு வேண்டாம்.

உன் உடலே நீ அல்லாதபோது அந்நிய உடலை நீ அபிமானித்ததே; நம்பியதே தவறு. அத்தவறை இனி நீ செய்யாதிருக்க வேண்டும். உன் சொந்த விடுதலை (முக்தி)காக பாடுபட வேண்டியதை விட்டு வினையால் வந்த உடல் உறவு வினைமுறியுங் காலத்தில் விட்டு விலகினால் அதற்காக விவேகியாகிய நீ மரிப்பதா? உடன் கட்டை ஏறுவதா? இதை என்னென்பது?

வி: தாங்கள் சொல்வது உண்மையாயிருக்கலாம். ஆனால் ஐயனே! என் விரக வேதனை நரக வேதனையிலும் கொடிதன்றோ? அது என்னால் பொறுக்க முடியாதே!

தி: அப்படிச் சொல்லாதே! எல்லாம் உன்னால் உண்டானதுதானே? உன் வினைதானே!

வி: இருக்கலாம் என்றாலும்—

தி: உண்டவனாலேயே உணவு சீரணமாக்கப்படுவதுபோல எல்லாம் உன்னாலேயே ஒழிக்கப்பட வேண்டும். மற்றவர்களால் இதை மாற்றவோ; மறைக்கவோ; மறக்கவோ செய்யமுடியாது. அதற்குரிய வழியைச் சொல்லலாம்; அவ்வளவுதான்.

வி: ஐயனே! என் மனம் மிகவும் பொல்லாதது; என்னை கொல்லாது கொன்றுவிடும்.

தி: உன் மனம் மட்டுமல்ல; உலகத்திலுள்ள மக்களின் மனமே பெரும்பாலும் அப்படித்தான் இருக்

கிறது. நீ உள்ளதை ஒழியாமல் வெள்ளையாய் சொல்லு கிருய். மற்றவர்களோ—

வி : என் மனம் அடங்கும் வழியைச் சொல்லியருள வேண்டும்.

நி : கவனமாய் கேள் :

ஒருவன் இறைவனை நோக்கி நெடுநாள் தவமிருந் தான். அவன் தவத்துக்கிரங்கிய இறைவன் அவன் முன் தோன்றினன்,

"அன்பனே! உனக்கு வேண்டும் வரத்தை உன் குருவினிடமே போய் கேள் கிடைக்கும்" என்றதும் மறைந்தான்.

சீடன் தன் குருவினிடம் வந்தான்; இறைவன் கூறி யதை குருவினிடம் சொன்னுன். குருவும் "சரி; கேள்" என்ருர்.

"ஐயனே! நான் சொல்லும் வேலையை இமைக்கும் நேரத்திற்குள் செய்ய வல்ல வேலையாள் ஒருவன் எனக்கு வேண்டும்" என்ருன் சீடன்.

அவன் அறியாமையை அறிந்தார் குரு. இது அவன் பேராசையால் பிறந்த எண்ணம் என்பது வெளிப்படை அல்லவா? ஆம். குரு அவன் ஆசையை நிறைவேற்ற நினைந்தார். உடனே அவர்கள் முன் ஒரு பூதம் தோன்றி யது. குரு சீடனை நோக்கி; "இப்பூதத்தை உன் வேலை யாளாக வைத்துக்கொள். நீ சொல்லும் வேலையை விநாடி யில் முடிக்கும் வல்லமை வாய்ந்தது இப்பூதம். ஆதலின் நீ அதற்கு சதா வேலை கொடுத்துக் கொண்டே யிருக்க வேண்டும்; வேலை சொல்லாமலிருந்தாலோ உன்னைக் கொல்லாமல் விடாது. போய் உன் விருப்பத்தை நிறை வேற்றிக்கொள்" என்ருர்.

தன் எண்ணம் நிறைவேறியதை எண்ணி சீடன் மகிழ்ந்தான். மறுகணமே குருவினிடம் விடைபெற்றுக் கொண்டு பூதத்தினிடம் திரும்பினான்.

136

பூதம்: வேலை கொடு.

சீடன்: உல்லாச மாளிகை ஒன்று அமைக்க வேண்டும்.

பூ: இதோ முடிந்தது.

சீ: அறுசுவை உண்டி சமைக்க வேண்டும்.

பூ: இதோ தயாராய் விட்டது.

சீ: பஞ்சணையும் மென்காற்றும் கட்டழகியும் வேண்டும்.

பூ: இதோ எல்லாம் வந்து விட்டன.

சீ: நான் இவளுடன் உண்டு உறவாடி இன்பமடையும் வரையில் நீ ஓய்வுகொள்.

பூ: அதுதான் முடியாது; சதா எனக்கு வேலை கொடுக்க வேண்டும்; இல்லாவிட்டால் உன்னைக் கொல்லுவேன்.

உடனே வாய் திறந்த வண்ணம் கோரப் பற்கள் விளங்க அவனை நெருங்கியது. விநாடிநேரம் செய்வதறியாது இருதலைக் கொள்ளி எறும்புபோல் நடுங்கினான். என்றாலும் பூதம் அடங்குமா? அவனை தன் கைகளால் பிடித்துக் கொண்டது. உடனே அவனுக்கு ஒரு எண்ணம் உண்டானது.

சீ: இவைகளை எல்லாம் வந்த இடத்துக்கே அனுப்பிவிடு.

பூ: (தன்பிடிவிட்டது) அனுப்பியாய் விட்டது.

(எல்லாம் மறைந்தன)

சீ: என்னை என் குருவிடம் கொண்டு விடு.

பூதத்தின் கோரம் மறைந்தது; பணிவுடன் அவனை குருவின் முன் கொண்டு விட்டது; அவன் பின்னே நாய் போல் நின்றது. குருவுக்கு விஷயம் விளங்கியது; என்றாலும் மௌனமாகவே இருந்தார்.

## 137

சீடன்: (குருவை கூப்பிய கைகளுடன் வலம் வந்து வணங்கி) ஐயனே! அடியேன் அனுபவித்ததுபோதும்; பட்டதும் போதும்; இப்பூதம் என்னைக் கொல்லாமல் விட்டுப் போனால் போதும். வேறொன்றும் எனக்கு வேண்டாம். தங்கள் ஏவல்படி நடக்க ஆவல் கொண்டவனாயிருக்கிறேன். எஞ்சிய வாழ்நாளை தங்கள் பணி விடையிலேயே கழிக்க விரும்புகிறேன்.

கு: ஏன் இப்படிச் சொல்லுகிறாய்?

சீ: எதைச் சொன்னாலும் அதை உடனே செய்து முடித்து விடுகிறது. பூதத்திற்கு ஓய்வில்லாமல் வேலை கொடுக்க என்னால் முடியவில்லை, என்றும் முடியாது. அதனால் அது என்னை என்றேனும் கொன்றே தீரும். ஆதலின் பூதம் எனக்கு வேண்டாம். அநியாயமாய் நான் பூதத்தால் மரணமடைய விரும்பவில்லை.

கு: (தன் தாடியை இடக்கையால் கோதிய வண்ணம் பூதத்தை நோக்கி) அப்படியா?

பூதம்: (மமதையுடன்) ஆம்.

கு: (தன் இடது கையை நோக்கினர்; தாடியின் சுருண்ட ரோமம் ஒன்று உதிர்ந்திருந்தது பூதத்தை பார்த்து) இதோ இந்த ரோமத்தை நிமிர்த்து இம்மயிர் அறுந்தால் உன் மண்டை ஆயிரம் சுக்காய் போய்விடும்.

பூதம் அலட்சியமாய் அதை வாங்கியது; நிமிர்த்தியதுதான்; ஆனல் பிடிவிட்டால் பழையபடி முடி சுருண்டு விடுகிறது. ஓய்வின்றி நிமிர்த்துகிறது. ஒருகணமும் நில்லாது பழையபடியே முடி சுருண்டு விடுகிறது. என்னே! விட்டால் சுருளுது; தொட்டால் நிமிருது; கெட்டது தன் காலம் என்பதை பூதம் உணர்ந்துவிட்டது. எனவே தன் முயற்சிக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு குருவை வணங்கியது.



பூதம்: ஐயனே! அடிமையை மன்னிக்க வேண்டும்; என்னை விட்டால் போதும்; இனி நான் தங்கள் எல்லைக் குள்ளேயே வருவதில்லை.

குரு: சரி; பிடி ஓட்டம்.

அவ்வளவுதான் பூதம் மறைந்தது.

இச்சிடனைப்போன்றதுதான் நம்முடைய மனமாகும். அப்பூதத்தைப் போன்றதுதான் நம்முள் வாழும்; நம்மையே ஆளும் காமமாகும். <u>மனம் விரும்பியே காமத்தை பெற்றது; வளர்த்தது; மேலும் எண்ணமாகிய உணவூட்டி வளர்த்த வண்ணமா யிருக்கின்றது.</u>

எப்பொருளாயினும் சரி; அதைப்பற்றி ஊன்றி எண்ணும் நினைவே இராகம்; அதாவது ஆசையாகும். அது பால் வேற்றுமைபற்றி ஆணிடமோ பெண்ணிடமோ எழும்போது காமம் என்று சொல்லப்படுகிறது. காமம்

என்னும் பதத்துக்கே சீவர்களால் விரும்பிக் காப்பாற் றப்படும் மயக்கம் என்றுதான் பொருள். அதை நாம் விரும்பாதிருந்தாலோ; நினையாதிருந்தாலோ அது அரும்புமா? வளருமா? பின் வருத்துமா?

குருவுக்கு இணையானதுதான் நம்புத்தி. புத்தியாகிய கூரிய விவேகத்தால் காமத்தை எண்ணி எழும் எண் ணத்தை தடைசெய்; கடமையை உணர்ந்து; மடமை அகலும்; சட உடல் இன்பம் என்பது மணல் சோறுண்டு களிக்கும் சிறுவர் செய்கையை ஒக்கும். சித்துருவாம் கடவுள் வழிபாட்டில் மனதை செலுத்து. தன்னை அறிய எண்ணங்கொள். எல்லாம் தானே விலகிவிடும். அந்த ரத்தில் எந்த பொருளும் நில்லாததுபோல ஆன்மாவி னிடத்தில் இவையாவும் அணுகமுடியாது. அது சோதி சொரூபம். அச் சொரூபத்தில் நாட்டம் வை பெண்ணே!

வி: (கூப்பிய கைகளுடன்) ஐயனே! அறிவொளி யூட்டி உய்ய வழிகாட்டிய மெய்யனே! அப்படியே செய் கிறேன்.

# 22. சுகதேவர் திருவள்ளுவர் சந்திப்பு

காட்டாறு வரண்டது; கானல் நீர் பெருகியது; கரையின் மேலிருக்கும் ஓர் மரத்தடியில் திருவள்ளுவர் அமர்ந்திருக்கிறார். மனைவியை இழந்தான் ஒருவன் வந்தான்; வணங்கினான்.

மனைவி இழந்தவன்: ஐயனே! நான் மனைவி இழந்த வன்; மறுமணம் செய்துக்கொள்ள விரும்புகிறேன்.

இல்லாவிட்டால் என் வாழ்வே—

இ: மனம்போல் வாழ்வே தவிர; மனைத்துக்காக வாழ்வு அல்லவே.

ம: (கையால் சுட்டியபடி.) ஐயனே! அதோ நங்களை நோக்கி அம்மனைத்துடன் வரும் அக்கிளி மூக்கன் யார்?

இ: சுகதேவர் போலிருக்கிறது; பரம பாகவதர்; வேதவியாசரின் மகன்.

ம: கருவிலேயே தாயைக்கொன்ற காதகன் தானே!

இ: அப்படிச் சொல்லாதே! தர்மம் தெரிந்தவர்; கர்மம் பக்தியோகம் ஞானம் ஆகியவைகளின் கரைகடந்தவர். மர்மமாய் அவரிடமே கேள்; உண்மை உரைப்பார்.

சுகதேவர் நெருங்கி விட்டார்; வாதம் நின்றுவிட்டது. சுகதேவரும் திருவள்ளுவரும் பிரதி வணக்கம் செய்துக்கொண்டு அமர்ந்தனர். அதன் பின் மனைவி இழந்தவன் சுகதேவர் முன் விழுந்து வணங்கி எழுந்து நின்றான்.

ம: (சுகதேவரை நோக்கி) ஐயா; தாங்கள் யார்?



சு: வேதவியாசரின் மகன் சுகன்.

ம: (அடக்கமுடன்) இயற்கைக்கு மாறாக தங்கள் மூக்கு அமைந்திருப்பதன் காரணம் என்ன? கருணையுடன் கூறவேண்டும்.

சு: நான் தாய் வயிற்றிலிருக்கும்போது அந்நோய் தாங்க முடியாது இறைவனை வேண்டி அடைந்தேன்.

ம: அங்கோய் அவ்வளவு கொடியதா?

சு: (பெருமூச்சுவிட்டார்) ஆம்;

கொடியது கொடியது உடலே கொடியது
அதனிலுங் கொடியது பிறவியின் துன்பம்
அதனிலுங் கொடியது கருப்பையின் வாசம்
அதனிலுங் கொடியது எங்ஙனம் எது?

ம: என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? பிள்ளைப் பெறுவதில் எல்லாரும் கொள்ளும் இன்பம் கொஞ்சமா? அதற்காகத் தானே ஆணும் பெண்ணும் ஓயாது உழைக்கின்றனர்.

சு: ஆம்; அத்துன்பத்தை எண்ணிப் பாராத காரணத்தால் காமம் வளர்கிறது; அறிவுக்கண் மறைகிறது; அதனால் கண்ணிழந்தவர்களாய் கருக்குழியை விரும்பி உருக்குலைந்து ஓயாது கடல் அலைபோல் பிறப்பிறப்பை அடைகின்றனர்.

ம: அப்படியாயின் அத்துன்பத்தை அடியேனுக்குச் சொல்லியருள வேண்டும்.

சு: காளையே கவனமாய் கேள்: தாய் உந்தியில் ஏறிய விந்து முதல் ஏழு மாதம் வரையில் உயிரற்ற மாமிச பிண்டமாகவே வளர்கிறது. எட்டாம் மாத ஆரம்பத்தில் தான் எங்கேனும் கருமாதீனமாக உடலைவிட்ட உயிர் இக்கருவில் வந்து உரையவாரம்பிக்கிறது. அதுமுதல் அது வெளிவரும் வரையில் ஓயாத கவலையும் வேதனையும்



ஒறுக்க அதைப் பொறுக்க முடியாத சீவன் சிவனை நோக்கி புலம்புகிறது.

ம: அது அனுபவிக்கும் வேதனையை கொஞ்சம் சொல்லவேண்டும்.

சு: ஆன்மாவுக்கு அந்நியமானவை எல்லாம் பஞ்ச பூதங்களால் உண்டானவை என்பது உனக்குத் தெரியு மல்லவா?

ம: தெரியும்.

சு: எனவே ஐம்பூதங்களால் உண்டானவை எல் லாம் ஐம்பூதங்களாலேயே இன்பதுன்பங்களை அனுபவிக் கின்றன. பிறப்பிறப்பையும் அடைகின்றன அல்லவா?

ம: ஆம்; ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத் தொழிலும் ஐம்பூத விகாரங்கள்தாம்.

சு: ஏழாம்மாத முடிவில் சூட்சம (யாதனா சரீர) மாய் தாய் வயிற்றிலிருக்கும் கருவை அடைந்த உயிர் உணர்ச்சியுடையதாய் அறிவு நிறைந்ததாயிருக்கிறது.

கருவோ இளம் மாமிச பிண்டம்.

(1) மலையடியில் ஒருவன் சிக்குண்டால் அவன் அடையும் துன்பம் எப்படியிருக்கும்? அதைப்போலவே கரு இருக்கும் மேல்பை நெருக்குகிறது; அதோடல்லாமல் ஆகாரப் பையுக்கும் மலப் பையுக்கும் மத்தியில் கருப்பா சயப்பை இருப்பதால் இவைகளின் அழுத்தம் வேறு அதிகரிப்பதால் துன்பம் பெருகுகிறது.

(2) தோல்பையில் அடைபட்டு நிறைந்த நீர் நிலையில் அமுக்கப்பட்டு கிடப்பவன் என்ன பாடுபடுவான்? அதைப்போலவே கருப்பாசயப் பையில் நிறைந்திருக்கும் உதக வெள்ளத்தால் சீவன் மன உறுதி நீங்கி சொல் லொணு துன்பத்தை அடைகிறது.

(3) நெருப்பின்மேல் வைக்கப்பட்ட வாய்மூடிய இரும்புப் பாத்திரத்தில் ஒருவன் அடைபட்டிருந்தால்

என்ன வேதனை அடைவான்? அதைப்போலவே கருப்பாசயப்பையின் கீழிருக்கப்பட்ட தாயின் உதராக்கினி தகிப்பதால் மேலும் சீவன் வேதனை அடைகிறது.

அதோடு மட்டுமல்ல; பழுக்கக் காய்ச்சிய இரும்பு ஊசியினுல் உடலை இடம் விடாது கீறினுல் எவ்வளவு வேதனை இருக்கும்? அதைப்போலவே தாயினுடைய அன்னரசம் குழந்தையின் உந்தி வழியாக சென்று உடலில் பரவும்பொழுது வெகு வேதனை உண்டாகிறது. இவ்வேதனையானது இதுவரையில் கூறியதைவிட எட்டு மடங்கு அதிகமாகும்.

(4) கருப்பாசயப் பையிலிருப்பதே கஷ்டம். அதோடு பிரசூதவாயு முரித்துத் தள்ளும் வேதனையை எப்படி எடுத்துச் சொல்லமுடியும்? (தலை அசைத்த வண்ணம்) முடியாது.

(5) ஆலையில் சிக்குண்டு பிழியப்பட்டு நொறுங்கி வரும் கரும்பைப் பார்த்திருக்கிருயா? அதைப் போலவே யோனித்துவாரத்தில் நெருக்குண்டு உயிருடைய ஒரு மாமிசப் பிண்டம் வருவதைப்போல கஷ்டம் ஏதேனும் உண்டா?

இத்தனையும் எண்ணிப்பார்!

ம: (கூப்பிய கரத்துடன்) ஐயா; கர்ப்பவாசம் கொடியதுதான். தாங்கள் இதற்கு என்ன செய்தீர்கள்?

சு: இவ்வேதனைக் காற்றுத நான் கருப்பையிலிருந்துக்கொண்டே கடவுளை வேண்டினேன். இறைவன் தோன்றினன். "என்ன வேண்டும்" என்றுன். "இவ் வேதனையிலிருந்து விரைவில் விடுபட வேண்டும்" என்றேன். "கிளி மூக்கை அளிக்கிறேன் வழி தேடிக்கொள்"

என்றதும் மறைந்துவிட்டான்.

இளிமூக்கை அடைந்து விட்டேன். அவ்வளவுதான்; பிரசூதவாயு சலித்தது; அதற்கேற்ப என்னுடல்



அசைந்தது. ஈட்டி பாய்ந்த இருதயம்போல மூக்கின் கூர்மை குத்தவே கருப்பாசயப் பையும் அதற்கு ஆதாரமாயிருந்த அன்னையின் அடிவயிறும் கிழிந்தன. நான் வெளிப்பட்டேன். அந்தோ! அன்னை உயிர்விட்டாள். பின்னை என்ன செய்வது? புலம்புவதால் புத்துயிர் பெறுவாளா? என்னையே நொந்து கொண்டேன். அதிலிருந்து இனி பெண்களை எல்லாம் என் அன்னையாகவே கருதலானேன். அதனால் அபாயம் அழிந்தது. ஆனந்தமாயிருக்கிறேன். என்னை அறிந்தேன். பின்னை ஒரு பிறவியும் பெறாத பேறு பெற்றவனாய்விட்டேன்.

ம: (கைகூப்பியவனாய்) உண்மை விளங்கியது உத்தமரே! புத்தியில்லாமல் இத்தனைக் காலமாய் ஏதேதோ எண்ணி புண்ணியம் இழந்தவனானேன்; மன்னிக்க வேண்டும்.

(திருவள்ளுவரை நோக்கி) ஐயனே; எனக்கு என்ன சொல்லுகிறீர்கள்?

தி: இவ்வளவு கேட்ட பின்னும் உன் மனம் மாறவில்லையா?

ம: எப்படி மாறும்? இருக்கும் வரையில் இன்பம் வேண்டுமல்லவா?

தி: நீ நினைக்கும் இன்பம் திருமணத்திலும் இல்லை;

மறுமணத்திலும் இல்லை. உன் மனத்திலேதானிருக் கிறது.

ம: எப்படி? எனக்கு விளங்கவில்லையே! அப்படி யிருந்தால் எனக்குத் தெரியாதா?

தி: (சுட்டியபடி) அதோ; அந்த வயலைப் பார்! எங்கேனும் நீர் இருக்கிறதா?

ம: இல்லை.

தி: அதன் பக்கத்திலிருக்கும் வயலைப் பார்; வாய்க் காலைப் பார்; பாத்தியைப் பார். வாய்க்காலில் நீர்



வருகிறது; பாத்தியில் பாய்கிறது; பாத்தி பாத்தியாய் பாய்ந்துக்கொண்டே போகிறது. நீருக்கும் வயலுக்கும் வாய்க்காலுக்கும் பாத்திக்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டா?

ம: இல்லை.

தி: நீர் கிணற்றில் ஊறுகிறது; வாய்க்காலில் வருகிறது; வயலிலோ, பாத்தியிலோ பாய்கிறது அல்லவா?

ம: ஆம்,

தி: நீர் வாய்க்காலிலிருக்கும்போது வாய்க்கால் நீர் என்கிறோம்; வயலிலிருக்கும்போது வயல் நீரென்கிறோம்; பாத்தியிலிருக்கும்போது பாத்தி நீர் என்கிறோம் அல்லவா?

ம: ஆம்.

தி: அதைப் போலத்தான் அப்பா இன்பமுமாகும். இன்பம் இருப்பது இருதயத்துள். மனம் அதை அணைக்

திருக்கும்பொழுது ஏனைய பொருள்களை எல்லாம் மறந்து உறங்கி இன்பமடைகிறது. உறக்கத்தில் உண்டாகும் இன்பத்துக்கு இணையான இன்பம் இவ்வுலகில் எங்கேனும் இருக்கிறதா?

ம: இல்லை.

தி: எல்லாவற்றையும் விடுவதால் மறப்பதால் ஏற்படும் இன்பத்துக்கு இது ஓர் எடுத்துக் காட்டாகும். இன்பம் புறத்தில் இல்லை. அகத்தில்தான் இருக்கிறது. மனம் எவ்வெப்பொருளை நினைக்கிறதோ; அவ்வப் பொருள்களை ஐம்புலன்களாகிய வாய்க்கால் வழியாய் வெளியேபோய் அவ்வப் பொருளாகாரமா விடுகிறது. அவ்வளவுதான். காலக்கிரமத்தில் நீர் பாத்தி பாத்தியாய் பாய்ந்துக்கொண்டு போகப் போக முன்பாய்ந்தவை வற்றிய வண்ணம் வருவதுபோல புற இன்பங்களும்



முன் அடைந்தவைகளை விட்டு மேன்மேலும் அடைய மாறிக்கொண்டே போகிறது. அவ்வளவுதான் வேறொன்றுமில்லை. ஆதலின் எத்தனை மனைவிகளை மணந்தாலும் மனைவியினிடத்தில் மாத்திரைக்குக் கூட இன்பம் இல்லை. மாறுக மாளாத துன்பமேதான்.

அதோ பார்! கதிரவன் காய்கிறான்; கானல் அதிகம்; கானல்நீர் பெருகிவிட்டது. பகுத்தறிவு இல்லாத சீவர்கள் தாகவிடாய் தீர்க்க எண்ணி அக்கானல் நீரை நம்பி ஓடியோடி மடிகின்றன. ஆனால் பகுத்தறிவு படைத்த நாம்; அந்த உண்மையை உணர்ந்த நாம்; அதில் மயங்குவதும் இல்லை; மடிவதும் இல்லை அல்லவா?

அதைப்போலத்தான் உலக இன்பங்கள் எல்லாமாகும். முடிவில் துன்பத்திலேயே கொண்டு சேர்க்கும்.

அதோ அங்குப் படுத்திருக்கும் நாயைப் பார்! அதன் கண்முன் இருப்பது என்ன? அதன் முன்கால் பற்றிக் கொண்டிருப்பது என்ன? பழைய எலும்பு; மாமிசமற்ற எலும்பு; காய்ந்த எலும்பு அல்லவா?

ம: ஆம்.

தி: அதில் ஏதேனும் கொஞ்சமாவது ரசம் இருக்குமா?

ம: இருக்க வழி இல்லை.

தி: பின் ஏன் அந்நாய் எலும்பை அவ்வளவு மதிப்பாய்; பத்திரமாய் பார்த்துக்கொண்டிருக்கிறது?

ம: தன் இனமாகிய மற்ற நாய்கள் பற்றிக்கொண்டு போய்விடும் என்றுதான்.

தி: அந்த எலும்பால் அந்த நாயுக்கு என்ன பயன்?

ம: நாயிக்கு அந்த எலும்பால் ஒரு பயனும் இல்லை என்று நாம் நினைக்கிறோம். ஆனால் அந்நாய் அப்படி நினைப்பதில்லையே!

146

தி: உண்மை என்ன? அது நினைப்பது என்ன?

ம: முற்றும் மாறாகவே இருக்கிறது.

தி: ஆம்; நாய் எலும்பைக் கடிக்க கடிக்க எலும்பு நொருங்கி நாய் வாய் எகுருகளில் குத்துகிறது. அதனால் ரத்தம் கசிகிறது. நாய் அதன் ருசியைப் பார்த்ததும் எலும்பிலிருந்துதான் ரத்தம் வருகிறது என்றெண்ணி மேன்மேலும் கடிக்கிறது. அதனால் ரத்தம் பெருகிறது. அதை ஆவலாய் உறிஞ்சுகிறது. காலக்கிரமத்தில் அதன் எகுரு வலிக்கவாரம்பிக்கிறது. எலும்பைக் கடிப்பதை

விடுகிறது. ஆனல் அதை இழக்க விரும்புவதில்லை. மற்ற நாய்கள் அதைக் கௌவிக்கொண்டு போகாவண்ணம் அதைத் தன் காலடியிலேயே வைத்துக் கொண்டிருக் கிறது.

அதைப்போலத்தானப்பா பெண்ணால் பெறும் இன்பமுமாகும். எப்படி எலும்பிலிருந்து அணுவளவுகூட ரத்தம் இல்லையோ, அதைப்போலத்தான் பெண்ணிடத்தி லிருந்து ஆணுக்கு அணுவளவுகூட இன்பம் வருவதில்லை. எப்படி நாய் தன் வாய் ரத்தம் வருவதையே எலும்பினால் ஏற்படும் இன்பம் எனக்கருதி அவ்வெலும்பைக் காத்து வருகிறதோ அதைப் போலவே ஆணும் தன் வீரியம், உடல் உருகி விந்து வடிவமாய் சக்தி, தேஜஸ் வெளிப்படு வதையே பெண்ணால் ஏற்படும் இன்பம் எனக்கருதி அந்தோ! அநியாயமாய் நாள் தவறாமல் தற்கொலை செய்துக்கொள்ள தவறுவதே இல்லை. இதை என்னென் பது? ஒருநாள் தவறுமாயின் தன் இன்பம் தவறிவிட்ட தென்று துன்பப்படுகிறவனை என்னென்பது?

பிறந்து மண்மீதில் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்து சிற்றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்து முன்றேதடு மாறிப் பொன்தேடி அப்பாவையர்க்
கீந்திறந்திடவோ இறைவன் படைத்தான்?

**147**

எண்ணிப் பார்! இதுதான் பகுத்தறிவு படைத்த மனிதவர்க்கம் செய்யக் கூடியதா? மனிதப் பிறவி அடை வதற்காக இவன் பட்டபாடென்ன? அதை அடைந்த பின் இவன் தொடர்ந்து செய்யும் வேலை என்ன?

* (ஒரு பெண்ணுடன் கலந்து அனுபவித்த இன்பந்தானே உலகத்திலிருக்கும் அத்தனைப் பெண்களிடமும் இருக்கும். இதில் பித்துப் பிடித்து அலைவது ஏனோ?)

மந்திரவாள் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்
டந்தோதன் மெய்யை அரிந்தான்போல் நிந்தஉடல்
கொண்டுமுத்தி செல்லுங் குறிப்பின்றிச் சிற்றின்பம்
கண்டுவிளைக் காளாம் கணக்கு.

அந்தோ! மக்கள் :—
கையினால் அறையுண்ணும் பந்து போலக்
காலனால் அறையுண்டு கணக்கி லாத
மெய்யிலே புகுந்தழுத்து விவேகம் பெற்றும்
விரகிலார் பலர்பிறப்பில் மீண்டும் வீழ்ந்தார்—

ம: ஐயனே! என் அறியாமை அகன்றது. அநியாயமாய் இந்நாள்வரை புன்மாதருக்கே உழைத்த புல்லியனேன். பெண்ணையே இன்பக்களஞ்சியமாக எண்ணி நான் பட்டதெல்லாம் போதும் பராபரமே! கெட்டது என் முன்னைய வாழ்வு; இனி அதைக் கனவிலுங் கருதேன்; என் குருவே இனி அல்லும் பகலும் ஆன்ம சுகத்திற்கே உழைப்பேன்.

தி: (அமைதி விளங்க) ஆம்; உடம்பினைப் பெற்ற பயனுவதெல்லாம் உடம்பினில் உத்தமனைக் காண்பதற்காகத்தான். இ[illegible]த மறந்தவன் இறந்தவனேயாகிறான்; இதை அறிந்தவன் பிறவாநிலையை அடைகிறான்.

தி: (சுகதேவரை நோக்கி) இவ்வளவு தூரம் எழுந்தருளிய காரணம் யாதோ?

சு: அன்று என் சந்தேகம் தீரவேண்டி என் தந்தையால் ஏவப்பட்டு பூலோகம் வந்து சனகராசனை சந்தித்தேன். பின் கங்கைக் கரையில் கடுந்தவமிருந்து காயத்தை விட இருக்கும் பரிச்சித்து மன்னனுக்குக் கண்ணனுடைய கதாமிர்தமான பாகவதத்தை போதிக்க பூலோகம் வந்தேன். இப்பொழுதோ அப்படியல்ல; கைலாயநாதர் கட்டளைப்படி வெளிப்பட்டிருக்கிறேன்.

தி: அப்படியா? ரொம்ப நல்லது.

சு: தாங்கள் கைலாயம் காண எப்பொழுது வருவீர்கள்?

தி: சிவபெருமான் சித்தம் எப்படியோ?

சு: சீவர்களை அனுசரித்துத்தானே எல்லாம் சிவபெருமான் நடத்துகிறார்.

தி: இருக்கலாம்; உண்மைதான்.

சு: கைலாய வாசிகள் தங்களைக் காண விரும்புகின்றனர்.

தி: விரும்பலாம். இன்னும் என் வேலை இங்கு முடியவில்லையே!

சு: ஓகோ; அப்படியா? சரி; சரி; சித்தம் போலிருக்கலாம். அந்த ஓலைச்சுவடி என்ன?

தி: திருக்குறள்.

சு: தமிழ் சங்கத்தில் தனி மதிப்புடன் விளங்குவதும்; அரங்கேற்றப்பட்டதும் தானே?

(திருவள்ளுவர் மௌனமுடன் திருக்குறள் கட்டை எடுத்துக் கொடுத்தார். சுகதேவர் வாங்கினார். முதலி

ருந்து முறையாய் முடிவு வரையில் படித்துப் பார்த்தார்.)



சு: நேர்த்தியா யிருக்கிறது; நியமமுடன் அமைந் திருக்கிறது. மனித உலகில் மட்டுமல்ல; மற்றெந்த உலகத்திலும் செல்லத்தக்கதாய்; கொள்ளத்தக்கதா யுள்ளது. நல்ல வேலை, சரி, நான் வருகிறேன்.

திருக்குறள் கட்டை திருப்பிக் கொடுத்துவிட்டு நடந் தார் சுகதேவர்.

*10*

# 23. இன்னமுதும் பெண்ணுலகும்

திருவள்ளுவர் தியானம் கலைந்து உலக நாட்டத்தில் உட்கார்ந்திருக்கிறார். உச்சி நேரம் வந்தது; உணவுக்கு இனி ஊரை நாடி போக வேண்டியதுதான். எப்பக்கம் போவது என்ற எண்ணம் எழவில்லை. எனவே அவர் உடலும் உட்கார்ந்த இடத்தை விட்டு எழவில்லை. மனமும் மந்த நிலையில் எந்த எண்ணமுமின்றி யிருக்கிறது. கதிரவன் காய்வதும் கொடுமையாயிருக்கிறது.

இந்த நேரத்தில் கூடையை தலையில் வைத்த வண்ணம் நடுவயது பெண் ஒருவள் வந்தாள். திருவள்ளு வர் முன் கூடையை இறக்கி வைத்தாள். உட்கார பாய் பரப்பினாள்; அதன்முன் இலை விரித்து நீர் தெளித்தாள்; இன்னமுதை இலை நடு வைத்து இருக்கும் கறி வகை களையும் கனிவகைகளையும் அதற்குப் பக்க துணையா யிருக்கும் வண்ணம் சுற்றி வைத்தாள். தண்ணீர் சொம்பு

எடுத்து திருவள்ளுவர் தாள் அருகில் வைத்தாள். வணங்கினாள்.

பெண் : ஐயனே ! அமுது கொள்ள எழுந்தருளும்.

திருவள்ளுவர் (பணிவுடன்) தேடிவந்து இவ்வளவு கனிவுடன் உணவளிக்கும் தாங்கள் யாரம்மா ?

பெ : (அமைதியுடன்) கணவனை வருத்திய பெரும் பாதகி ஐயா !

தி : (தயக்கமுடன்) ஏன் அப்படிச் சொல்ல வேண்டும் ?

பெ : (பணிவுடன்) ஆம் ஐயா ! உள்ளதைச் சொன்னால்தானே உபத்திரவம் குறையும்? உள்ளதை மறைத்தால் கள்ளத்தனம் வளரும்; உபத்திரவம் பெருகும்.



உயிருள்ளவரை அதை மறைக்க ஓயாது பொய் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டுமல்லவா ?

தி : அப்படியா ? சரி ; உள்ளதைச் சொல்லும்.

பெ : ஐயா, ஏழு ஆண்டுக்கு முன் என்னை பக்கத்து ஊரில் பார்த்திருப்பீர்களே !

தி : இருக்கலாம் ; பார்ப்பவர்களை எல்லாம் நினைவில் வைத்திருக்க முடியுமா ?

பெ : என்னுடன் வாதாடியு மிருக்கிறீர்களே !

தி : இருக்கலாம்; சந்தையில் வாதாடுபவர்களை எல்லாம் நினைவில் வைத்திருக்கிறாயா ?

பெ : அது என்ன முடியும் காரியமா ?

தி: அதைப் போலத்தான்.

பெ: ஐயா; அன்று தெருவில் வந்துக் கொண்டிருக்கும் தங்களுக்கு உணவு கொடுக்க என் கணவர் சொன்னார். அதற்காக நான் அவரை பேசிய வசை கொஞ்சமா?

தி: (யோசித்து நினைவு வந்தவராய்) ஓகோ! அந்தப் பெண்தானா?

பெ: ஆம் ஐயா; தங்களைக்கூட திட்டிய சண்டாளி தான்.

தி: உன் கணவர் எங்கே?

பெ: அவர் இருக்கும் இடம் எனக்குத் தெரிந்திருந்தால் இந்த எண்ணமும் புத்தியும் எனக்கு ஏற்பட்டிருக்காதே!

தி: (வியப்புடன்) என்ன!

பெ: அன்று சென்றவர்தான்; இன்றுவரை அவரைக் கண்டவர் யார்?

தி: அவரைக் கண்டால் என்ன செய்வாய்?



பெ: அவர் காலடியில் விழுவேன். பண்ணிய பாவ சாந்திக்காக என் கண்ணீரால் அவர் கால்களை கழுவுவேன். குருவாகக் கொள்வேன்; குற்றேவல் செய்வேன். மறுமொழி பேசேன்; மன்னிப்பு வேண்டுவேன். கருமவினை—.

தி: இந்த எண்ணம் உனக்கு எப்படி வந்தது?

பெ: தங்கள் உபதேசத்தால் அவர் துறந்தேகி விட்டார். சீருக்கோ குறைவில்லை. எல்லாம் உள்ளது தான்; ஆனால்—(பெருமூச்சு விட்டாள்) கணவரைக் கடிந்து நான் வாழ்ந்ததை எண்ணும்போது அந்தோ!

(தேம்புகிருள்) என் அடிவயிறே எரிகிறது ஐயா! இதற்கு மேல்—பாவி. அதன் பிறகுதான் உண்மை விளங்கியது. மனைவியின் கடமையை உணர்ந்தேன். ஊர்தோறும் ஆள் அனுப்பினேன். பாழ் வினை பிரித்தது பிரித்ததேதான்.

தி: கடந்ததைக் கருதி வருந்துகிருய்!

பெ: திருந்திவிட்டேன். கணவர் மனம் கோகாது வாழ்வதே கற்புடைய பெண்ணுக்கு அழகு என்பதை உணர்ந்து விட்டேன் ஐயா. அதுமட்டுமல்ல; என்னுல் முடிந்தவரை பெண்களுக்கு எடுத்துச் சொல்லியும் வருகிறேன்.

தி: எப்படி?

பெ: திருமணம் என்பது என்ன? ஆணுக்கும் பெண்ணுக்கும் அன்றையிலிருந்து ஏற்படும் ஓர் ஒப்பந்தம் தானே? பலர் அறிய அந்த ஆண்மகனுக்கு அடங்கி வாழ்வதாய், கணவன் கட்டுக்கு அடங்கி அவருடன் உறவு கொண்டு உயிர் உள்ளளவும் வாழ்வதாய்; ஒப்புக்கொண்ட தன் அறிகுறியாய் பெண் தன் கழுத்தில் திருமணக் கயிறை; மாங்கல்யத்தை கட்ட அனுமதிக்கிருள்; அமைதியாக இருக்கிருள். பிறகு கணவனை எதிர்ப்பதோ, மீறி நடப்பதோ, கடிவதோ மனைவிக்கு அழகல்ல. அது பெண்ணுக்கு ஒழியா பழியும் பாவமும் வளர்ப்பதோடு தீராத தீமையை தேடியே பிறவிதோறும் தரும்.

இ: அப்படியா?

பெ: இவ்வுண்மையை உணர்ந்த பின் எனக்கு ஆண்களிடமே ஒரு அலாதியான மரியாதையும் அடக்கமும் தானே வந்துவிட்டது. துறவிகளைக் கண்டால் ஒருவேளை உணவாவது கொடுக்க வேண்டும்; இல்லாவிட்டால் உள்ளம் சும்மாயிருக்காது; உறக்கமும் வராது; மறுநாள் என்னுல் உண்ணவே முடியாது. அதனுல் எப்போதும் என் வீட்டில் தூய உணவு தயாராக வைத்திருப்பேன். துறவிகளைக் கண்டால் போதும்; எதிர்சென்று அழைப்பேன். அல்லது உணவு கொண்டுபோய் கொடுப்பேன் தாங்கள் இம்மரத்தடியிலிருப்பதை மாடியிலிருந்து கண்டேன். அவ்வழக்கத்துக்கு இணங்க உணவு கொண்டு வந்திருக்கிறேன். குருவே எழுந்தருளும்; அண்ணலே அமுதுகொள்ளும்.

## 24. மறையவனும் திருவள்ளுவரும்

உச்சிவேளை; ஒரு வீட்டுக்குப் பிச்சைக்கு போஞர் துறவி. அதில் உறையும் மறையவன் தன் மகளுடன் ஒரிருக்கையில் உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தான். அதைக் கண்டார் துறவி; கணமும் நிற்காது அவ்வாசலை விட்டகன்ருர். அதைக் கண்டான் அம் மறையவன்; உடனே கூப்பிட்டான். அதைக் கேட்டும் கேளாதவர்போல் துறவி மேலும் நடந்தார். அதை யறிந்து அம்மறையவன் விரைந்து வந்து அவர் குறுக்கே

நின்றான்.

மறையவன்: உணவுக்கு வந்தவர் ஒரு வினாடிகூட நில்லாது, ஏன் எதுவும் ஏற்காது போகிறீர்?

துறவி: (அமைதியுடன்) உங்களுக்கு உபத்திரவம் கொடுக்கக் கூடாது என்றுதான்.

மறை: ஒரு உபத்திரவமும் இல்லை. உங்களைக் கண்டதும் உணவு கொண்டு வரச் சொன்னேன்.

து: இருவரும் ஒரு இருக்கையிலிருக்கும்போது துறவி அங்கே நிற்பது நியாயமா?

ம: (அழுத்தமாக) ஏன் இருக்கக் கூடாது? தாராள மாய் இருக்கலாமே! நானும் என் மகளும்தான் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்.

து: (தன் குற்றம் உணர்ந்தவர்போல) அப்படியா? சரி, சரி, பெண் பெரியவளாயிருந்தாளே!

ம: ஆம்; பருவமடைந்த பெண்தான். இன்னும் கணவன் கிடைக்கவில்லை.



து: தாங்கள் மறையவர்தானே?

ம: (அழுத்தமாய்) சந்தேகமென்ன.

து: (மெதுவாய்) பருவமடைந்த மகளுடன் தந்தை யேயாயினும் ஒரு இருக்கையில் தனியே உட்கார்ந்திருக்க லாமா?

ம: என்ன! வேடிக்கையான கேள்வியாக அல்லவா இருக்கிறது. ஏன் இருக்கக் கூடாது? தகப்பன் தன் மகளுடன் உட்கார்ந்திருப்பதில் என்ன தவறு இருக் கிறது?

து: அந்தணரே அப்படிச் சொல்லாதீர்.

ம: (வெடுக்கென) குற்றம் என்ன கூறுமையா?

து: ஆசாரக் கோவையை வாசித்திருக்கிறீர்களா?

ம: குருகுலத்தில் வாசித்திருக்கிறேன்.

து: வாசித்தவை எல்லாம் நினைவிலிருக்கின்றனவா?

ம: எல்லாம் எப்படி நினைவிலிருக்க முடியும்? ஏதோ சில இருக்கும்.

தி: தம் வாழ்வுக்கு வேண்டிய ஒரு சிலவாவது இருக்கும் அல்லவா?

ம: நிச்சயமாக இருக்கும்; இல்லாவிட்டால் படித்ததின் பயன்தான் என்ன?

தி: அப்படியா சரி! ரொம்ப நல்லது; நிச்சயமாய் நினைவிலிருக்க வேண்டியவை சிலவற்றுள்ளும் முக்கியமான ஒன்றை சொல்லுகிறேன் கேள்.

ம: தாராளமாய் சொல்லும்.

தி: ஆசாரக் கோவை அறுபத்தைந்தாவது சூத்திரம் சொல்லுவதைக் கேளுமையா:



*ஈன்றாள் மகள்தன் உடன்பிறந்தா ளாயினும்*
*சான்றோர் தமித்தா உறையற்க ஐம்புலனும்*
*தாங்கற் கரிதாக லான்.*

ம: (மிரண்ட பார்வையில்) இதை எல்லாம் நடைமுறையில் எங்க அனுசரிக்க முடியுதுங்க!

தி: (அழுத்தமாக) முக்கியமானவைகளையே அனுசரிக்க முடியவில்லையானால் கற்றவனுக்கும் கல்லாதவ

னுக்கும் உள்ள பேதம் என்ன?

ம: (செருக்குடன்) அது இருக்கட்டும். நான் மறையவன் என்பது உமக்கு முதலில் நினைவிருக்கட்டும். நான் உணவுக்கு அழைக்கிறேன். என்ன சொல்லுகிறாய்?

தி: (அடக்கமுடன்) அன்ப! அதற்கு திரிகடுகம் இருபத்தைந்தாவது வெண்பா சொல்லுகிறது கேளும்:

செருக்கினால் வாழும் சிறியவனும் பைத்தகன்ற
அல்குல் விலைபகரு மாய்தொடியும்—நல்லவர்க்கு
வைத்த அறப்புறங் கொன்றானு மிம்மூவர்
கைத்துண்ணார் கற்றறிந் தார்.

## 25. தொங்கத் துணிந்தவனும் திருவள்ளுவரும்

கோடையின் கொடுமைக் காற்றாது ஓடையின் கரையிலிருக்கும் அரசமரத்தடியிலுள்ள மேடையில் ஆயாசம் தீர அமர்ந்திருக்கிறார் திருவள்ளுவர்.

வேதனையின் சோதனைக்கு இரையான ஒருவன் வேகமாக வந்தான். பின் பக்கமாக அரசமரத்தின்மேல் ஏறினான். அதன் கிளை ஒன்றில் சுருக்கிட்ட சிறு குட்டையான கயிறு ஒன்றை கட்டினான். அதைக் கண்டார் திருவள்ளுவர். உடனே அவனை நோக்கிய வண்ணம் "என்ன செய்யப் போகிறாய்?" என்றார்.

இப்பொழுதுதான் அவனுக்கு மரத்தடியின் மறு

பக்கத்தில் ஒருவர் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. என்றாலும் அவன் அஞ்சவில்லை. துஞ்சத் துணிந்தவன் ஏன் அஞ்சவேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது. எனவே அவன் "ஏன் கேட்கிறீர்கள்? எனக்குப் பிரியமான இடத்துக்கு போகப் போகிறேன்" என்றான்.

அவன் அறியாமைக்கு இரங்கிய துறவி "நில்" என்றார். அச்சொல் அவன் உள்ளத்தில் கல் அடிபட்டது போல வலி உண்டாக்கியது. அடுத்தாற்போல் "இறங்கி வா" என்ற சொல் வந்ததும் காந்தத்தை நாடும் இரும்பு போல இறங்கி வந்து சாந்த சொரூபியான திருவள்ளுவர் முன் நின்று தேம்புகிறான்.

திருவள்ளுவர்: இத் துக்கம்; இந்த வெறுப்பு உனக்கு வரவேண்டிய காரணம் என்ன? உன் ஊர் எது? பெயர் என்ன? பதறாமல் சொல்.

செல்லன்: என் பெயர் செல்லன்; ஒரு கல்லுக்கு மேற்கேயுள்ள மல்லூரைச் சேர்ந்தவன். மனைவியோ



என்னை மதிப்பதில்லை. சொல்லுக்குச் சொல் மல்லுக்கு நிற்கிறாள். பிள்ளைகளோ எல்லாம் பெருச்சாளிகளாகவே இருக்கின்றன. உடன் பிறந்தவர்களோ என்னை இறந்தவனாகவே மறந்து விட்டனர். பந்துக்களோ பகையாளியாகவே என்னைப் பார்க்கின்றனர். இப்படி எல்லாரும் என்னை வெறுக்கும் பொழுது நான் ஏன் உயிரோடு இருக்கவேண்டும்? இனி நான் உயிரோடிருக்கும் வரை ஒரு கணமாவது சுகப்பட முடியாது. ஆகவே சாகத் துணிந்து கொண்டேன்.

தி: இவ்வளவும் எப்படித் தெரிந்து கொண்டாய்?

செ: இந்நாள் வரையில் நான் கண்டு அனுபவித்துக் கொண்டு வருவதைக் கொண்டே சொல்கிறேன்.

தி: அப்படியா? சரி; ரொம்ப நல்லது. நீ இறக்கத் துணிந்து கொண்டாய் அல்லவா?

செ: ஆம்.

தி: அதற்கு நான் சகாயம் செய்கிறேன்; அதற்குள் நீ எனக்கொரு சகாயம் செய்வாயா?

செ: ஓ! என்னால் முடிந்ததை தாராளமாய் செய்கிறேன் சொல்லும்.

தி: (அழுத்தமாய்) உன்னால் முடிந்ததை ஒழியாமல்; மறுக்காமல் உறுதியாய் செய்வாயா?

செ: (உறுதியுடன்) நிச்சயமாய் செய்வேன்; இது சத்தியம்; சொல்லும்.

தி: (கெம்பீரமாக) திரும்பிப்பார்!

(செல்லன் திரும்பிப் பார்த்தான்; ஒன்றும் அவனுக்குத் தென்படவில்லை; திருவள்ளுவரையே திரும்பிப் பார்க்கிறான்)

தி: நீ இப்பொழுது திரும்பிப் பார்த்தது போலவே உன் முன்னாள் வாழ்வைத் திரும்பிப் பார்! இளமையி



லிருந்து இந்நாள் வரையில் நீ வாழ்ந்த வாழ்வை; எல்லாரிடமும் நீ நடந்துகொண்ட முறையை; அவ்வப்பொழுது நீ எண்ணிய எண்ணத்தை எல்லாம் ஒன்றுவிடாமல் திரும்பிப்பார்! அப்படியே அவைகளை என்னிடம் மறைக்காமல் சொல். நீயோ மரிக்கத் துணிந்துவிட்டாய்.

ஆதலின் இனி எதையும் நீ மறைக்கவேண்டிய அவசிய மில்லை. உள்ளதை இப்பொழுதாவது என்னிடம் சொல்; நல் வழி அடைவாய்.

வெளிப்பார்வை குறைந்தது. உள் நாட்டம் கொண் டான். மனத்திரையில் திரும்பிப் பார்க்கிறான்; திரும்பிப் பார்க்கிறான். இளமையிலிருந்து எல்லாவற்றையும் ஆதி யோடு அந்தமாக எல்லாவற்றையும் எண்ணிப் பார்க் கிறான். இப்பொழுதோ அவனுக்கு அறுபது வயது ஆகிறது. அறியாப் பருவமாய் கழிந்த ஆண்டு ஐந்து போக; ஆறும் வயதிலிருந்து பத்தாம் வயது வரை அறி யாத வழியில் செல்வதுபோல; அவனுக்கு ஏதோ சில தான் நினைவுக்கு வந்தது. ஆனால் பகுத்தறிவு ஆரம்ப மாகும் பதினோரும் பருவத்திலிருந்து எல்லாம் உருப் பெற்று மனத்திரையில் ஒன்றன்பின் ஒன்றாய் வந்த வண்ணமாயிருந்தன.

நெடுநேரம் ஆனது. திருவள்ளுவர் அவன் முகக் குறியை நோக்கிய வண்ணமாகவே இருக்கிறார். இரண் டொரு சமயம் தவிர அவன் முகத்தில் நல்ல சாயையே தோன்றவில்லை. கோரமும் வெறுப்பும் கோபமும் பொறா மையும் காமமும் செருக்கும் வஞ்சகமும் ஏமாற்றமும் அவன் நெஞ்சகத்தில் இளமையிலிருந்தே நிலை கொண்டி ருந்ததை வஞ்சனையின்றி அவன் முகம் அவ்வப்பொழுது விளக்கி நின்றது.

இத்தகையவன் இன்பமடைவது எப்படி? எவருக் குத்தான் இவன் நல்லவனாய் இருந்திருக்க முடியும்? யார் தான் இவனை வெறுக்காதிருப்பர்? இவன் முகச்சாயை யின் மாற்றத்தை அவவப்பொழுது இவனே பார்க்க

வாய்ப்பு இருந்திருக்குமாயின் இவனே தன் செயலை வெறுப்பான். அப்படியிருக்க மற்றவர்கள் இவனை மதிப்பரோ ? என்று தனக்குள் நினைத்தார் துறவி.

கதிரவன் மேற்கில் சாயச்சாய கோடையின் கொடுமை குறையவாரம்பித்தது. அதற்கேற்ப வாடையும் வரத் தொடங்கியது. அதோடு இடையிடையே தென்றலும் திருநடனம் புரியத் தொடங்கியது. மஞ்சள் வெய்யிலில் மைனா; மடையான் முதலான பறவைகள் இரைச்சலுடன் இரைதேட வாரம்பித்தன.

மாலை வெய்யில் மறையும் தருணத்தில் செல்லன் விழி வெளிப் பார்வைக்கு வந்தது. பெருமூச்சு விட்டான் ; பேச நா எழவில்லை. ஏன் ?

எதை யெதை இப்பொழுது அவன் தனக்கு தன் மனைவியும் மக்களும் மற்றவர்களும் செய்யக் கூடாது என்று எண்ணுகிருனே; அவைகளையே தான் அவன் தன் பெற்றோர்களுக்கும் உடன்பிறந்தவர்களுக்கும் மற்றவர் களுக்கும் செய்து வந்திருக்கிருன். பருவமும் உருவமும் அவன் செயலுக்குப் பக்க பலமாயிருந்தன. இப்பொழுதோ எல்லாம் தளர்ந்து விட்டன ; பற்களும் உதிர்ந்து விட்டன ; பார்ப்போர் பாவம் என்ன செய்வான் என்று எண்ணும் நிலைக்கு அவன் உடலும் உள்ளமும் வயதும் வந்திருக்கின்றன. இந்நிலையில் அந்நிலையை நினைக்கவே மெய் நடுங்குகிறது. என் செய்வான் ? அந்தோ ! படுபாவி.

"இதுவரையில் நீ உன் மனத்திரையில் எதை

யெதைக் கண்டாயோ அவைகளை மட்டும் சொல். கூட்டியோ குறைத்தோ சொல்லவேண்டாம். இப்பொழுது உண்மைக்கு மாறாக ஒரு வார்த்தை கூட வரக் கூடாது" என்றார் துறவி.

இந்நிலையில் செல்லனைத் தேடிக் கொண்டு அவன் பக்கத்து வீட்டுக்காரன் பலராமன் வந்து சேர்ந்தான்.



பலராமனைக் கண்டதும் செல்லனுக்கு சொல்லொணா துயரம் ஏற்பட்டது. ஏன்? பலராமனுடைய சென்ம விரோதி இவனாகும். அவனுக்கு இவன் செய்த தீமைகள் கொஞ்சமல்ல: இவன் மனைவியும் மக்களும் இவனோடு சேர்ந்துக் கொண்டு செய்த கொடுமைகள் கொஞ்சமல்ல. இவனை அறியாமல் இவன் மனைவியும் மக்களும் செய்த தீமைகளும் பேசிய வசை மொழிகளும் அளவிலடங்கா தவைகளாகும். காரணம் என்ன?

பலராமன் இவன் உடன் பிறந்த தம்பியாகும். இவர்களுடைய படுமோசமான எண்ணங்களும் வார்த்தைகளும் செயல்களும் நாள்தோறும் கண்டும் கேட்டும் வெறுப்படைந்து விட்டான். அதனால் இவர்கள் முகத்திலேயே அவன் விழிப்பதில்லை.

தீயாரைக் காண்பதுவும் தீதே
தீயார்சொல் கேட்பதுவும் தீதே
தீயார்குணங்க ளுரைப்பதுவும் தீதே
அவரோடிணங்கி யிருப்பதுவும் தீது.

என்பதற் கிணங்க எல்லா விதத்திலும் அவர்களுடைய தொடர்பற்று தனி வாழ்வு நடத்தி வருபவனாகும் பலராமன்.

அமைதியே வடிவான தம்பியைக் கண்டதும் தேம்பி அழுவாரம்பித்து விட்டான்.

தி: அழுவதால் ஆகப்போவது ஒன்றுமில்லே. இனிப் பழுதில்லாமல் நடக்க உறுதி கொள்.

செ: அது என்னுல் முடியாத காரியம்.

தி: தன்னைப்போல் பிறரை எண்ணுதவன் நிலே எல்லாம் இப்படித்தான் முடிவடையும். உனக்கு இனி உயிரோடிருக்க விருப்பமில்லே: இறக்கத் துணிந்து விட்டாய் அல்லவா?

செ: ஆம்.



தி: சரி; இறப்பதற்கு முன் ஒரு காரியம் செய்ய வேண்டும்.

செ: என்னுல் முடியுமானுல் சொல்லுங்கள் செய்கிறேன். இறக்குமுன் ஒரு துறவிக்கு ஏவல் செய்தேன் என்ற எண்ணத்தோடாவது மரிக்கிறேன்.

தி: ஆம்; அப்படியே செய்; நல்லது; நீ திரும்பிப் போய் ஒன்றையும் மறைக்காமல் உன் வாழ்க்கை வரலாற்றையும்; அதனுல் நீ அனுபவித்தறிந்துவந்த உண்மைகளேயும் உன் மனைவி மக்களிடம் சொல். அதற்குப் பரிகாரமாகவே இப்பொழுது மரிக்கப் போகிறேன் என்று சொல்லி விட்டு உடனே ஓடிவந்து விடு, கயிற்றை சுருக்கிட்டு வைத்துக் கொண்டு நான் தயாராயிருக்கிறேன். அக்கயிற்றை என்னிடம் கொடுத்துவிடு; செல்; நாளே காலேவரை நான் இங்கேயே யிருப்பேன். உச்சி வேளேயில்தான் பிச்சைக்குப் போவேன். (கயிற்றை வாங்கிக் கொண்டு) போய் வா சீக்கிரம்.

# 26. படிப்பாளியின் புகார்

தண்ணீர் குடித்து விட்டு குளக்கரையில் அமர்ந்திருக்கிறார் திருவள்ளுவர். பெரும் படிப்பாளி ஒருவன் வந்தான். உண்மையை உரைக்காது தான் நம்பியிருந்த ஒருவர் தனக்குத் துரோகம் செய்துவிட்டார் என்று சொல்லி முறையிட்டான்.

திருவள்ளுவர்: நீ அவரை நம்பியிருந்ததாய் சொல்லுகிறாய் அல்லவா ?

பெரும்படிப்பாளி: ஆம்; அவருக்காக உழைத்தேன்; அருளாளர் என்றெண்ணி பொருளுதவியும் செய்தேன்.

தி: நல்லது; எதற்காக இவ்வளவும் செய்தாய் ?

பெ: நல்லார் இணக்கம் வேண்டுமென்றுதான்.

தி: சரி; அவர் இப்பொழுது பொல்லாத வழியில் சென்று விட்டாரா ?

பெ: இல்லை; அவர் அதே மாதிரிதான் இருக்கிறார்; ஆனால் என் உறவை மட்டும் வெறுக்கிறார்.

தி: ஏன் ?

பெ: அதுதான் எனக்கு விளங்கவில்லை.

தி: விளங்காததை அவரிடமே சென்று வினவலாமே !

பெ: என்னை காணவே விரும்புவதில்லை; அவரை நெருங்கி நான் எப்படிக் கேட்பது ?

தி: அப்படியா? சரி; நான் வருகிறேன். என் பின் வா. நான் அவரைச் சந்திக்கிறேன்: சந்தேகமின்றி கேட்கிறேன். நீ மறைந்திருந்து அவைகளை அறிந்துக் கொள்; திருந்திக் கொள்.

164

ஊருக்கு வடக்கே; நடைபாதைக்கு மேற்கே; வடக்கு வாசல் வீடு. மாலை நேரம். மேகம் சூழ்ந்திருக்கிறது. கிழக்கேயுள்ள புளியந்தோப்பின் குளிர்ந்த காற்று அசைந்த வண்ணமிருக்கிறது. வாசலின் கிழக்கு பக்கம் முக்காலிமேல் தொண்ணூறுங் கடந்த பாட்டி ஒருவள் கால் நீட்டி உட்கார்ந்திருக்கிறாள். அதற்கு சற்று மேற்கே வில்வ மரத்தடியில் இருக்கும் சிறு திண்ணைமேல் கோவணாண்டி ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். தெற்கு பார்த்த வண்ணம் அவனுக்குப் பின்னே வடக்குப் பக்கமிருக்கும் இரு சிறு தென்னை மரங்களின் மட்டைகள் நீண்டு தன் சோலையை அவன் அமர்ந்திருக்கும் இடத்துக்குமேல் விரித்தவண்ணம் இளந்தம்பதிகள் உறவாடுவது போல மென்காற்றசைவால் தன்பாட்டுக்கு ஆடுகின்றன.

இதனடியில் அமர்ந்திருக்கும் அக்கோவணாண்டியோ அகமுக நோக்கில் அமைதியே வடிவமாய் ஆழ்ந்திருக்கிறான். ஆனால் அவ்வழி செல்லும் ஆணவத்தார்களோ இவனும் ஒரு ஆண்மகனா என்று இழிவு கூறிச் செல்வதை ஒரு வழக்கமாக்கிக் கொண்டிருக்கின்றனர். என்றாலும் எதையும் அவன் பொருட்படுத்துவதில்லை.

திருவள்ளுவர் வந்தார். கூர்ந்து நோக்கினார். உள் நோக்கில் இருப்பதை உணர்ந்தார். சிறிது நேரம் சென்றது; வெளிப்பார்வை வந்தது. எதிரே துறவி

ஒருவர் இருப்பதை அறிந்த கோவணாண்டி அவரை வரவேற்றான்; இருக்கை அளித்தான். திருவள்ளுவரும் அத்திண்ணையிலேயே அமர்ந்தார்.

திருவள்ளுவர்: வணக்கம்.

கோவணாண்டி: உண்மைப் பொருளுக்கு வணக்கம் ஏது?

தி: திண்மைப் பொருளுக்கு உணர்ச்சியில்லை.

கோ: இடைநிலையை குறிக்கும் இவ்வணக்கம்.



தி: ஆம்; அதற்குரிய விவகாரம் அறிந்து செல்லவே வந்தேன்.

கோ: நல்லது சொல்லும்; அறிந்தவரை சொல்லுகிறேன்.

தி: பெரும்படிப்பாளி ஒருவன் தங்களுடன் தொடர்பு கொண்டிருந்தான் அல்லவா?

கோ: ஆம்.

தி: இப்பொழுதும்—

கோ: தொடர்பில்லை.

தி: ஏன்?

கோ: பெருங்கதை.

தி: அதைச் சொல்ல வேண்டும்.

கோ: ஒருவரைப்பற்றி ஒருவரிடம் கூறுவது தவறு அல்லவா?

தி: என்னிடம் குறை வந்திருக்கிறது; அதை அறிந்து செல்லவே வந்துள்ளேன். ஆதலின் தவறில்லை.

தாராளமாய் சொல்லலாம்.

கோ: அப்படியா? சரி; சொல்கிறேன்.

பதினேழாம் பருவத்தில் தன் தாயை இழந்தான். அதன்பின் என்னுடன் தொடர்பு கொள்ளத் தொடங்கினான். அது முதல் அவன் பெரும்படிப்பாளியாகும் வரை என் வார்த்தையை மீறி அவன் நடந்ததே இல்லை. ஆடிவிட்ட பம்பரம்போல் ஏவல்படி நடப்பான். அதனால் அவனுடைய எல்லா பொறுப்புக்களையும் நான் கவனிக்கக் கடமைபட்டவனானேன்.

ஆசிரியர் பதவிக்கு வந்தான். ஆணவம் தலை எடுக்க ஆரம்பித்தது. அதை இடையிடையே கண்டு கண்டித்து

11

166

வந்தேன். அதனால் சண்டித்தனமும் குறை கூறலும் பித்தலாட்டமும் கேளியும் வளர்ந்ததே தவிர வேறில்லை. அதோடு மட்டுமல்ல; எனக்கு புத்தி சொல்லவும் ஆரம்பித்துவிட்டான்.

தன் தந்தை செய்த தவறை மறுத்தான்; மறைத்தான். அதற்காக பெரும் வாதமே கிளப்பினான். மலை வழியில் நால்வர் வந்துக் கொண்டிருக்கிறோம். மூவரிடமும் சொல்லாமல் இவன் மட்டும் குறுக்கு வழியில் இறங்கி விட்டான். இவனைக் காணாத நாங்கள் அன்று அந்த நேரத்தில் பட்டபாடு எப்படி இருக்கும் என்பதை துறவியாகிய தாங்களே எண்ணிப் பாருங்கள்.

தனபாலன் தான் அனுபவிக்க இருந்ததைத் தோதாக தந்திரமாய் தட்டிவிட்டான். பிறகு தான் கட்டி அனுபவிக்கின்றான். இவர்கள் நடுவில் இருதலைக் கொள்ளி எறும்பாக அகப்பட்டவன் நான். எனவே இவ்விருவர்

தொடர்பையும் துரும்பெனக் கருதி விலக்கினேன். இவர்களுடைய துன்பமின்றி வாழ்கிறேன்.

உலகில் மனைவி மக்களுக்காகவும், செல்வத்துக்காகவும், கீர்த்திக்காகவும், பிரியமானவைகளைப் பெறுவதற்காகவும் நியாயத்திலிருந்து; நடுவு நிலைமையிலிருந்து நழுவிப் போகிறவர்களுக்கோர் அளவில்லை. அதைப் போலவே நட்புக்காக நடுவு நிலையிலிருந்து நான் தவறினால் எனக்கும் மற்றவர்களுக்கும் பேதம் என்ன? பற்றற்று வாழ விழைபவன் குற்றங்கண்ட விடத்து நட்பை நாடுவானா? நியாயத்தை நாடுவானா? நீரே கூறும்.

ஒருவன் அறியாது ஆயிரம் தவறு செய்தாலும் மன்னிக்கலாம்; ஆனால் அறிந்து; தான் பெரும் படிப்பாளியாயிருப்பதையும் உணர்ந்து; வேண்டுமென்றே தன் சுயநலத்துக்காக தவறு செய்பவனை மன்னிப்பது என்பது மானத்தையும் புண்ணியத்தையும் விற்பதைத் தவிர வேறென்ன?

## 167

பொருளிருப்பவன் பொருளுதவி செய்யலாம்: அதற்காக அருளாளன் அருளுதவி செய்வானே தவிர அநியாயத்திற்கோ பட்சபாதத்திற்கோ எக்கணமும் இரையாக மாட்டான்.

---

தி: ஆம்; இப்பொழுதுதான் உண்மை விளங்குகிறது.

"நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்."

என்பதற்கோர் எடுத்துக்காட்டாக தங்கள் வாழ்வு அமைந்திருப்பதை உணர்கிறேன்; வருகிறேன்.

ஏரிக்கரையின் தென்பக்கம் இருக்கும் எட்டி மரத் தடியில் போய் உட்கார்ந்தார் திருவள்ளுவர். மறைவி லிருந்து எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த பெரும் படிப்பாளி அவரைத் தொடர்ந்து சென்று அவர் முன் வந்து அடக்கமுடன் நின்றான்.

தி: அவர் சொன்னவை எல்லாம் உண்மைதானே?

பெ: இருக்கலாம்; அதற்காக என்னை ஏன் நெருங்க விட மறுக்கிறார்?

தி: கொள்கை மாறியபின் கூடி உறவாடுவதின் அர்த்தமென்ன? இரண்டுங் கெட்டவர்கள் எதற்கும் இடங்கொடுப்பார்கள். ஆனால் ஒரு நிலையிலிருப்பவர்கள் பெரும்படிப்பாளியே! ஒருக்காலும் இடங்கொடுக்க மாட்டார்கள். நீயோ வெறும் நடிப்பாளி; சந்தர்ப்ப வாதி; உன் சகாயத்தை அவர் எதிர்பார்க்கிறாரா? இல்லையே. அவரைக் குறைகூறுவதால் பாவமூட்டை பெருகும் என்பதை மறவாதே! உன் நெஞ்சே உன்னை நெருக்கக்கூடிய காலம்; வருத்தக்கூடிய நேரம் வரும். இப்பொழுதோ உன் பருவமும் ஊதியமும் எதையும்



எண்ணிப் பார்க்க மறுக்கிறது. தக்க காலத்தில் எல்லாம் தானே விளங்கும். அவரோ:—

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்
[தொருபால்

கோடாமை சான்றோர்க் கணி.

என்பதற்கோர் எடுத்துக் காட்டாக இருக்கிறார் என்பதை மட்டும் உறுதியாகச் சொல்வேன்; நல்லிருள் நெருங்கு கிறது: செல்வாய் பெரும்படிப்பாளியே!

## 27. திருக்கைலாயம்

கணேசன் அருளால் கைலாயம் வந்து சேர்ந்தாள் ஔவை. ஔவையைக் கண்டதும் அனைவரும் ஆச்சரியப் பட்டனர். கைலாய வாயில் முன் அமர்ந்திருந்த நந்தி தேவர் வந்த ஔவைக்கு ஆசி கூறி வழி விட்டார்.

அனைவரும் "செந்தமிழ் செல்வி! வந்தனையோ கைலாயம்" என உற்சாகமுடன் வரவேற்றனர். ஔவை மலர்ந்த முகத்துடனிருக்கும் கைலாய வாசிகளைக் கண் டாள். பக்தியுடன் பார்வதி பரமசிவன் முன்போய் வணங்கினாள்; கந்தனையும் கணேசனையும் பற்றி பார்வதி யிடம் விசாரித்தாள்.

பார்வதி: ஒரு கனிக்காக அன்று வெறுத்துப்போன கந்தன் திரும்பி வரவில்லை. தம்பியை விட்டு தனித் திருக்க முடியாது என்று கந்தனை தொடர்ந்து சென்ற கணேசனும் அவன் நிழல் போலவே நின்றுவிட்டான்.

ஔ: தாய் உள்ளம் இப்படிப் பிள்ளைகளை விட்டு வாழுமா?

பா: சேய்களாய் இருந்தவரை சீராட்டி வளர்த் தேன். பிறர் பாராட்டுதல் ஏற்பட்டபின் பெற்றோர்களைப் பற்றிய எண்ணம் அவர்களுக்கு ஏது?

ஔ: (வியப்புடன்) என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? அவர்களை தென் நாட்டில் கண்டேன்.

பா: (பரிவுடன்) எப்படி இருக்கிறார்கள்? என்ன சொன்னார்கள்?

ஔ: கந்தனைக் கண்டேன்; கைலாயம் போகிறேன் வருகிறாயா என்றேன். உடனே குறும்புத்தனமாக "சுட்ட பழம் கேட்ட பாட்டியா?" என்றான். ஆம்; அப்பனே! இப்பொழுது என்ன சொல்லுகிறாய் என்றேன்.



பா: அதற்கு கந்தன் என்ன சொன்னான்.

ஔ: அவன் சொன்னபடியே சொல்கிறேன் கேள்:

தந்தையோ கடுந்துறவி தாயோ இளங்கன்னி
தொந்தி அண்ணனோ தூயஅக் கனியைஅன்று
முந்திவந்து பெற்றதால் முழுதையும் தானேயுண்டான்.
தம்பிஎன்ற எண்ணம் தமையனுக்குத் தர்னிருந்தால்
முந்திவந்தி ருந்தாலும் தம்பிவிட்டுத் தின்பானோ?
பிள்ளைஎன்ற எண்ணம் பெற்றோர்க்குத் தானிருந்தால்
இளையோனை ஏமாற்றி மூத்தோனுக் கீவாரோ?
மூத்தவன் பாசமென்றால் இளையவனை ஏன்பெறனும்?
பிறவியற்ற என்னை பரிந்துமக னாயடைய
பார்வதி விரும்பினாள் பார்த்தாவை வேண்டினாள்
முக்கண்ணன் இணங்கினான் முளைத்தேனான் சோதியாய்
சரவணப் பொய்கையில் உறைபவ னானேன்
முக்கண்ணில் உதித்தவனான் மூத்தோருள் மூத்தோனான்
கார்த்திகைப் பெண்களிடம் பார்த்ததே போதும்
ஆத்திரங் கொண்டு அக்குழந்தையை அடைந்து

உச்சிமுகர்ந்து உள்ளங்குளிர்ந்து பலசொல்லி புகழ்ந்து
பாலூட்டி வளர்த்த பார்வதியைப் பார்பாட்டி!
முந்தித்தவ மிருந்து முந்நூறு நாள்சுமந்து
தொந்தி சரிய தொலையா வேதனையுடன்
பிந்திபெற் றிருந்தாள் பிள்ளைவிட் டிருப்பாளா?
பார்த்தோர் பரிகசிக்க பெற்றோரைப் பிரிந்து
பாருலகே வந்துவிட்டேன்; படைவீடும் கொண்டு
[விட்டேன்
பக்தர்களை விட்டுநான் பெற்றோரை விரும்புவதா?
கைலாயமும் வேண்டேன் கனிவேண்டேன் பிணி
[வேண்டேன்
தென்னாடு உள்ளவரை என்னகுறை உண்டெனக்கு?
ஔவையே செல்லுவாய் அன்னையிடம் சொல்லுவாய்.

பா: இப்படியா சொன்னான் என் பிள்ளை?



ஔ: ஆம் அம்மா; சொல்லாததை சொல்வேனா?

பா: சரி, இருக்கட்டும்; கணேசன் என்ன சொன்னான்?

ஔ: கந்தனுக்கு இளைத்தவனா கணேசன்? கணேசன் கூறியதைச் சொல்கிறேன் கேளுங்கள்:—

அப்பனே ஆண்டியாகும் அம்மையோ அட்டறியாள்
அப்பனுடன் இருப்பதையே குறிப்பாய் கொண்டாள்
சப்பாணிப் பிள்ளைநான் சாப்பாட்டுக் கென்செய்வேன்?
தொப்பை நிறைய தோதாக உண்ணவேண்டும்
கைலாய பூமியே கண்டறியா உண்டிவகை
கொண்டது தென்நாடு; கொடுப்பது தென்இனம்
முக்கனியும் சோறும் மோதகமும் ஒப்பட்டும்—ஆகா!

சுண்டல்அவல் கடலை சொல்லொணு தின்பண்டம்
உண்டஎன் வாயும் கொண்டஎன் வயிறும்
கைலாயம் கருதுமா ? கடும்பசியை விரும்புமா ?
ஔவையே எண்ணிப்பார்! அன்னையிடம் சொல்லிப்பார்!

வழித்துணைக்கு ஒருவரும் இல்லையே என் செய்வேன் என்றேன். "அப்படியா? சரி; கண்மூடி திற" என்ருர். அப்படியே செய்தேன். அவ்வளவுதான். கைலாய வாசலில் கணங்கள் ஆர்பரிக்க நந்தி தேவர் வரவேற்க தங்கள் முன்னிலையில் இருப்பதைக் கண்டேன்.

பார்வதி :
கருத்தடங்க விழைவோர்கள் கைலாயம் வருவார்கள்
துருதுருத்த பிள்ளைகள் தோதாகவே சொல்லி
பருஉடல் சுகத்தை பெரிதென எண்ணி
மாதா பிதாவை மனம்நோகச் செய்தாலும்
உறவெங்கே போகும் உத்தமியே! சொல்லும்?
பெற்றமனம் பித்து பிள்ளைமனம் கல்அல்லவா ?

பரமசிவன்: ஆம்; பிள்ளைகள் சொல்வதும் உண்மை தான்.



ஔ: இதற்கென்ன சொல்லுகிறீர்கள் அம்மா ?

பார்வதி: அவர் எப்பொழுதும் பக்தர்களுக்கும் பிள்ளைகளுக்கும் பரிந்து பேசுபவர்தானே!

பரமசிவன்: அப்படியாயின் பிள்ளைகள் சொல்வது பொய்யா ?

பா: ஐயா! நான் சொல்வது பொய்யா ?

"சுகதேவர் வந்துவிட்டார்; சுகதேவர் வந்துவிட்

டார்" பூத கணங்களின் ஆரவாரம் கைலாயமே எதிரொலிக்கும்படி பெருகிவிட்டது. புன்முறுவலுடன் சுகதேவர் வந்தார். நந்திதேவர் வழக்கம்போல் விசாரித் தார்.

சுகதேவர் :

துறவின் மகிமையே மகிமை—அதைத்
தொல்லுலகம் மறப்பது அருமை.
இரவு பகலாக யாவையும் நீத்து
துறவு கோலமாய் தொல்லுலகம் புகழ
சொல்லிலும் செயலிலும் என்றுமையும் மாறாது
வள்ளுவர் வாழ்கின்றாரே ! —திரு
வள்ளுவர் வாழ்கின்றாரே ! (துறவின்)
அறம்பொருள் இன்பம் அனைத்தும் துன்பமென
திரம்; அறிந்து விட்டார்—வள்ளுவர்
துறவி யாகி விட்டார். (துறவின்)

கொங்கணவர் (குதித்தெழுந்தார்) : என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள் ? திருவள்ளுவரை முதலில் கண்டீர் களா ?

சு : திருவள்ளுவரையும் பார்த்தேன் ; திருக்குறளை யும் படித்தேன். முப்பாலையும் முறையாக விளக்கியவர் தப்பாது துறவறத்துக்கு முதன்மை அளித்திருக்கிறார் அப்பா ! இதில் சந்தேகமே இல்லை.

கொ : எப்படி ?



சு : ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள். அதில் பாயிரத்திலேயே பொறித்து வைத்திருக்கிறார் என்ன தெரியுமா ?

கொ : சொல்லும் பார்க்கலாம்.

சு : கடவுள் வாழ்த்துக்கு அடுத்தது வான் சிறப்பு. அதற்கடுத்து என்ன அமைத்திருக்கிறார் தெரியுமா? நீத்தார் பெருமை: ஐயா! நீத்தார் பெருமை. பூத்த மலர் போன்று பார்த்தோர்க்குத் தெளிவாய் தெரிய வேண்டியே அவ்விதம் நீத்தார் பெருமையை அமைத்திருக்கிறார். அதற்கடுத்தே அறன்வலியுறுத்தல் அதிகாரத்தை வைத்திருக்கிறார். அதன் பிறகே இல்வாழ்க்கையை ஆரம்பித்து எல்லாவற்றையும் சொல்லியிருக்கிறார். அந்த இல்லறத்திலுங் கூட பிறகாவது இல்வாழ்வான் துறவடைய வேண்டும் என்பதற்காகவே இல்வாழ்வான் 'புகழ்' அடைந்த பின் யாவையும் இகழ்ந்து துறவடைய வேண்டும் என்றெண்ணியே 'புகழ்' என்னும் அதிகாரத்துக்குப் பின் பதிமூன்று அதிகாரங்களை 'துறவற இயல்' என்று அமைத்திருக்கிறார்.

கொ : துறவறத்துக்குரியவன் யார்?

சு : உள்ளவன்; இல்வாழ்வான்தான். அதை அந்த அறத்துப்பாலில் இல்லறவியலுக்குப் பின் சொல்லியிருக்கிறார் அல்லவா?

கொ : இருக்கலாம்.

சு : அதைப்போல நீத்தார் பெருமையிலோ; அறத்துப் பாவின் துறவறவியலிலோ எங்கேனும் இல்லறத்தைப் பற்றி எழுதியிருக்கிறாரோ?

கொ : இல்லை.

சு : அதனால் துறவறமே சிறப்புடையது என்பது பெறப்பட வில்லையா?

கோ: ஏட்டுச் சுவடியில் அவர் அப்படி எழுதியிருக்கலாம்; ஆனால் அவர் வாழ்ந்து காட்டுவது எப்படி?

சு: ஏட்டுச் சுவடிக்கோர் எடுத்துக்காட்டாகவே வாழ்கிறார்.

கோ: எப்படி?

சு: தூய துறவியாய் திரிகிறார்.

கோ: (தயக்கத்துடன்) நான் இதை நம்புவது எப்படி? பலகாலம் அவருடன் பழகி வந்திருக்கிறேன்.

சு: நான் நேரில் பார்த்து வந்திருக்கிறேன்.

பரமசிவன்: வீண் வாதம் வேண்டாம்; வேத வியாசரே! இவ்விருவரையும் அழைத்துக் கொண்டு செல்லும்; உண்மையைக் கண்டறிந்து வந்து சொல்லும்.

## 28. மதவாதிகள்

துறவியாகிய திருவள்ளுவர் எத்தலமும் செல்வதில்லை. எந்த இறைவனையும் ஏத்துவதுமில்லை. பந்த மற்று பரமானந்தத்துடன் சந்ததமும் சாந்த நிலையிலே தமக்கென ஒரு இடமின்றி சஞ்சரித்து வரலானார். பூமியே அவருக்குப் பாயாகும். பொருந்திய சூரிய சந்திர நட்சத்திராதிகளே அவருக்கு அணையா தீபங்களாகும். வெய்யிலைக் கண்டு வெறுப்பதுமில்லை; மழையைக் கண்டு

ஒண்டுவதுமில்லை. பிச்சைக்குப் போகும் உச்சி நேரம் தவிர மற்ற காலங்களில் அவரை ஊர் பக்கம் பார்க்க முடியாது; மரத்தடியிலோ; குளக்கரையிலோ; மலை சிகரத்திலோ; நதிக்கரையிலோ; பொதுச்சாவடியிலோ; சத்திரத்திலோ தான் அவர் சென்று ஓய்வு கொள்வது வழக்கம். எம்மதத்தினர்களையும் அவர் சார்ந்து வாழ்வதில்லை.

அதுகண்ட மதவாதிகள் ஒவ்வொருவரும் தத்தம் துறைக்கு அவரை இழுக்க முயன்று இயலாது போயினர். அவருக்கு மடங்களிலோ; ஆசிரமங்களிலோ; பௌத்த விகாரையிலோ; சமணப் பள்ளியிலோ எங்கும் ஆதரவு கிடையாது. அவரும் அங்கே செல்வதுமில்லை. ஆம்; எல்லை இல்லா பரம் பொருளொடு இரண்டறக் கலந்த மனம் எல்லைக்குள் தடுமாறும் மதவாதிகளோடு சேர்ந்து தொல்லைக்கு இரையாக விரும்புமா? அதனால் அவர்கள் இவரை ஒரு அலாதியான மனிதர் என்றே எண்ணினர்.

அவருடைய காலை நேரம் நித்திய கருமங்களிலும் நிட்டையிலுமே கழியும். உச்சி வேளை மட்டும் பிச்சைக்கு ஊர் நாடி செல்வார். அதன் பிறகு தனியிடம் நாடி ஓய்வு கொள்வார். பொழுது சாய்ந்ததும் அந்திக் கடனை முடித்துக்கொண்டு சிந்தையை அடக்கி செயலற்ற



நிலையில்; அந்தமில்லா இன்பத்தில் ஆனந்தமுடன் இரவைக் கழிப்பார். கோழி கூவுவதற்கும் அவர் நிட்டை கலைவதற்கும் நேரம் சரியாயிருக்கும். பிறகு நேரே நீர் நிலையை நாடி நடப்பார். இவ்வண்ணமாகவே தினசரி

நடந்து வரலானார் துறவி திருவள்ளுவர்.

அவர் முகத்தில் சாந்தமும் ஒளியும் வெளிப்படை யாக விளங்கியது. அது கண்டோரைக் கவர வல்லதா யிருந்தது. அதனால் மக்கள் எல்லாரும் அவரை மதித் தனர்; துதித்தனர். அவர் இருக்குமிடம் நாடி சிற்சில சமயங்களில் உணவு கொண்டு போய் கொடுத்து வந் தனர். இதுகண்ட மதவாதிகளுக்கு கிலி பிடித்தது அவரை வாதில் மடக்கி வெளியேற்ற பல சூழ்ச்சிகள் செய்தனர். எதுவும் பயனளிக்கவில்லை.

எனவே ஒவ்வொருவரும் தத்தம் மடங்களுக்கும் விகாரைகளுக்கும் பள்ளிகளுக்கும் அழைக்க வாரம்பித் தனர். அதற்கெல்லாம் திருவள்ளுவர் ''வரநேரமில்லை'' என்றே சொல்லி வந்தார். ஏன்?

துறவியானவர்கள் ஓரிடத்தில் நிலையாயிருப்பதே தவறு. அல்லும் பகலும் ஆனந்த நிலையிலிருந்துக் கொண்டு செல்லும் வழியில் சிவஞோபாயத்துக்கு வேண்டி பிச்சை ஏற்றுண்டு இச்சையற்று இயங்க வேண்டியவர்கள் அல்லவா துறவிகள். மேலும் அவர் களுடைய ஆடம்பரங்களையும் அடக்க மற்ற வாழ்வையும் காணுந்தோறும்

"வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்து மேய்ந் தற்று"

என்னும் குறளுக்கோர் எடுத்துக்காட்டாக அவர்கள் இருப்பதை உணர்ந்தார்.

அவர் உச்சி உணவு கொண்டு ஒருநாள் ஊர்சாவ டியில் ஓய்வு கொண்டிருந்தார். அதனைத் தந்தாள் மூலம் அறிந்தனர் சில மதவாதிகள். ஒருவர் பின் ஒருவராய்

எல்லாரும் அவர் அமர்ந்திருக்கும் ஊர்சாவடியை அடைந்தனர்.

அவர்களைக் கண்டார்; முகக் குறிப்பால் வாதுக்கு வந்திருக்கிறார்கள் என்பதையும் உணர்ந்துகொண்டார். அதனால் அவர் அடக்கமே வடிவமாய் நடக்க இருப்பவைகளை நினைந்தவராயிருந்தார்.

வைணவன்: தாங்கள் எம்மதத்தைச் சார்ந்திருக்கிறீர்கள்?

திருவள்ளுவர்: சார்பற்றவனே துறவி அல்லவா?
சைவன்: மதச்சார்பு துறவிக்கும் வேண்டுமல்லவா?

தி: அகச்சார்பும் புறச்சார்பும் விட்டபின் மதச் சார்பு ஏது? <u>எல்லாம் நீத்தவன் அல்லவா துறவி</u>?

சாக்தேயன்: என்றாலும் மதத்துக்குரிய குறி வேண்டுமல்லவா?

தி: துறவே குறி; தூய எண்ணமே அதற்குரியதென்பதை அறி; விருப்பு வெறுப்பு விட்டு வாழ்வதே அதைச் சரி செய்யும் பொறி.

வை: சரி; அதிருக்கட்டும்; சைவம்; வைஷ்ணவம்; சாக்தேயம் (சக்தி வழிபாடு) காணாபத்தியம் (கணேச வழிபாடு) கௌமாரம் (முருகன் வழிபாடு) சௌரம் (சூரிய வழிபாடு) பௌத்தம்; சமணம் முதலிய வழிபாடுகளைப் பற்றிய தங்கள் அபிப்பிராயம் என்ன?

தி: அவைகள் யாவும் பூரணப் பொருளுக்கு; முழு முதல் மூர்த்தியான இறைவனிடம் கொண்டு செல்லும் பின்ன வழிபாடுகளேயாகும்.

வை: என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? அவைகள் எல்லாம் பூரண வழிபாடுகள் அல்லவா?

தி: பூரணப் பொருளுக்கும் பின்னமான வழிபாடு எது சொல்லும்?

(ஒரே அமைதி)

நாமரூபத்தோடு கூடிய வழிபாடுகள் எல்லாம் நகைப்புக்கிடமானவைகளேயாகும். என்றாலும் மன பரிபக்குவம் இல்லாதவன் நாம ரூபத்தோடு கூடிய வழிபாட்டையே விழிப்போடு செய்துவரவேண்டும். பூரண விழிப்பைப் பெற்ற பின் பூரணமாய் பழுத்த பழம் மரத்தினின்று தாமாகவே நழுவுவது போல முன்னைய நாம ரூப வழிபாடுகள் எல்லாம் அவனை விட்டு நழுவிப்போகும். பிறகு அவன் எல்லையில்லா பரம்பொருளுடன் இரண்டற இணைந்திருப்பான். எத்தொழிலை செய்தாலும் அவன் புத்திமட்டும் மாறாது பரம் பொருளிலேயே பொருந்தியிருக்கும்.

மதவாதிகளே! உதவாதவைகளைப் பேசி ஏன் உள்ளதை மறக்க விரும்புகிறீர்கள். வேண்டாம் வீண் வாதத்தை விட்டு விடுங்கள்; வேடத்துக்குரிய பொருளை நாடுங்கள். இவ்வுண்மை விளங்கும்.

எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளுக்கு உருவம் ஏது? ஊர் ஏது? உற்ற கதைதான் ஏது? சர்வமும் அப்பொருளாயிருக்கையில் பின்ன வழிபாடுதான்

ஏது? யார் யார் எது எதை வழிப்பட்டாலும் வழிபட லாம்; தவறில்லை. ஏற்றத்தாழ்வென்பது தோற்ற மாத் திரமேயாகும். எல்லாம் ஏகமான இறைவனையே இறுதி யில் வந்து சேரும்.

வை: அப்படியாயின் இத்தனை வழிபாட்டு முறைகள் இருக்க வேண்டியதில்லை அல்லவா?

திரு: ஒருமனம் போல் ஒருமனம் இல்லை; ஒரு மனிதன்போல் ஒரு மனிதன் இல்லை. ஏன்?

வை: சிவருடைய கருமங்கள் ஒருவிதமாக இல்லை; நாநாவிதமாக இருப்பதால் அதை அனுசரித்துத்தானே மனமும் உடலும் அமைகின்றன?

தி: அதைப் போலவேதான் வழிபடும் மார்க்கமும் மனதை அனுசரித்து நாநாவிதமாக இருக்கும்.

அதோ அப்புளிய மரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் எண்ணிக்கையில் அடங்காத இலைகளிருக்கின்றன. என்றாலும் ஒரு இலையைப்போல ஒரு இலை இருக்கிறதா? இல்லை. ஏன்? அதுதான் இயற்கையின் நியதி. அதனால் அவைகளை ஒரே மரத்தில் உண்டானவைகள் அல்ல என்று சொல்ல முடியுமா? ஒரு சிறு கிருமி எந்த இலையி லிருந்து வேண்டுமானாலும் அடிமரத்தை அடையலாம் அல்லவா? அதைப் போலத்தான் வழிபாட்டு முறை களுமாகும்.

எனவே வீண் வாதம் வேண்டாம். மதவாதிகளே! மனந்திருந்துங்கள். மற்றவர்களை குறை கூறாதீர்கள்.

சாண் வயிறு நிறைய சம்பாதித்த நேரம் போக ஊனுடல் பெற்றதற்குற்ற இறை பேரருளை இருதயத்துள் காண விரும்புங்கள். வாதம் அடங்கும்; பேதம் ஒழியும்; போதம் உண்டாகும்.

இவ்விதம் ஏற்றத்தாழ்வில்லாது எல்லா மதங்களும் ஏக நாயகனை இறைவனிடம் கொண்டு செல்லும் வழிகளேயாகும் என்று திருவள்ளுவர் சொல்லவே எல்லாரும் எழுந்து மௌனமுடன் வந்த வழியே தத்தம் இடம் நோக்கி நடக்கலாயினர்.

## 29. சிசு மரணம்

மாலை வேளை; மஞ்சள் வெய்யில் மறையும் நேரம் நெருங்குகிறது. மங்கைகள் மணியோசையுடன் மேய்ந்து விட்டு இருப்பிடம் நாடி வருகின்றன. பொறுப்புணர்ந்த முதியோர்கள் வாசலில் விளையாடும் பிள்ளைகள் விளையாட்டில் பொங்கி மகிழ்கின்றனர். தாள வரிசைகள் போல உலக்கை குத்தும் ஓசைகள் வீதிகள் தோறும் கேட்கின்றன. கன்னிப் பெண்கள் தண்ணீர் குடம் தாங்கி நடக்க ஆரம்பித்து விட்டனர்.

அந்திக்கடனை முடிக்கும் பொருட்டு நீர் நிலை நாடி நடந்தார் வள்ளுவர். வழியில் நான்கு வீடுகள் பக்கத்துக்கு இரண்டாய் அமைந்திருந்தன. அதில் ஒரு வீட்டுக்காரி தன் இறந்த குழந்தையை ஏந்தி வந்து " ஐயா; உயிர்

பிச்சை கொடுக்க வேண்டும்'' என்றவாறு அவர் முன்னே நின்றுக் கொண்டாள்.

மௌனமுடன் நின்றார். எதிரே யிருக்கும் கூரைமேல் தன் இளங் குஞ்சிக்கு இரையூட்டிக் கொண்டிருக்கிறது காகம்.

அவ்வீட்டுக்கு முன் கன்றுக்குட்டி துள்ளி விளையாடிக் கொண்டிருக்கிறது. அதைக் கண்டு களிக்கிறது அதன் தாய் பசு.

அவ்வீட்டு வாசலில் தாய் நாய் மல்லாந்து படுத்திருக் கிறது. அதன் நான்கு குட்டிகளும் தாய் பால் குடித்துக் கொண்டிருக்கின்றன.

எதிர் வீட்டிலிருந்து பூனை தன் குட்டியை வாயில் கௌவிய வண்ணம் வைக்கோல் போர் அடி நாடி போய் சேர்ந்தது.



அதே சமயத்தில் அவ்வீட்டின் முன் செழித்தோங்கி வளர்ந்திருந்த தென்னைமரத்தடியில் 'தொப்' என்று சிறு சத்தம் கேட்டது. கூர்ந்து பார்த்தார். சிறு பிஞ்சி தன் பசுமை குன்றாது உதிர்ந்து கிடப்பதைக் கண்டார். அதை ஓடி ஒரு சிறுவன் எடுத்து மகிழ்வதையும் பார்த்தார்.

தி: (மெதுவாக) இறந்ததை வைத்துக் கொண்டு வருந்துவது ஏனோ? வீணாக வருந்த வேண்டாம் அம்மா; குழந்தையைக் கொண்டு போய்:—செய்.

அன்னை: ஐயா; இப்படி தாங்கள் சொல்லலாமா? தாய் வயிறு எரிகிறதே!

இ: செத்த பிணத்தை வைத்துக் கொண்டு கத்துவதைத் தவிர வேறென்ன செய்யமுடியும்? போன உயிர் திரும்பியதை கண்டிருக்கிறாயா?

அ: இல்லை. என்றாலும் துறவிகள் அக்காரியத்தை சாதிக்கலாமல்லவா?

இ: பிறப்பு இறப்பு இரண்டும் தொடர்பு உடையன. பிறந்தது இறந்தே தீரும்; இதில் வருந்துவது விவேகத்திற்கே பொருத்தமில்லை; வீணேயாகும்.

அ: தாங்கள் சொல்வது உண்மையாக இருக்கலாம். நான்கு பிள்ளைகளைப் பெற்றேன். நான்கும் இப்படியே நான்கைந்து மாதத்திலேயே தூங்குவதுபோல துஞ்சி விட்டன.

இ: அப்படியா? எல்லா குழந்தைகளும் முந்நூறு நாள் கழிந்தே பிறந்தனவா?

அ: சொல்வதற்கில்லை; முந்தியே பிறந்து விட்டன.

இ: தாய் வயிற்றில் முழு வளர்ச்சிப் பெறாத குழந்தைகள் எல்லாம் குழவிப் பருவத்திலேயே நழுவிப் போய் விடும்.

அ: இதற்கு நான் என்ன செய்வது?

12



இ: உன் கணவர் எப்படி?

அ: கட்டுக்கு அடங்காதவர்; பர பெண்களை—

(இதற்குள் அவள் கணவனும் கலங்கிய கண்களுடன் வந்து சேர்ந்தான்.)

தி :—இவர் தானே குழந்தையின் தந்தை.

அவள் கணவன் : ஆம் ; ஐயா.

தி : அம்மா ; வீடு செல்லுங்கள் ; நான் இவருக்கு சில சொல்லி அனுப்புகிறேன்.

( தாய் குழந்தையுடன் சென்றாள் )

உழவன் ஒருவன் ஏர் எருது இரண்டை பிடித்துக் கொண்டு கலப்பையை தோளில் வைத்த வண்ணம் அவ் வழியே வந்தான்.

தி : உழவர்களிடம் இருந்து கற்றுக்கொள்ள வேண்டியவைகள் பல உள. இப்பொழுது நாம் அவைகளில் ஒன்றை மட்டும் கேட்டு உணர்ந்து அதன்படி நடந்தால் போதும்.

உழவன் : என்ன ஐயா அப்படிச் சொல்கிறீர்கள் ?

தி : பாரத்தை கீழே கொஞ்சம் வை அப்பா ; பேச வேண்டியது ஒன்று இருக்கிறது.

உ : தென்னைமரத்துக்கு முன்னிருக்கும் வீடு என்னுடையதுதான். மாட்டை கொண்டு கட்டி விட்டுவந்து விடுகிறேன்.

தி : சீக்கிரம் வந்து விட்டாய் ; நானும் சீக்கிரம் செல்லவேண்டும். நல்ல பலனை அடைய வேண்டுமாயின் என்ன செய்யவேண்டும் ?

உ : வித்தும் நிலமும் சுத்தமா யிருக்கவேண்டும். நிலம் புழுதிபடர ஓட்டவேண்டும் ; விதையும் போக் கின்றியதாய் இருக்கவேண்டும்.



தி : அப்படியே இருந்தால்?

உ: பயிர் பழுதின்றி முளைக்கும்; வளரும்; பருவம் தவறாது எருவும் நீரும் விட்டால் நல்ல பலனைத் தரும்.

தி: (இறந்த பிள்ளையின் தந்தையை நோக்கி) கேட்டாயா? இந்த நியாயம் ஓர் அறிவு உள்ளது என்று சொல்லப்படும் தாவரங்களுக்கு மட்டுமல்ல; எல்லா சீவராசிகளுக்கும் ஏற்பட்ட பொது விதியாகும். இதில் மற்ற சீவராசிகள் தவறுவது குறைவு. ஆனால் பகுத்தறிவு படைத்தோம்; ஏனைய சீவராசிகளைவிட ஏற்றம் பெற்றுள்ளோம் என்று இறுமாப்பு கொள்ளும் மனித இனம் மட்டும் பெருவாரியாகத் தவறுவது ஏன்? சிசு மரணத்திற்குப் பெற்றோர்களே காரணமாகும். எப்படி?

சுக்கில சுரோணிதங்கள் சுத்தமாக இருந்தால் பத்து மாதம் கழிந்தே பிள்ளை பிறக்கும்; சத்துடையதாகவும் இருக்கும். விந்து கெட்டிருந்தாலும் சரி; விளைநிலம் கெட்டிருந்தாலும் சரி; சரியான போசிப்பு இல்லாத பிஞ்சுகள் மரத்திலிருந்து உதிர்வதுபோல தாய் வயிற்றி லிருந்து உதிர்ந்து தொல்லைக்கிரையாகி; பிறர்களையும் இரையாக்கி; அகாலத்தில் மரிக்கின்றன. இதற்கு யார் என்ன செய்ய முடியும்?

பிற பெண்களை விரும்புவதால் ஆண் துன்புறுவதல் லாமல் எல்லார்க்கும் துன்பத்தையே கொடுக்கிறான். அகாலத்தில் சேர்கிறான்; விந்து அழிகிறது; நொந்து வழிகிறது. சிந்தித்துப் பார்! அதனால் உடல் சோர்வு; உள்ளச் சோர்வு ஏற்படுகிறது. கள்ளத்தனம் வளர் கிறது. காமன் எமனாகிறான்; கருத்தரித்துப் பிறந்த பிள்ளை மரித்தழிகிறது. இவ்வளவும் ஏற்படுவது யாரால்? இத்தனைக்கும் காரணமாயிருப்பவன் என்றேனும் சுகப் பட முடியுமா? மது போதையில் மயங்கியவனைப் போல

அப்போதைக்கு அது இன்பம் அளிப்பது போல இருக்க லாம். பிறகு பார்த்தால் அது அருவருப்புக்குரிய காரிய



மேயாகும் என்பதை கல்லாதவனும் சொல்கிறான்; இதனால் இன்னல் பழி பாவம் பகை அச்சம் பெருகுவதை அறியாத ஆண்மகனும் உண்டா?

பிள்ளை இறந்ததென்றால் பெற்றோர்கள் வருந்துவதை விட திருந்தி வாழ்வதே உத்தமமாகும். வீணாக மற்ற வர்கள்மேல் குறை கூறுவதோ பழி சொல்வதோ பாதக மாகும்.

யார் பெற்ற குழந்தைக்கு யார் மாரில் பாலூறும்? ஆதலின் அறமகனே! பிறமனை நயவாதே! ஒழுக்கந் தவறாதே! பிள்ளையும் இறக்காது; பிறதொல்லையும் பெருகாது.

(தந்தை): ஐயா; பெண்களைப் பார்க்கும்போதெல் லாம் என் மனம் மாறிவிடுகிறதே! பேதமைப்படுகிறதே; விரகவேதனைப் பெருகிவிடுகிறதே! இதற்கு நான் என்ன செய்வேன்?

தி: பழக்கங் கொடியது. பாறைமேல் இரை யிருந் தாலும் சரி; கோழி கிளறித்தான் தின்னும். அதைப் போல இந்நாள் வரையில் நீயும் இந்த இழிவான நிலையி லேயே வாழ்ந்து விட்டாய். அதனால் கெட்டாய்; பட்டது போதும். இந்தப் பாழும் மனத்துக்குத் தனி ஆற்றல் கிடையாது. அது வாழ வேண்டுமானால் ஏதேனும் ஒன்றை பற்றியே யாக வேண்டும். கெட்டதைப் பற்று வதைவிட நல்லதை பற்றி பழகு. அவ்வளவுதான்; எல்லாம் சரியாய்விடும்.

*த: எப்படிப் பழகுவது? அவ்வழியைச் சொல்லுங்கள்.*

*இ: தன்னைப்போல் பிறரை எண்ணு. இந்த ஒன்றையே உற்ற துணையாகக் கொள்; போதும்.*

*த: எப்படி?*

**185**

*இ: நீ எந்த எண்ணத்தை எண்ணினாலும் சரி; எந்த வார்த்தையைச் சொன்னாலும் சரி; எந்த காரியத்தைச் செய்தாலும் சரி; அந்த எண்ணத்தையே, வார்த்தையையே, காரியத்தையே பிறரும் உனக்கு எண்ணுவதாகவும், சொல்வதாகவும், செய்வதாகவும் கருதத் தவறாதே!*

*உதாரணமாக: நீ வழிவரும் பிறன் மனைவியின் அங்கங்களை உற்று நோக்க நினைப்பதாக வைத்துக்கொள்வோம்; உடனே நீ உன் மனைவி அவ்விதமே மற்றொரு பக்கம் வருவதாகவும்; அச்சமயம் அவ்வழியே எதிர் வருவோன் அவ்வண்ணமே எண்ணி நோக்க நினைப்பதாகக் கருது. உடனே உன் பார்வை பின்படும்; மனம் சினம் கொள்ளும்; அடுத்த கணமே சீ! இந்த எண்ணம் நமக்குத் தகாது என்று அந்த எண்ணத்தை விட்டு விடும்.*

*ஆரம்பத்தில் இது கட்டுப்பாடு இல்லாத மனதுக்குக் கடினமாகத் தோன்றும். ஆனால் பழகப் பழக பின் கட்டுப்பாடின்றி வாழ்வதே கடினமாய் விடும்.*

*இந்த ஒரு எண்ணத்தினால் எத்தனைய பாவியாயிருந்தாலும் புண்ணியவானாகலாம். இதில் சந்தேகமே இல்லை. உனக்கு சந்தேகமும் வேண்டாம். நீ இந்த ஒன்றைமட்டும்*

மறவாது காப்பாற்றி கையாண்டு வருவாயாயின் மெய் யாகவே சுகப்படுவாய்; மேன்மை அடைவாய். இன்றே உறுதி கொள்; இறுதிவரை இவ்வழியில் நடப்பேன் என்று சொல்; விடைபெற்று செல்.

# 30. திருமணத்துக்கு வரவேண்டும்

குளித்தார்; குளக்கரை ஏறினர். துணிகளை உலர வைத்தார். கோவணத்துடன் அருகேயிருந்த நாவல் மரத் தடியை நாடினர். முதிர்ந்த பழங்கள் உதிர்ந்து பெரு வாரியாய் கிடந்தன. முருகனுக்கும் ஔவைக்கும் நடந்த வாதம் அவர் நினைவுக்கு வந்தது. என்றாலும் இங்கு சுட்ட பழம் சுடாத பழம் என்ற பாகுபாடு பார்க்க வேண்டிய அவசியமில்லை. ஏன்? பழங்கள் எல்லாம் பசும்புல் தரை களிலேயே பரப்பி வைத்தது போலிருந்தன; என்றாலும் பார்த்து எடுத்துத் தின்ன வேண்டிய பொறுப்பு இருந் தது. ஏன்? கனிகள் கனிந்திருந்ததால் எறும்புகள் நிறைந் திருந்தன. ஆதலின் பார்த்து எடுக்க வேண்டும்; ஊத வேண்டும்; பிறகுதான் உண்ணவேண்டும்.

அவ்விதம் பார்த்து எடுத்து ஊதி உண்டுக்கொண் டிருக்கிறார் திருவள்ளுவர். மங்கையுடன் வந்த வேளாளன் அவரை கூழ் குடிக்கக் கூப்பிடுகிறான். "உச்சி வேளையில் உன் கூழை ஏற்கிறேன் இப்பொழுது வேண்டாம்; அப்பனே பொறு" என்றார் திருவள்ளுவர். "அப்படியே யாகட்டும்; உச்சி வேளையில் உணவே கொண்டுவந்து கொடுக்கிறேன் இங்கேயே இருங்கள்" என்று சொல்லி விட்டு மங்கைகளுடன் மேய்ச்சலுக்குப் போய் விட்டான்.

சிறிது நேரத்துக்குள் ஒருவன் வந்தான்; வணங்கினன்.

வந்தவன்: ஐயா; தாங்கள் தானு திருவள்ளுவர் என்பது?

தி: ஏன்? எதற்காக கேட்கிருய்?

வ: குடும்ப பாரத்தால் கொடுமைக்கு ஆளாகி விட்டேன். வருவாய் போதவில்லை; அதற்கு வழி தேடிக் கொண்டு போகவே வந்துள்ளேன்.

187

தி: என்னிடம் என்ன இருக்கிறது?

வ: தாங்கள் துறவியாகி விட்டீர்கள் என்று எனக்குத் தெரியாதா?

தி: பின் அதைப்பற்றி ஏன் சொல்ல வேண்டும்?

வ: பெரும் செல்வர் ஒருவர் தங்கள் சீடராயிருக்கிருர் அல்லவா?

தி: யார் அது?

வ: ஏலேல சிங்கன்.

தி: ஆம்.

வ: அவரிடம் சொல்லி என் வறுமையைப் போக்க வேண்டும்.

தி: அவனே 'திரிகடுகம்' சொல்வதுபோல வருவாயுள் கால் வழங்கி வாழ்கிருன். அதற்குமேல் கொண்டு சொல்வது நல்லதல்ல.

வ: புண்ணியங்கோடி தங்களுக்கு உண்டு ஐயா!

தி: இருவினைகளை விட்டவனே துறவியாகும் என்

பதை அறியீரா?

வ: அப்படியாயின் நான் இப்படியே வறுமைக் கிரையாகி வாடி இறப்பதா?

தி: வறுமையைப் பெருக்கியது யார்?

வ: நான் என்று எப்படி சொல்ல முடியும்? எல்லாம் இறைவன் இட்ட கட்டளைப்படிதானே நடக்கும்.

தி: அப்படியாயின் நானும் இறைவன் இட்ட கட்டளைப்படித்தானே சொல்லுகிறேன்.

வ: உண்மைதான். துறவிகள் பிறர் வருந்த பார்த்திருக்க மாட்டார்கள் அல்லவா?

தி: எல்லாம் இறைவன் இட்ட கட்டளைப்படியே அல்லவா நடக்கும்.

## 188

வ: அப்படிச் சொன்னால் எப்படி? எனக்கு ஏதேனும் உதவி செய்யவேண்டும்.

தி: தன் வருவாய் அறிந்து செலவு செய்யாதவனும்; வாழ்வு அறிந்து பிள்ளை பெறுதவர்களும் பின் வருந்த வேண்டியதுதான். அதற்குத் துறவி என்ன செய்ய முடியும்?

வ: என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? பக்த குசேலர் இருபத்தேழு பிள்ளைகளைப் பெறவில்லையா?

தி: அக்கதையே வேறு; அக்கதையை உண்மை என்று வைத்துக் கொண்டாலும் சரி; வருடத்துக்கு ஒரு குழந்தை பிறந்திருக்கிறது என்றாலும் கூட உழைப்புக்கு ஒரு பத்து பிள்ளைகளாவது லாயக்காயிருக்கும். பத்து பிள்ளைகளும் ஒரு தகப்பனும் உழைக்கும்போது ஒரு குடும்பத்தில் வறுமை இருக்க இடமேது? அந்த வாதம் கூட வேண்டாம்.

அவ்வளவு பெரிய குடும்பத்தை நடத்தி வந்த குசேலர் பிறர் உதவி நாடினரா?

வ: இல்லை.

தி: அப்படியிருக்க நீ மட்டும் குடும்ப பாரம் பெருகி விட்டதென்றும்; தாங்க முடியவில்லை என்றும்; பிறர் உதவி நாடுவது நியாயமா? ஒருவரை உதாரணம் எடுத்துக்கொண்டால் அவர் செயலை எல்லா வழியிலும் நின்று நோக்க வேண்டும். அதைவிட்டு தனக்கு ஆதாரமாயிருப்பதை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றவைகளை புறக்கணிப்பது மதியீனமாகும்.

அது மட்டுமல்ல; பெற்ற பிள்ளையை காப்பாற்றுதற்கு வழியில்லாதபோது மேலும் பெறுபவன் மிருகத்திலும் கெடுகெட்டவனேயாகும்.

" தந்தைமகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்."

189

அல்லவா? இதை மறந்தவனை; தன் கடமையை உணராதவனை; தந்தை என்று சொல்வதைக் காட்டிலும் மந்தையில் வாழும் மிருகம் என்று சொல்லுவதற்கும் கூட இல்லை. ஏன்? தன் கன்று தனித்து வாழவல்லதாகு முன்னர் எந்த மிருகமேனும் கருதரித்ததுண்டா? குட்டிப் போட்டதுண்டா? பட்டி நாயையே பாரும்.

மனிதர்கள் மற்றவர்கள் உதவியை நாடுவதுபோல மற்றெந்த ஜீவராசிகளாவது பிறர் உதவியை நாடுகின்றனவா?

வ: இல்லை.

தி: ஏன்?

வ: சேர்ந்து வாழ்வதால் வந்த வினை.

தி: எறும்புகள் சேர்ந்து வாழவில்லையா? தேனீக்கள் சேர்ந்து வாழவில்லையா? கறையான் கூடி வாழ வில்லையா? எத்தனையோ ஜீவ பரம்பரைகள் சேர்ந்து வாழ்கின்றனவே.

வ: அப்படியாயின் அதன் காரணம் என்ன?

தி: ஆணவத்தால் கட்டுக்கு அடங்காத மனிதன் கெட்டுப் போகிறான். அதைக் கண்ட சான்றோர்கள் சட்டதிட்டங்களையும் அவைகளுக்கேற்ற அற நூல்களையும் ஏற்படுத்தினர். என்றாலும் யார் அவைகளின்படி நடக்கிறார்கள்? அதனால் தான் மனித வாழ்வு தன் புனிதத்தன்மையை இழக்கிறது; என் செய்யலாம்?

வ: அப்படியாயின் தர்மத்துக்கு வழியில்லையா?

தி: ஏன் இல்லை? இருக்கிறது. இட்டுண்ண வேண்டிய இல்வாழ்வான் ஏற்றுண்பது இழிவு.

வ: துறவிகள் மட்டும் ஏற்கலாம் என்பதற்கு ஆதாரம் என்ன?



தி: திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் சொல் கிறது கேளும்:

> பரந்துல கேழும் படைத்த பிரானை
> இரந்துணி என்பர்கள் எற்றுக் கிரக்கும்
> நிரந்தர மாக நினையும் அடியார்
> இரந்துண்டு தன்கழல் எட்டச்செய் தானே.

வ: அப்படியாயின் துறவி எப்பொழுது வேண்டுமானாலும் பிச்சைக்குப் போகலாமா?

தி: அதுதான் இல்லை; உச்சி வேளை மட்டும் பிச்சை

ஏற்று உண்ண வேண்டும். மற்ற நேரங்களில் மனநடங்க இறைவன் பால் லயித்திருக்க வேண்டும்.

*அச்சிறு மின்ற பொருடன்னை யுள்ளுவோர்*
*உச்சியம் போதாக உள்ளமாக் கோயிற்குப்*
*பிச்சை பிடித்துண்டு பேதமற நினைந்து*
*இச்சைவிட் டேகாந்த மேறி யிருப்பாரே.*

வ: அப்படியாயின் மற்ற நேரங்களில் பிச்சையிடுவது கூட குற்றம் அல்லவா?

தி. இங்கு பிச்சையிடுவதைப் பற்றி நான் சொல்லவில்லை; துறவிகளின் நியமத்தைத்தான் சொன்னேன்.

வ: சரி; எல்லாம் போகட்டும். அடுத்த வாரம் என் மகனுக்கு மணவினை நடக்க ஏற்பாடாகி யிருக்கிறது. அப்போது தாங்கள் தவறாமல் வந்து மணமக்களை ஆசீர்வதிக்க வேண்டும். தாங்கள் உதவியை மறுத்ததுபோல இதை மறுக்கக் கூடாது. மகிழ்ச்சி மிக்க மங்கலகரமான காரியம்; யாரும் மறுக்க மாட்டார்கள்; குறைகூறவும் மாட்டார்கள்.

தி: அது முடியாத காரியம்.

**191**

வ: (வெடுக்கென) ஏன்? அதில் தங்களுக்கு என்ன இடையூறு இருக்கிறது? மணமக்களை ஆசீர்வதிக்க வேண்டியது மகான்களின் கடமை அல்லவா?

தி: (அமைதியுடன்) அவசரப்பட வேண்டாம்! "ஔவை" சொல்லுகிறது கேளுமையா:

கூத்தும் விழவும் மணமும் கொலைக்களமும்
ஆர்த்த முனையுள்ளும் வேறிடத்தும்—ஓத்தும்

ஒழுக்கு முடையவர் செல்லாரே செல்லின்
இழுக்கும் இழவும் தரும்.

# 31. கணவன் மதிப்பை அடைவது எப்படி?

அழுக் காடைகளை மூட்டை கட்டிக் கக்கத்தில் வைத்துக்கொண்டு அசைந்த நடை போட்ட வண்ணம் சில பெண்கள் குளக்கரை நோக்கி நடந்தனர். குளத்தை அடைந்தவுடன் துணிகளை நனைத்து படிக்கல்லில் வைத்து விட்டு பட்டாங்கு பேச ஆரம்பித்தனர். முதலில் ஒருவரை ஒருவர் நையாண்டி செய்தனர். பிறகு முறை யாக சமையல் தொழிலிலிருந்து குடும்ப சங்கடங்களில் வந்து கடைசியாக இவ்வளவுக்கும் காரணம் தங்கள் கணவன் தான் : தொண்டவன் குணமாயிருந்தால் கூரை ஏறி வாதாடலாம்; கவலைக்கும் இடம் இல்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

முதியவள் : உண்மை தான். நானும் என்றால் ஆளா வரை பார்த்து விட்டேன் ; ஆண்களை திருப்தி செய்வது என்பது ஆகாத காரியம் அம்மா ! ஆகாத காரியம்; சமயத்துக்கு சாய்ந்தது போல் தோன்றுவார்கள் ; ஆனால் –

சுந்தரி : நான் அதை ஆமோதிக்கிறேன்.

கமலம் : நான் அதை எதிர்க்கிறேன்.

விமலம் : எதையும் சொல்வதற்கில்லை.

காவேரி : இந்த இரண்டுங் கெட்டானிலே உனக்கு எதற்கு ?

பர்வதம் : ஆண்களை எதிலும் நம்பலாம் ; சுலபமாக கட்டுப்படுத்தி விடலாம். ஆனால் இந்த பெண்களை மட்டும் எதிலும் நம்ப முடியாது ; கட்டுப்படுத்தவும் முடியாது ; திருப்தி செய்யவும் முடியாது.

193

முதியவள் : அது உன்னையே குறை கூறிக் கொள்வதல்லவா ?

ப : ஆம் ; என்னையுந்தான் ; எல்லா பெண்களையுந் தான்.

சு : குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பு.

ப : வீம்புக்கு வாயாடாதே ! உண்மையைச் சொல் ; உள்ளதைக் கொண்டு நீ முதலில் திருப்தியடைகிறாயா ?

முதியவள் : போதும் உங்கள் வாதத்தை நிறுத்துங்கள்.

வி : எதைப் பேச எடுத்தோம்? எதில் வம்பு வந்தது பார் !

கா : பெண் புத்தி பின் புத்தி தானே ? கணவனை குறை கூற கூசுவதில்லை. பின் கூடிவாழவும் தவறுவதில்லை. இதனால் வருவதே தொல்லை.

க : ஆம் ; என்ன இருந்தாலும் கணவன் கணவனே ! அவர் மனமறிந்து நடக்கத் தெரியாதவள் மனைவியாயிருக்கத் தகுதி யற்றவளேயாகும்.

ப : அப்படிச் சொல்.

மு : அப்படித்தான் நீ நடக்கிறாயாக்கும்.

ப : அதற்குரிய வழி தெரியவில்லை ; தெரிந்தால்

நிச்சயம் அப்படியே நடப்பேன்.

மு: அதோ துறவி ஒருவர் நாவல் மரத்தடியிலிருக்கிறார். அவரை நாடிப் போய் கேட்கலாமே.

கா: தாராளமாக.

மு: சரி; எல்லாம் முகம் கை கால்களை சுத்தம் செய்துக் கொண்டு செல்வோம்.

நாவல் மரத்தடியில் கண்மூடி நிட்டையிலிருக்கும் துறவி திருவள்ளுவர் கால் அரவம் கேட்டு கண் விழித்தார்.

**194**

கார்த்திகை பெண்களென கை குவித்த வண்ணம் ஆறு பெண்கள் தன் கண் முன் நிற்பதைக் கண்டார். கருணையுடன் நோக்கினர். அப்பார்வை பாவைகளே! நீங்கள் நாடி வந்ததை கூறுங்கள் என்பது போல் அவர்களுக்குத் தோன்றியது.

எனவே முதியவள் முன் வந்து :—ஐயனே! பெண்கள் கணவன் மதிப்பை அடைவது எப்படி?

திருவள்ளுவர் : எல்லாம் படித்த பெண்கள் தானே?

முதியவள் : (சுட்டியபடி) இந்த இருவரைத் தவிர எல்லாம் படித்தவர்கள் தாம்.

தி : அப்படியா? சரி; நல்லது; சிறுபஞ்சமூலம் படித்திருக்கிறீர்களா?

எல்லாரும் : இல்லை.

தி : சிறுபஞ்சமூலம் பெண்களுக்குச் சொல்வதை கேளுங்கள் :—

மக்கட் பெறுதல் மடனுடைமை மாதுடைமை
ஒக்க உடனுரைதல் ஊணமைவு—தொக்க
அலவலை யல்லாமை பெண்மகளிர்க் கைந்து
தலைமகனைத் தாழ்க்கும் மருந்து.

மு : 'அலவலை' என்றால் என்ன? அதன் பொருளை விளக்கிச் சொல்ல வேண்டும்.

தி : அதா? ஆராயாது செய்வது; வீண்வாதம் செய்வது; இல்லாதவைகளை எண்ணி ஏக்கப்படுவது; முதலானவைகள் அதன் அர்த்தமாகும். இதெல்லாம் பெண்களிடம் இருக்கக்கூடாது. உள்ளதைக் கொண்டு திருப்தியடைபவளே இல்லத்துக்குரிய தேவதையாகும். அவள் இருக்கும் இல்லமே எல்லாம் வல்ல இறைவன் உறையும் தேவாலயமாகும்.

எல்லாரும் : (கைகுவித்த வண்ணம்) தெரிந்தது ஐயனே!

**195**

தி : அதோடு சிறுபஞ்ச மூலமே பெண்களுக்குரிய சிறப்பை சொல்லுகிறது கேளுங்கள் :—

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித் திருவாக்கும்
தெய்வதையு மெய்ஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

எல்லாரும் : (கைகுவித்த வண்ணம்) உண்மையுணர்ந்தோம்; ஐயனே! வருகிறோம் வணக்கம்.

# 32. வேதவியாசரும் திருவள்ளுவரும்

உச்சி வேளை வந்து விட்டது. வேளாளன் சொன்னபடி வந்தான். தலைமேல் சுமந்துவந்த பெரிய கூடையை

இறக்கி வைத்தான். அன்னம் காய்கறி குழம்பு மோர் முதலானவைகளை எடுத்து தரைமேல் வைத்தான். அவ்வளவையும் பார்த்த திருவள்ளுவர் திகைப்புற்ற வராய் திசைகள் தோறும் திரும்பிப் பார்த்தார். ஒரு வரையுங் காணோம். எனவே வேளாளனை நோக்கி:

தி: இவ்வளவும் எதற்கப்பா?

வேளாளன்: நாங்கள் உண்ணும் பொழுது யாராவது வந்துவிட்டால்?

தி: (புன்முறுவலுடன்) குலத்துக்கேற்ற குணம். உன் பெயர் என்ன? இருப்பிடம் எது?

வே: என் பெயர் கிருஷ்ணமூர்த்தி. பரிக்கரையின் தென்பால் இருப்பது என் நிலம் வீடு வாசல் யாவும். உணவு கொள்ள எழுந்தருளுங்கள்.

தி: சரி; பொறு; சிறிது நேரம் கழித்து சாப்பிடு கிறேன்; உட்கார்ந்து கொஞ்சம் ஓய்வு கொள்ளும்.

சிறிது நேரம் சென்றது. தூரத்தில் மூவர் வருவதை கிருஷ்ணமூர்த்தி கண்டான்.

கி: (கையால் சுட்டியபடி) ஐயா! அதோ பாரும் மூவர் தங்களை நோக்கி வருகிறார்கள். அதில் முன் வருபவர் நிர்வாணி; இடையில் வருபவர் சடைமுடியோடு கூடிய துறவி. பின் வருபவரோ தபசி போல் தோன்று கிறார்.



தி: (திரும்பி உற்று பார்த்துவிட்டு) முன் வருபவர் சுகதேவர்; பின் வருபவர் கொங்கணவர்; இடையில் வருபவர் சுகதேவரின் தந்தையான வேதவியாசர்

போலிருக்கிறது.

கி: செம்படவ கன்னிப் பெண்ணுக்கும் பராசருக்கும் பிறந்தவர்தானே வேதவியாசர்?

தி: ஆம்.

கி: குலத்தளவே ஆகுமாங் குணம் என்பது பொய் தானே?

தி: எப்படி?

கி: செம்படவ பெண்ணுக்குப் பிறந்து சாஸ்திர கர்த்தா ஆனூர் அல்லவா?

தி: ஆம்; உண்மைதான். ஆனால் ஒன்று சொல்லுகிறேன் கேள்:—

ஒன்றே குலம்; ஒருவனே இறைவன் என்பதை என்றும் மறவாதே! செய் தொழில்கள் பல. அத்தொழில்களுக்குரிய பெயர்கள் பல. அவ்வத் தொழில்களைச் செய்பவர்கள் அவ்வத் தொழில்களின் பெயர்களையே தங்களுடைய பட்டப் பெயர்களாக வைத்துக் கொண்டனர். அப்பட்டப் பெயர்களே நாளடைவில் குலப் பெயர்களாக குயுக்தியுடையவர்களால் கொள்ளப்பட்டன. இவை தள்ளத் தக்கவைகளேயாகும்.

இதுதான் உண்மை. மனிதகுலம் ஒன்றே என்றும் மனத்தின் பேதங்களுக்கோர் அளவில்லை. இதனால் வருவதுதான் தொல்லை. இதை அனுசரித்தே ஆன்ருேர்கள் அற நூலை இயற்றியிருக்கிறார்கள். அதை மறப்பதாலும்; அவமதிப்பதாலும் வருவதே பேதமாகும்; துன்பமாகும். அன்ப! என்பு தோல் போர்த்த உடல் யார்க்கும் ஒன்றல்லவா?

கி: தாங்கள் சொல்வதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால்—தர்மத்துக்கு மாருக நடப்பதை நான் எப்படி ஒப்புக் கொள்வது? யாரா யிருந்தாலும் தவறு தவறு தானே?

தி: என்ன தவறு கண்டிருக்கிருய்?

கி: பராசரோ படகோட்டும் பெண்ணைக் கூடி இவரைப் பிறப்பித்தார். இவரோ தாயின் கட்டளை என தம்பி மனைவிகளுடன் கூடி திருதராஷ்டிரனையும் பாண்டு வையும் பிறப்பித்தார். பிறகு தாயின் கட்டளையுமின்றி வேலைக்காரியுடன் கூடி விதுரரை பிறப்பித்தார். வேத வியாசர்தான் ஆனால் விதிக்கு மாருக; வேடத்துக்கு மாருக; நடந்து விட்டாரல்லவா? அரண்மனையில் வாழ்ந் தாலும் பீஷ்மர் பீஷ்மர் தான்; ஆரண்யத்தில் வாழ்ந்தா லும் வேத வியாசர் சந்தர்ப்பவாதிதான்.

தி: அன்ப! நீ சொல்வது உண்மையாக இருக்க லாம். உனக்கு வேண்டியது என்ன? கேவலம் கதையா? கருத்தைத் திருத்தவல்ல உண்மைகளா?

எப்பொழுதும் கதையில் கருத்தை செலுத்தாதே! ஏன்? கதை எப்பொழுதும் யாதானும் குறையுடைய தாகத்தான் இருக்கும். ஆனால் அதனிடையில் இலைமறை கனிபோல் அமைந்திருக்கும் அமிர்தமயமான; அறிவுக் களஞ்சியமான; ஞான பாகத்தை என்றும் மறவாதே! அவை தாம் மனித சமூகத்தின் மாபெரும் சம்பத்தாகும். அதை மறந்தால் துன்பத்துக்கு இரையாக வேண்டியது தான்.

கனிவிரும்பி மரத்தடியை நாடியவன் கனியைத் தேடு

வானா; அல்லது அதன் கிளைகளின் கோணல்களையும் இலைகளின் பேதங்களையும் எண்ணிக் காலங் கழிப்பானா? நீயே சொல். அறிவுடையவன் இருள் வருவதற்குள் கனிகளைத் தேடியுண்டு களிப்படைவான். சேகரம் செய்துக் கொண்டு வெளிச்சத்திலேயே வீடு சென்று எல்லார்க்



கும் ஈந்து இன்பமடைவான். ஆனால் அறிவு குன்றியவனோ வந்ததை மறந்து ஆராய்ச்சியிலீடுபடுவான். நேரம் ஆனதும் இருள் வந்து விட்டதே என்று வெறுங் கையுடன் வீடேகுவான். இவனை நம்பி யிருப்பவர்களும் நலிவடைய வேண்டியதுதான். அதைப் போலவே கருத்தை மறந்து கதைகளில் குறை காண்பவன் நிறைவை அடைவதில்லை; நலிவடைகிறான்.

மேலும் வாழ்வில் இன்பமடைய விரும்புபவர்கள் முக்கியமாய் மூன்று விஷயங்களைக் கவனிக்கக்கூடாது.

சி: அவைகளை எனக்கு விளக்கிக் கூறியருள வேண்டும்.

ஞா: (1) பெண் மூலம்; (2) நதி மூலம்; (3) ரிஷி மூலம்.

சி: ஏன்? காரணம் என்ன?

ஞா: (1) பெண்மூலத்தை ஒருவன் ஆராய்வானாயின் அவன் பெண் இன்பத்தை பூரணமாக அனுபவிக்க முடியாது. அவன் மனம் இடையிடையே பெண் மூலத்தின் துச்சத் தன்மையை எண்ண எண்ண அவனுக்கு அசுத்தமும் அச்சமும் வெறுப்புமே தோன்றும். அதனால் அவன் தன் உணர்ச்சி வேகத்தில் ஒன்றுபட்டாலும் புணர்ச்சிக்குப் பின் வருந்துவான். அதனால் அவன் கணகாலம் அனுபவித்த இன்பமும் துன்பமாகவே துச்சமாகவே

தோன்றும்.

(2) அதைப் போலவே ஒருவன் நதிமூலத்தை நினைந்து ஆராய்வானாயின் அவன் குடிநீருக்கே அலைய வேண்டியதுதான்.

(3) அதைப் போலவே ஒருவன் ரிஷிமூலத்தை ஆராய்வானாயின் அவனுக்கு அவர்மேல் நம்பிக்கை பிறக்காது; அற்ப தன்மையே தோன்றும். அதனால் அவன் அம்மகானால் போதிக்கப்பட்ட அரிய ஞானத்தை



புரியாது; புரிந்துக்கொள்ள முயற்சியாது விருதாவாகப் போகிறான்.

எனவே தம் வாழ்வில் இன்பமடைய விரும்புபவர்கள் இந்த மூன்று மூலங்களையும் முக்கியமாய் கவனியாதிருக்க வேண்டும். ஆதலின் இனி இத்தகைய எண்ணங்களுக்கு இரையாக வேண்டாம். உமக்கு வேண்டியது கதையல்ல; கருவூலமாய் அமைந்திருக்கும் ஞானமேயாகும்.

சுகதேவர் வேதவியாசர் கொங்கணவர் ஆகிய மூவரும் வந்து சேர்ந்தனர். அவர்களை இன்முகமுடன் தக்க முறையில் வரவேற்று உபசரித்தார் திருவள்ளுவர் கிருஷ்ணமூர்த்தி அவர்களை வணங்கி வரவேற்று உபசரித்தான்.

கிருஷ்ணமூர்த்தி: உச்சி வேளையில் வந்திருக்கிறீர்கள். முதலில் உண்டு இளைப்பாருங்கள்.

வேதவியாசர்: ஒருவர் உணவை நால்வர் உண்டு திருப்தியடைவது எப்படி?

கி: ஐவருக்காக உணவு கொண்டு வந்திருக்கிறேன்.

வே: (வியப்புடன்) எப்படி எங்கள் வரவு உனக்கு

ஏற்கனவே தெரியும்?

இ: தெரிந்துதான் கொண்டு வந்திருக்கிறேன்.

வே: அதை விவரமாய் சொல்ல வேண்டும்.

இ: நான் கடந்த ஏழு ஆண்டு காலமாய் ஒருவருக்கு ஏவல் பணிவிடைகளை செய்து வருகிறேன். எனக்கோ யாதொரு குறையும் இல்லை. எங்கள் கிராமத்து முக்கிய மான செல்வந்தன் சடையனுபக்கனின் இரண்டாவது மகனுகும் நான். என்றுலும் நான் யாதொரு பிரதிபல னும் கருதாது அவர் இட்ட கட்டளையை ஏற்று நடப் பதில் ஓர் அலாதியான இன்பத்தை அனுபவித்து வரு கிறேன். அதை என் மனம்தான் அறியும். மற்றவர்கள் உணரார். இதன் பொருட்டு என் கிராமத்தில் என்னை



ஏளனம் செய்யாதவர்கள் ஒரு சிலரேயாகும். அவர்கள் ஏளனம் செய்யச் செய்ய எனக்கு அவருடைய ஏவல் பணி விடைகளைச் செய்வதில் உற்சாகமும் உறுதியும் வளர்ந்து வரலாயின. எனவே அடிபட்ட சுணங்குபோல் ஏளனம் செய்பவர்கள் அடங்கி விட்டனர்.

நேற்று இரவு அவர் தேவைக்கு வேண்டிய தண்ணீர் எடுத்துக் கொண்டுபோய் வைத்துவிட்டு வழக்கம்போல் விடைபெற நின்றேன். "நாளை காலை திருவள்ளுவர் குளத் தருகேயுள்ள நாவல் மரத்தடியில் பழம் பொறுக்கி உண்டு கொண்டிருப்பார். சென்று கூழ் குடிக்க கூப்பிடு; அவர் உச்சி வேளையில் சாப்பிடுகிறேன் என்பார். இவருக்கு வேண்டிய உணவு வகைகளை தயார் செய்துக் கொண்டு போ. திருவள்ளுவர் தனித்திருப்பார். உணவு கொள்ள அழை. சிறிது நேரம் செல்லட்டும் என்பார். அதற்குள் திருக்கைலாயத்திலிருந்து சுகதேவர்; வேதவியாசர்;

கொங்கணவர் ஆகிய மூவரும் அங்கு வந்து சேர்வர். ஆகவே நால்வருக்கும் உணவு படை. அவர்கள் உண்ட பின் நீ உணவு கொள்" என்றார்.

அவர் சொன்னது போலவே எல்லாம் நடந்திருப்பதைக் கண்டு நான் பெருமிதமடைகிறேன். இப்பொழுது அவருடைய எண்ணத்தின் ஆற்றலை முற்றும் உணர்கிறேன்.

நால்வரும் உணவு கொண்டனர். பூமியே பஞ்சணையாய் நாவல் மரநிழலே மேல் கூரையாய் கொண்டு ஓய்வு கொண்டிருக்கின்றனர். கிருஷ்ணமூர்த்தியும் உண்டான்; ஓய்வு கொண்டான்.

மாலை நெருங்கியது கிருஷ்ணமூர்த்தி விடைபெற்றான். நால்வரும் எழுந்து நீர்க்கடன் முடித்துக் கொண்டனர். குளக்கரையின் அரசமரத்தடியில் அமர்ந்தனர்.

திருவள்ளுவர்: (வேதவியாசரை நோக்கி) தாங்கள் இவ்வளவு தூரம் வரநேர்ந்த காரணம் யாதோ?



வேதவியாசர்: இறைவன் இட்ட கட்டளையைத் தட்டவல்லார் யாரே!

தி: என்ன அது?

வே: இல்லறம் உயர்ந்ததா? துறவறம் உயர்ந்ததா? என்பதை அறிந்து வரச்சொன்னார்.

தி: இரண்டையும் அவரே வாழ்ந்து காட்டியிருக்கிறாரே! இதில் ஏற்றத் தாழ்வு ஏது?

வே: உண்மைதான். என்றாலும் அதை உலகம் ஒப்புக்கொள்ள வேண்டுமல்லவா?

தி: இப்பொழுது அதற்காக என்ன செய்யப் போகிறீர்கள்?

வே: தங்களிடம் அவைகளை பற்றி அறிந்து செல்லவே வந்திருக்கிறோம்.

தி: (திகைப்புடன்) வேதத்தின் தந்தையே இப்படிச் சொல்வது தகுமா? தங்களால் அறிய முடியாத உண்மையும் உண்டா?

வே: உண்மைதான். என்றாலும் உலக வழக்கம் என்று ஒன்று இருக்கிறது அல்லவா? அதை அறிஞர்களாகிய நாம் மீறலாமா? என்ன இருந்தாலும் கூடாது அல்லவா?

என் மகன் சுகன். பிறவியிலேயே ஞானியாய் பிறந்தவன்தான். என்றாலும் சும்மா யிருந்தானா? இல்லை. என்னிடம் அதே ஞானத்தை கேட்டுணர்ந்தான். அதன் பிறகாவது அமைதியா யிருந்தானா? இல்லை. மேலும் உயர்ந்த ஞானம் அடைவது எப்படி என்று என்னையே வினவினான். உயர்ந்த தங்கத்தை வைத்துக் கொண்டு மேலும் உயர்ந்த தங்கம் அடைவது எப்படி என்பது போல இருக்கிறதல்லவா இக் கேள்வி. எனவே இதற்கு மறுமொழியாக தட்டானிடம் சென்று கேள் என்பது போல; அவனுடைய விபரீத புத்தியைப் போக்கும்



பொருட்டு சனக ராஜனிடம் சென்று கேள் என்றேன். அவ்வண்ணமே சென்றான். சனக ராசவின் சோதனைக்குள்ளானான். பிறகு உபதேசம் பெற்றான். உபதேசம் பெற்ற பின் சுகன் சனகனிடம் " இந்த ஞானத்தை நான் இயல்பாகவே உணர்ந்திருந்தேன். என் தந்தையும்

இதையே சொன்னார். தாங்களும் இதனையே உபதே சிக்கிறீர். இதனால் நான் அறிந்து கொண்டது என்ன வென்றால் கலங்கமில்லா ஞானம் ஒன்றே. அதனை சாஸ் திரம் சொல்லுகிறது; சான்றோர்களும் உபதேசிக்கின் றனர். ஞானசாட்சாத்காரமும் அடையப்படுகிறது. இதனை இன்றே சந்தேக விபரீதமின்றி உணர்ந்தேன்" என்றான்.

அதைப் போலத்தான் ஆண்டவன் அனுப்பியுள்ளார். நாங்களும் வந்திருக்கிறோம்.

தி: நல்லது; தமக்கென வாழா பிறர்க்குரியாளர்கள் எந்த அறத்தில் வேண்டுமானாலும் இருப்பார்கள் அல்லவா?

இரவு நெருங்கியது; மழையும் ஆரம்பமானது. நால் வரும் எழுந்தனர். மழைக்குத் தங்க ஊர்ச்சாவடியை நோக்கி நடந்தனர்.

* * *

பகல் முழுதும் உழைப்பார்கள். இரவு நெருங்கியதும் உணவு சமைப்பார்கள். யாரேனும் ஒரு அதிதிக்கு உணவு படைத்து அவர் உண்டு திருப்தி அடைந்ததைக் கண்ட பிறகே எஞ்சி யிருப்பவைகளை சதிபதிகளாகிய இருவரும் உண்டு இருதயம் குளிர்ந்த வண்ணம் உறங்கு வதையே தம் தொண்டாக, கடமையாக, தர்மமாகக் கொண்டு நடந்து வரலாயினர்.

அன்றும் வழக்கம்போல் உணவு சமைத்தான பின் ஊர் சாவடியை நாடி அதிதியைத் தேடி வருகிறான் குடும் பத் தலைவன். அவன் மனைவியோ மட்கலத்தில் நீர்

கொண்டு முன் வாயிலில் வந்து நிற்கிறாள். அதனால் அவர்கள் வீட்டின் விளக்கொளி வெளியில் தெரிகிறது.

அதைக் கண்டதும் மழைக்காக சாவடியில் தங்கி வாயாடிக் கொண்டிருந்த அவ்வூர் வம்பர்கள் ஏளனம் பேசவாரம்பித்து விட்டனர். "இரவோடிரவுதான் சமைக்கிறார்கள்; அடுத்த வேளை உணவுக்கு ஆழாக்கு தானியங்கூட இருக்காது. என்றாலும் ஒரு அதிதிக்காவது உணவு கொடுக்காமல் உண்பதில்லை. இதை என்னென் பது? இது பகுத்தறிவுக்குரிய செயலா; அல்லது—."

இதற்குள் அதிதியைத் தேடி வந்துவிட்டான். அவன் வரவைக் கண்டதும் இவர்கள் வாய் தானே அடங்கி விட்டது.

இதுதான் தர்மத்துக்குரிய மர்மத்தின் தனி ஆற்றல் என்பதாகும். ஆள் இல்லாத போது எது வேண்டு மானாலும் பேசுவார்கள். ஆள் வந்து விட்டால்போதும் தானே வாய் அடங்கிவிடும். இதைத் தூல உடற்கூறு என்பதற்கில்லை. ஏன்? தூலம் தனித்து இயங்குவதில்லை அல்லவா?

நால்வரும் அமர்ந்திருக்கும் இடம் வந்தார். சடை முடியோடு கூடிய வயோதிகரான வேதவியாசரைக் கண்டதும் வணங்கி உணவு கொள்ள எழுந்தருள வேண்டும் என்று வேண்டி நின்றார்.

வியாசர்: தங்களுக்கு புத்திரப் பேறு உண்டா?

இல்வாழ்வான்: இல்லை.

வி: புத்திரப் பேறு இல்லா வீட்டில் புசிப்பது பாவ மாகும்.

இ: அப்படிச் சொல்லாதீர்கள்! புத்திரப் பேறு

இல்லாதவன் 'புத்' என்னும் நரகம்போய் விழுகிறான் என்று கற்பித்தவன் ஒரு மடையன்; மகேசுவர பூசை (சிவனடியார்களுக்கு உணவளித்தல்) யின் மகிமையை



உணராதவனாகும். இறைவன் ஒருவனே தந்தை; இயங்கும் சீவர்கள் யாவும் அவன் குழந்தைகளாகும். இந்த உண்மையை உணராதவன் மண்மேல் பிறந்தும் பதரேயாகும்.

இல்லற தர்மத்திற்கேற்ப இட்டுண்ணக் கடமை பட்டவனாயிருக்கிறேன். அதற்கேற்ப அழைக்கிறேன். என் தர்மத்தில் எனக்குத் தெரிந்தவரை தவறாது நடந்து வருகிறேன். தவறி யிருந்தால் சொல்லுங்கள் திருந்திக் கொள்கிறேன். ஆனால் கற்பனை கதைகளுக்கு அற்பமும் என்னை ஆளாக்க வேண்டாமென தங்கள் தாள் பணிந்து கேட்டுக் கொள்கிறேன்.

தி: வலிய வருவது இறைவன் கட்டளையாகும் அல்லவா?

வே: ஆம்.

தி: சரி; அழைப்புக்கிணங்க மூவரும் சென்று உணவு கொள்ளுங்கள். இரவு உண்ணும் வழக்கம் என்னிடம் இல்லை.

அவன் அழைத்ததோ ஒருவர்; இப்பொழுது போவதோ மூவர். வீட்டிலிருக்கும் உணவோ இருவருக்குத்தான் கட்டும். இதுவும் இறைவன் கட்டளை என எண்ணி இருந்த உணவை மூவருக்கும் படைத்தான். அவர்களின் போதாக் குறையைக் கண்டு எஞ்சி யிருந்த கஞ்சியையும் உப்பிட்டு பருகக் கொடுத்தான். மூவரும்

உண்டு பருகினர். இனி சென்று உறங்க வேண்டியது தான். அக்கூரை வீட்டின் வெளித்திண்ணையே வசதியா யிருந்தது. எனவே அங்கேயே படுத்துவிட்டனர்.

காலையில் எழுந்தனர். வீட்டுக்காரனிடம் சொல்லி விட்டு செல்வதற்காக கதவைத் தட்டினர். மறுமொழி யில்லை. கதவு கை தட்டலால் தானே திறந்தது. உள் சென்று மூவரும் பார்த்தனர்.

## 206

சதிபதிகள் இருவரும் ஒரு பாயிலேயே ஆடை நழுவாது அப்பொழுது உடுத்தியது போலவே படுத்திருந் தனர். வியாசர் கூப்பிட்டார். மறுமொழியில்லை. அவர்கள் முகத்தைக் குனிந்து கூர்ந்து நோக்கினார். இல்வாழ்வுக்கோர் எடுத்துக் காட்டாக இருந்த இருவரும் வல்வினையின் வலிக்கு ஏற்ப புகழுடம்பை எய்தி விட்டனர் என்பதை உணர்ந்தார்.

பிறகு அச்சடங்களை அடக்கம் செய்ய அவ்வூரிலுள்ள வர்களுடன் ஏற்பாடு செய்துவிட்டு நால்வரும் நதியை நாடினர்: நீராடினர். உச்சி உணவுக்காக பிச்சையின் பொருட்டு வேறொரு திக்கை நோக்கி நடந்தனர்.

இளந்துறவி ஒருவன் வியர்க்க வியர்க்க வேகமாக ஓடி வருகிறான்.

வியாசர்: துறவியே நில். துறவி பரபரத்தோடி வரக் காரணம் என்ன? மறையாமல் சொல்.

துறவி: (திருவள்ளுவரை நோக்கி) ஐயனே! என்னை அடையாளம் தெரிகிறதா?

திருவள்ளுவர்: எங்கோ கண்டது போலிருக்கிறது.

து: தங்கள் இருவையால்தான் நான் துறவறம்

ஏற்றேன். நாங்கள் உச்சிவேளை பிச்சைக்கு வந்த பொழுது என் மனைவி உணவு கொடுக்க மறுத்தாள். உதாசீனமாக பேசினாள் அல்லவா? அப்பொழுது வெளிப் பட்டு துறந்து வந்தவன் தான் நான்.

வி: சரி: அிருக்கட்டும். இப்பொழுது நீ ஓடி வர வேண்டிய காரணம் என்ன ?

து: உச்சி உணவின் பொருட்டு பிச்சைக்கு அவ்வூர் போனேன். அவ்வூர் அரசன் மகளுக்குச் சுயம்வரம் ஆதலின் அனைவருக்கும் அங்கேதான் இன்று ஆகாரம்: நீங்களும் வாருங்கள் என்றனர். அதன்படி போனேன். வெளி வாசல் பந்தல் அடியிலேயே நின்றுக்கொண்டிருந்



தேன். மாலையுடன் வந்த அரசன் மகள் எனக்கு மாலை யிட்டு என் கையைப் பிடிக்க ஆரம்பித்தாள். வெடுக் கென அவள் கையைத் தட்டிவிட்டு மாலையை எடுத்து வீசி எறிந்துவிட்டு நான் " துறவி! துறவி!" என்றேன். முடியாது உன்னையே தான் மணப்பேன் என்று மீண்டும் கையைப் பிடிக்க நெருங்கினாள். உடனே உயிருக்கு நாடி ஓடுபவனைப் போல என் துறவு வாழ்வை காப்பாற்ற ஓடோடி வருகிறேன். அவளும் ஆட்களும் தொடர்ந்து வந்துக்கொண்டிருக்கின்றனர். நான் அவர்கள் கண்ணில் படாமல் ஓடிவிட வேண்டும்.

என்றதும் ஆற்றோரம் புதர் நோக்கி ஓட்டம் பிடித் தான்.

அடுத்த சில விநாடிக்குள் ஆட்கள் தொடர்ந்தோடி வந்தனர். அவர்கள் பின் அரச குமாரியும் அழுத வண்ணம் வந்தாள்.

வியாசர்: அரச குமாரியே! ஏன் இந்த அலங் கோலம்?

அரச குமாரி: மாலையிட்டேன். அதைத் தட்டிவிட்டு ஓடி வந்து விட்டார் ஒருவர். அவருடன் கூடி வாழ்ந்தால் வாழ்வேன். இல்லாவிட்டால் இந்த வாழ்வே இதோடு முடிவடைய வேண்டியதுதான்.

வி: ஆணின் மனம் அறியாது நீ அப்படி. மாலையிடலாமா?

அ: சீரும் செல்வமும் அரச போகமும் ஆட்சி பீடமும் கொண்டு அரச குமாரியே மணக்க வருவதை எந்த ஆண் மகன்தான் விரும்பமாட்டான் என்றெண்ணி விட்டேன். அதனால் கெட்டேன்.

வி: தோன்றும் பொருள் அனைத்தையும் துச்சமாகக் கருதுபவன் அல்லவா துறவி.

அ: அவ்வுண்மையை அறியாமையினால் அந்தோ!—



பெண்ணைப் பிரிந்து நால்வரும் நடக்கலாயினர்.

தி: இப்பொழுது அனுபவம் கிடைத்து விட்டதல்லவா?

கொங்கணவர்: எப்படி?

தி: இல்லறத்தில் இருந்த வண்ணம் இருப்பதை இட்டுண்டு இன்னுயிர் நீத்த அச்சதிபதிகள் உயர்வா? அல்லது பொருள் வளங்கள் நிறைந்த அரசாட்சியுடன் அரச குமாரியே மணக்க விரும்பி வலிய வந்தும் இவை யாவும் துச்சமெனக் கருதி பறந்தேகும் அத்துறவி உயர்வா? இவ்விருவர்களில் யார் உயர்வு?

கொ: தம் தம் நிலையில் தாம் தாம் உயர்ந்தவர்களேயாகும். இதில் சந்தேகப்படுவதற்கில்லை.

தி: அதுதான் உண்மை.

வி: ஆம். இனி எப்பொழுது தென்னாடு வருவேன் என்று சொல்வதற்கில்லை. வந்ததே வந்தோம் குறுமுனியைக் கண்டு போவோம் வாருங்கள். அவர் பொதிய மலையில் வதிவதாகக் கேள்வி.

தி: என் குருநாதரல்லவா அவர்.

வி: அப்படியா; சரி. ரொம்ப நல்லது. இனி அகத்தியரைத் தேட வேண்டிய அவசியமில்லை. நேரே அழைத்துக்கொண்டு அவர் பர்ணசாலைக்கு செல்வீராக.

# 33. அகத்தியரும் வேதவியாசரும்

நால்வரும் பொதியமலை சாரலை அடைந்தார்கள். அகத்தியர் ஆசிரமம் பண்டுபோல் இருப்பதைக் கண்டு திருவள்ளுவர் மகிழ்ந்தார். வேதவியாசர் ஆசிரமத்தின் சூழ்நிலைகளை கூர்ந்து கவனிக்கலானார். சுகதேவரும் கொங்கணவரும் இயற்கையின் எழிலில் இன்புற்றவர்களாய் அவர்களைத் தொடர்ந்து சென்றனர்.

ஆசிரமத்தின் பர்ணசாலையை பயபக்தியுடன் வேதவியாசரும் திருவள்ளுவரும் வலம் வந்தனர். அவர்களை அனுசரித்து மற்ற இருவர்களும் நடந்துக் கொண்டனர். முன் வாயிலை அடைந்தனர்.

"வாராய் வேதவியாசரே!" என்ற குரல் மணியோசை போல் வந்தது.

மனித சஞ்சாரமே இல்லாத இடத்திலிருந்து ஓசை வந்ததைக் கேட்டு அகத்தியரின் மகிமை அறியா கொங்கணவர் அசரீரியா யிருக்குமோ என்று தனக்குள் எண்ண

லானார். சொரூபத்தில் நிலைநிற்கும் சுகருக்கோ அவ்வெண்ணம் எழவில்லை.

வேதவியாசர்: கோதிலா குறுமுனியே! வணக்கம். தரிசனம் தந்தருளல் வேண்டும்

பர்ணசாலையின் நடுவிலிருந்த மேடையின்மீது கட்டை விரல் அளவுள்ள ஒரு குட்டையான உருவம் தோன்றியது. அதைக் கண்டதும் அனைவரும் மெய் மறந்தனர். அகத்தியரின் அந்த அற்புதமான ஆற்றல் ஒரு நாழிகை நேரம் அவர்கள் அனைவரையும் ஆட்கொண்டு விட்டது. அவர்கள் வந்த காரியத்தை விசாரித்து அனுப்ப வேண்டும் என்ற எண்ணம் அகத்தியருக்கு உண்டானது. உடனே அவர்களும் தம் நிலை எய்தினர். எல்லாரும் அவ்



வுருவத்தின் முன் விழுந்து வணங்கினர். எழுந்து கை கட்டிய வண்ணம் பயபக்தியுடன் நின்றனர்.

அகத்தியர்: அமருங்கள்.

நால்வரும் உட்கார்ந்தனர்.

அ: வேதவியாசரே! கைலாயம் விட்டு வரக் காரணம் என்ன?

வே: தாங்கள் அறியாததா; இறைவன் கட்டளை.

அ: என்ன அது?

வே: இல்லறம் துறவறம் ஆகிய இரண்டின் உயர்வை கண்டறிந்து வரச் சொன்னார். அதனால் தென்னாடு வர நேர்ந்தது.

அ: காரணம் என்ன?

வே: கைலாயத்தில் இல்லறம் உயர்ந்ததா? துற

யுறம் உயர்ந்ததா? என்ற வாதம் எழும்பி விட்டது. அதற்காக பூலோகம் போய் தெரிந்துவாரும் என்று எங்களை அனுப்பினர்.

அ: அவர் அறியாததா? தங்களுக்குத் தெரியாததா?

வே: உண்மைதான்; மறுப்பதற்கில்லை; என்றாலும் உலக அனுபவம் என ஒன்று இருக்கிறதல்லவா?

அ: ஆம்; யாருக்கும் மூத்த பிள்ளைமேல் மோகம் அதிகம் அல்லவா?

வே: ஆம்.

அ: அதைப் போல்தான் ஆண்டவனுமாகும். முதல் முதலில் ஜீவோற்பத்தி உண்டான இடம் பூமத்திய ரேகையிலுள்ள பிரதேசமான தென்னாடு அல்லவா? ஆம். ஆதியில் என்னைப் படைத்தான். என் மூலம் தமிழை உண்டாக்கச் செய்தான். அதுமட்டுமல்ல; தரணியிலேயே தமிழனுக்கு ஓர் தனி மதிப்பை



யுண்டாக்க விரும்பினான். அதற்காக தருணம் பார்த்திருந்தான். அவன் திருமண காலம் வந்தது. அதைக் காண விரும்பி கைலாயம் வந்தவர்களுக்குக் கணக்கே இல்லை. அப்படி வந்தவர்களில் நானும் ஒருவனாகும். இறைவன் "குறுமுனியே!" என்று அந்த சந்தர்ப்பத்தில் என்னைக் கூப்பிட்டான். "ஐயனே!" என்ற வண்ணம் அவர்முன் சென்றேன். எல்லார் பார்வையும் என் மேல் பட்டது.

"அகத்தியனே! திருமண வைபவத்தைக் காண வந்திருக்கும் கூட்டம் பெருகிவிட்டது. அதனால் அப்

பாரம் தாங்காது கைலாயமே கடல் கொள்ளும் நிலைக்கு நெருங்கி வந்துக்கொண்டிருக்கிறது. நீ சீக்கிரம் தென்னாடு சென்று பொதிய மலையில் பள்ளி கொள்ளுவாய்'' என்றார் இறைவன்.

"ஐயனே! திருமண வைபவத்தை நான் காண்பது எப்படி?'' என்றேன். அதற்கு இறைவன், ''அகத்தியனே! உனக்கு அக்கவலை வேண்டாம். திருமண வைபவ காட்சியை நான் உனக்கு பொதிய மலையிலேயே கொடுக்கிறேன். மறுக்காமல் நீ சீக்கிரம் செல். அதோ! கடல் கொந்தளித்து எழுந்து வருகிறது பார்! நீ கைலாயம் நல்ல நிலையிலிருக்க வேண்டும் என்று விரும்புவாயாயின் பொதியமலை விட்டு பெயரக் கூடாது. நீ என்றும் அங்கேயே இருக்க வேண்டும். நீ எப்பொழுது விரும்பினாலும் கைலாய காட்சியைக் காணலாம். உன் விருப்பம் போல் நானும் தரிசனம் தந்துக் கொண்டே இருப்பேன்; சீக்கிரம் செல்.'' என்றார். அன்று வந்தவன் தான். அதன் படியே நானும் இருக்கிறேன். அவரும் கைலாய காட்சியும் தரிசனமும் தந்துகொண்டேயிருக்கிறார்.

ஆதியிலேயே பரமசிவன் என்னை பெருமைபடுத்தியதைப்போல் இப்பொழுது என் மாணவனையும் பெருமைபடுத்த எண்ணிவிட்டார். இது எனக்கு ஏற்கனவே தெரியும்.

212

வே: உண்மைதான். தங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது?

திருவள்ளுவர்: (இரு கைகளையும் முகத்துக்கு நேராய் கூப்பிக்கொண்டு) ஐயனே! அடியேன் வேலை முடிந்தது. இனி தங்கள் தாளடி பணிந்து ஏவல் பணி

விடைகளை என் சிரமேல் கொண்டு வாழ விரும்புகிறேன்.

அகத்தியர் (பரிவுடன்) என்னருங் குழந்தாய்! என் தூல உடல் சூக்குமத்தில் கரைந்து காரணத்தோடு கலக்கும் காலம் நெருங்கி வருகிறது. ஆதலின் அவ்வாசை வேண்டாம். விட்டு விடுவாய். பரமசிவன் ஏவல்படி நான் இப்பொதிய மலையிலேயே என் இறுதி காலம் வரை வதிய வேண்டியதுதான். வேறெங்கும் செல்வதற்கில்லை. உனக்கோ அப்படி ஒன்றுமில்லை.

ஆதலின் நீ வாழ்ந்த இடமே செல். மக்களுக்கு வழி காட்டியாக நில். காயம் நீங்கும்போது முதலில் என்னை கண்டு களிப்பாய். அதன் பிறகே காரணப் பொருளுடன்; எல்லாம் வல்ல இறை பேரொளியுடன் ஏகமாய் விடுவாய்.

தி: தேவரீர் கட்டளைப்படியே.

வேதவியாசர்: கைலாச வாசிகளுக்கு ஏதேனும் சொல்லி யனுப்ப விரும்புகிறீர்களா?

அ: பேத புத்தியுள்ளவரையில் பலதும் தோன்று கிறது. பரம்பொருள் பார்க்க முடியாது போகிறது. வேறாகி விடுகிறது; மறைந்தே விடுகிறது.

ஆனால் அபேத புத்தியிலோ அப்படியில்லை; மறைவு மில்லை; இரண்டாவதென ஒன்றுமில்லை. அந்த ஏகமான பரம்பொருள் தானாகவே ஆகிறான்; விளங்குகிறான். ஆகவே வேதவியாசரே! இப்பொழுது எந்த நிலையி லிருந்து என்னைக் கேட்கிறீர்?

வே: உண்மைதான். ஒருகணம் உபாதியோடு கூடி னாலும் அது பெரும் பிழைக்கு இட்டுச் செல்லுகிறது.



எல்லாம் ஏகவுருவா யிருக்கும்போது யார் யாருக்கு

என்ன சொல்லி யனுப்புவது? கணகாலம் விசாரம் விலகி ஞலும் மனம் மயக்கம் அடைந்து விடுகிறது. என்னே மாயா விகாரம்! விடை பெறுகிறோம். கைலாயத்தையே காப்பாற்றி நிற்கும் அகத்திய மாமுனியே! அடிபணிகி றோம்.

14

# 34. வியாசர்பாடி

நால்வரும் பர்ணசாலை விட்டு வெளி வந்தனர்.

"வந்ததே வந்தோம்; தென்கோடி சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் கன்னியாகுமரியையும் கண்டு சேவித்து விட்டுச் செல்வோம்" என்றார் வியாசர்.

திருவள்ளுவர் இசைந்தார். எனவே நால்வரும் தென் கோடி நோக்கி நடந்தனர்.

தென்கோடி; முக்கடல் கூடும் முனை; முனையைச் சேர்ந்து நிற்கின்றது கோயில். கூர்ந்து நோக்கும்போது முக்கடலும் கூடி கன்னியாகுமரியின் திருவடியை தொட்டு சேவிக்க முயல்வதுபோலும்; அது முடியாமை கண்டு மனம் நொந்து நிலைகுலைவதுபோலும்; அக்கடல் அலைகள் ஓய்வின்றி வீசுவது காணப்படும். கன்னியோ தன் எண் ணம் எப்பொழுது நிறைவேறும் என்ற ஒரே நோக்கத் துடன் எதையும் கவனியாதிருக்கிருள்.

என்றாலும் கன்னியின் கோலமும் கடல்களின் ஓலமும் இயற்கையின் சாலமும் எல்லார் மனதையும் கவர வல்லனவாய் இருந்தன; இருக்கின்றன. யாவையும் கண்டு களித்தபின் தெளிவு பெற்றவர்கள்போல் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து விட்டனர்.

நாழிகை பல கழிந்தது. ஆழியின் இரைச்சல் அதிகமானது; ஆழ்ந்த நிட்டையும் அகன்றது. உள்ளொளி விட்டு மனம் உலக வொளியுடன் அளவளாவ விரும்பியது. எனவே தசேந்திரியங்களும் தம் வேலை செய்யத் தொடங்கின. ஐம்புலன்களாகிய வாயில்கள் இந்திரியங்களின் தூண்டுதலால் திறக்கலாயின. திரிசியப் பொருள்கள் யாவும் தோற்றமளித்தன; விளக்கமாயின



கன்னிப்பெண் ஒருவள் கட்டமுதும் குடிநீரும் கொண்டு வந்து அவர்கள் முன் வைத்தாள். உணவு கொள்ள அழைத்தாள். நால்வருக்கும் படைத்தாள். அவர்கள் உண்டு பசி தீர்வதைக் கண்டு களித்தாள்; "கல கல"வென நகைத்தாள். அவ்வொலியின் ஓசை அலாதியா யிருப்பதைக் கண்டு கன்னியை நோக்கினர். கணத்தில் மறைந்தாள்.

அம்பிகையின் கருணையை அனைவரும் போற்றி துதி பாடினர்.

குணகடல் ஓரமாகவே வடக்கு நோக்கி நடந்தனர். வழியில் தில்லையம்பலம் சென்று நடனசபாபதியைக் கண்டு களித்தனர். வியாசரின் எதிர்பாராத வரவைக் கண்டு பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் பெருமகிழ்ச்சியடைந்தனர். சிற்றம்பலத்தின் சேவையை அவர்களுக்கு

முறைப்படி செய்து வைத்தனர். சிறந்த பிரசாதமும் அளித்து ஆனந்தமடைந்தனர்.

அவண் நீங்கி திருப்பாதிரிப்புலியூர் வழியாய் திருத்தணி சென்றனர். முருகனைக் கண்டு களிகூர்ந்தனர். அன்று கிருத்திகை நாள். எனவே முருகனுக்கு ஓய்வில்லை. நாடிவரும் பக்தர்களுக்கு காட்சி கொடுக்க வேண்டி அவன் நின்ற நிலையிலேயே இருப்பதைக் கண்டு நால்வரும் போற்றினர்.

பக்தர்களுக்காக பரம்பொருள் வரமிருக்கின்றதா? அல்லது பரம்பொருளுக்காக பத்தர்கள் வரம் இருக்கின்றார்களா? என்ற எண்ணத்துடனேயே அவ்விடம் விட்டகன்றனர்.

வியாசருக்கு சிறிது தளர்வு தோன்றியது. எனவே அவர்கள் மெதுவாக தொடர்ந்து நடந்து மயிலைக்கருகே வந்து சேர்ந்தனர். வியாசர் ஓய்வை விரும்பினர். அவர் உள்ளக் கருத்தை உணர்ந்தார் திருவள்ளுவர். அதன் அருகே குடிகொண்டிருக்கும் பெருவியாபாரியும் தன் சீடனுமான ஏலேலசிங்கனுக்கு ஆள் அனுப்பினர்.



ஏலேலசிங்கன் ஆவலுடன் அதிவிரைவில் வந்தான்; தன் குருவான திருவள்ளுவர் திருவடியில் விழுந்து வணங்கினன். அதன் பின் மற்ற இருவரான வியாசரையும் சுகதேவரையும் வணங்கினன். பின் கொஞ்ச காலம் திருவள்ளுவரின் குற்றேவல் செய்து வந்தவரான கொங்கணவரை குசலம் விசாரித்து மகிழ்ந்தான்.

அவர்கள் தங்கியிருந்த இடத்திலேயே ஒரு பர்ணசாலையை அமைத்தான். அவர்களுக்குத் தேவையான சகல சௌகரியங்களையும் கொடுத்தான். அவர்களுக்குக்

குற்றேவல் செய்ய ஆட்களை நியமித்திருந்தான். என்றாலும் தனக்கு ஒய்வு உள்ள போதெல்லாம் தானே அவர்களு டைய ஏவல் பணிவிடைகளை அடைதற்கரிய பெரும் பேராகக் கருதி செய்து வந்தான்.

காலம் பெரியது. அது ஞாலத்தில் உருக்கொண்ட எவரையும் பார்ப்பதில்லை. ஞானியாயினும் சரி; அஞ்ஞானியாயினும் சரி; எல்லாரும் அதற்கு ஒன்று தான். காலம் செல்லச் செல்ல வாழ்நாள் குறைந்து வயோதிகமும் வியாதியும் தொடர உடல் தளர உள்ளம் சோர்கிறது. என்றாலும் எல்லையில்லா இறை பேரரு ளுடன் இரண்டறக் கலந்திருப்பவர்கள் என்றும் போலவே இருப்பர்; இருக்கின்றனர். அவன் அடியார்கள் அல்லலுறுவதில்லை. இவ்வுண்மையை உணரா பாம ரர்கள் பலவாறு பேசுவார்கள்; பேசுகிறார்கள்.

வேதவியாசர் அங்கே வந்து தங்கியிருப்பது அந்த வட்டாரங்களுக்கே தெரிந்துவிட்டது. அவர் உடலோ வயோதிகத்தின் காரணமாக சுருங்கி தளர்ந்து வருகிறது. அதோடு வியாதியும் தொடர்ந்து விட்டது. ஏலேல சிங்கன் தன் மருத்துவரைக் கொண்டு அதற்காவன அவ்வப்போது அடுத்தடுத்துச் செய்து வந்தான். எனினும் வியாசர் குணமடைய ஒரு மதியம் கழிந்தது.



குணமான உடன் வியாசர் பயணமாக விரும்பினார். அதுகண்ட ஏலேலசிங்கன் இயம்புகிறான் :

" ஐயனே ! அனைத்தையும் துறந்தவர்களுக்கு கைலா யமும் கர்ம பூமியும் ஒன்றல்லவா ? அங்ஙனமிருக்க தேவரீர் கைலாயம் போக விழைவது ஏனோ ? அன்பர்கள்

இருக்கிறேம்; அரும்பணி யாற்றுகிறேம். இன்பமுடன் இங்கேயே இருக்கலாமல்லவா? வயோதிக காலத்தில் வீணுக அலைய விரும்புவது ஏனே?"

வியாசர்: அன்பனே! நீ கூறியது யாவும் உண்மை யேயாகும். நானுக அலைய விரும்பவில்லை. வரவுமில்லை. கைலாயத்தில் கருத்தடங்கியே இருந்தேன். இறைவன் கட்டளை யிட்டான். அதன்படி வெளிப்பட்டேன்; கர்ம பூமி வந்தேன்; மர்மம் அறிந்துக் கொண்டேன். பின் போய் அதை மகேசுவரனிடம் கூற வேண்டுமல்லவா?

ஏலேலசிங்கன்: வாய் பேச வழியில்லாது சொல்லி விட்டீர்கள்.

வி: உண்மையை மறைக்கக் கூடாதல்லவா? அப்பனே! கருத்தடங்கி வாழ்வதற்கு கைலாயமே ஏற்ற இடமாகும்.

ஏ: (வியப்புடன்) என்ன! அப்படிச் சொல்லு கிறீர்கள்? அப்படியாஞல் கர்ம பூமியில கருத்தடங் காதா? மகான்கள் இல்லையா?

வி. மகான்கள் இல்லாத இடமே இல்லை. என்ருலும் பெருவாரியாக இருப்பது அங்கேதான். ஏன்? அது தான் அவ்வப் பூமிக்குரிய இயற்கையும் சிறப்புமாகும். மானச சரோவரக் கரையும் கைலாயமும் போல் கருத் தடங்க இணையான இடமே இல்லை என்று சொல்லலாம் ஏன்? பாலைவனத்துப் பேரீச்சம்பழங்களைப் போல மற்ற இடத்துப் பேரீச்சம்பழங்கள் ருசிக்கின்றனவா? இல்லை. ஏன்? அது அவ்விடத்துக்குரிய இயல்பு. செம்மண் பூமிகளில் வரும் உணவு வகைகள் சுவைபோல களி



மண் பூமிகளில் வரும் உணவு வகைகள் சுவையாயிருப்

பதில்லே அல்லவா ? அதுபோலவே இயற்கையும் சூழ் நிலேயும் கைலாயத்தில் அவ்வண்ணம் அமைந்திருக் கின்றன. மற்ற இடங்களிலோ அப்படியில்லே.

ஏ : சரி ; தங்கள் உடல் தளர்ந்திருக்கும்போது நடப்பது நியாயமல்ல. பல்லக்கு அனுப்புகிறேன். அதில் அமர்ந்து செல்லுங்கள்.

வி : பிறரை நம்பி பயணம் போவது துறவிக் கழ கல்ல. மேலும் செல்லும் வழியிடையில் பல்லக்குச் சுமப்பவர்களுக்கே ஏதேனும் வியாதி வந்து விட்டால் அதற்கு வேறு அவதிப்பட வேண்டுமல்லவா? எனவே தன் சிரமம் தன்னுடேயிருக்கட்டும்; விடைபெறுகிறேன்.

எழுந்தார் ; நடை தொடங்கி விட்டார். சுகதேவர் அவர் பின் சென்ருர்.

"பற்றற்ற பெரியோர்கள் பற்றுக்கு இடங்கொடுக்க மாட்டார்கள்" என்றவாறு கொங்கணவரும் சென்ருர்

அவர்கள் மறையும் வரை ஏலேலசிங்கன் கைகுவித்த வண்ணம் கண் இமையாது பயபக்தியுடன் நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அவர்கள் மறைந்ததும் தேம்பிய வண்ணம் திருவள்ளுவரிடம் போய் சொல்லி அழுதான். அதற்கு திருவள்ளுவர் சொல்லுகிருர் :

"பற்றற்ற ஞானிகளே பராமரிக்க வேண்டியதுதான். ஆனுல் பந்தப் படுத்த; ஒரே இடத்தில் கட்டுப்படுத்த நினேப்பதும் விரும்புவதும் தவறல்லவா ? கடலோடு கலக்கும் வரை ஆற்று நீர் தேக்கமின்றி செல்லும் தன்மை போல்; இக்காயம் நீங்கி கடவுளோடு அபேதமாகும் வரையில்; மகான்கள் எதிலும் எங்கும் பந்தப்பட மாட்

டார்கள்; தம் சொந்த வழியிலேயே கர்ம வினைப்படி செல்லுவார்கள்."

219

"அத்தகைய மகான்கள் ஏதோ காரணமாக சிற்சில இடங்களில் சில காலம் தங்கியிருந்து போவதும் உண்டு. அப்படி அவர்கள் சில காலம் ஒரு இடத்தில் தங்கிச் சென்றாலே போதும். அந்த இடம் புனிதம் வாய்ந்த தாய் விடுகிறது. அது பிற்காலங்களில் பெரும் புகழுக்குரிய நகரமாகவோ கோயிலாகவோ அமைகிறது எனவே என் அரும் ஏலேலா! அவர் தங்கி இருந்ததின் நினைவாகவும்; அவர் புனிதம் விளங்கவும் அவர் இருந்த இடத்திற்கு வியாசர் நகரம் என்று பொருளாம் வண்ணம் "வியாசர் பாடி" என்று பெயரிடுவாயாக."

ஏலேலசிங்கன்: ஐயனே! ஆணைப்படியே செய்வேன்.

# இறுதிகாலம்

இயற்கையை அனுசரித்தே எல்லாம் நடக்கின்றன. இதை உணர்ந்து நடந்தால் மயக்கம் நீங்குகிறது: தெளிவு ஏற்படுகிறது. இதை அறியாமையினாலே அறியாமைக்கு இரையாகுபவர்களுக்கோர் அளவில்லை.

அந்தி வானம் அழகானது. அது எந்த நேரத்திலும் மறையும் சுபாவமுடையது. கண் பெற்ற அறிவுடைய சீவர்கள் அதன் அழகையும் அபூர்வ தன்மையையும் சமயம் வாய்க்கும் பொழுது கண்டுகளிக்கத் தவறுவதில்லை. பசும் புல் வெளியில் மேயும் மாடும் அதை

பார்த்து மகிழ்கிறது என்ருல் மேலும் சொல்வது எதற்கு?

அதைப் போலவே மக்கள் வாழ்வுமாகும். அவர்களுடைய இறுதி காலத்தைப் பற்றி உறுதியாகச் சொல்வதற்கில்லை. வாழ்வு நெருங்க நெருங்க அவர்கள் மூலம் அரிய உண்மைகளும் அனுபவங்களும் வெளி வருகின்றன. அதனுல் அறிவு பெற்ற மக்கள் அச்சமயத்தை பயன் படுத்தி பலனடையத் தவறியதில்லை.

வியாசர் சென்ற மறுநாளே ஓர் வதந்தி ஊரெங்கும் உலாவியது. "என்ன! வியாசருக்கு வியாதி வரலாமா? அவர் மகத்துவம் வாய்ந்த மகான் அல்லவா? மக்களைப் போலவே மகான்களுக்கும் நோய் வருமானுல் இருவருக்கும் உள்ள பேதம் என்ன?" என்று ஊரெங்கும் ஒரே பேச்சாக இருந்தது. இதற்கு மறுமொழி கூற வகையறியாது ஏலேலசிங்கன் திருவள்ளுவரிடம் சென்று தெரிவித்தான்.

அவர் மக்களின் அறியாமைக்காக இரங்கினுர்; அதை அகற்றவும் கருணை கொண்டார். மறுநாளே தெருவுக்கு



இருவராவது தவருது அழைத்து வருமாறு ஏலேலசிங்கனுக்குக் கூறினுர். அதன்படியே மறுநாள் ஏலேலசிங்கனுடன் பலர் வந்து சேர்ந்தனர். எல்லாரையும் இன்முகமுடன் நோக்கினுர்; இனிது அமரும் வண்ணம் கூறினுர். பிறகு மெதுவாக திருவள்ளுவர் சொல்லுகிருர்:—

"பிறந்தது இறக்கும். இது தவிர்க்க முடியாத இயற்கையின் நியதியாகும். அதுபோலவே உடல் எடுத்த எல்லாம் ஏதேனும் உணவு கொண்டேயாக வேண்டும்; அவ்

வுணவு சீரணமாகும் வரையில் மேலும் உணவு கொள் வது என்பது முடியாத காரியமாகும். அதற்கேற்ப ஓய்வு உழைப்பு அவசியமாகிறது. இவ்வண்ணம் இயங்கிவரும் உடலுக்கு ஏற்ப தேய்வும் நோயும் தொடர்ந்து வந்தே தீரும். இதில் மகான்களுக்கும் மக்களுக்கும் பேதம் பார்க்க விழைவது தவறு. ஏன்? உடல் எடுத்த எல்லாம் அதற்குரிய இயற்கையின் நியதியான உணவு; உறக்கம்; ஓய்வு; நோய் முதலானவைகளுக்கு இரையாகாம

லிருக்கவே முடியாது. இது இவ்வுலகத்துக்கு மட்டும் பொருந்திய தர்மமல்ல: எல்லா உலகத்துக்கும் ஏற்பட்ட இயற்கையின் நியதியாகும்.

இதோ பெருந்திரட்டு என்னும் நூல் நுவல்கிறது கூர்ந்து கவனியுங்கள்:

(1) குருடன் புகரா மார்த்தாண்டன் குட்டரோகி
யாமெஞ்ஞ
புருடன் தலைநோய் புரந்தரற்குப் புயத்தில்வாதம்
தக்கற்குச்
சுரநோயுண்டு கயரோகம் சோமனுக்கு நீரிழிவு
வருணற்கிவ்வா றமரர்க்கு நோயுண்டுண்டே
மருத்துவரும்.

எனவே இந்த சந்தேகம் இனி உங்களுக்கு வேண்டாம்.

முதியவர் ஒருவர் எழுந்து: ஐயனே! இச்செய்யுளின் பொருளை தெளிவுபட சொல்லவேண்டும்.



"நல்லது; அப்படியே சொல்லுகிறேன் கேளுங்கள்"

புகரா குருடன் — அரக்கர்களின் குருவாகிய சுக்கிர

னுக்கு ஒரு கண் குருடு.

மார்த்தாண்டன் குட்டரோகியாம் = சூரியனுக்குக் குஷ்டரோகமாகும்.

எஞ்ஞ புருடன் தலைநோய் = அக்கினிபகவானுக்கு தலைவலியாகும்.

புரந்தரற்குப் புயத்தில் வாதம் = இந்திரனுக்கு பட்ச வாதமாகும்.

தக்கற்குச் சுரநோயுண்டு = தக்சப் பிரசாபதிக்கு சுர நோயாகும்.

சோமனுக்குக் கயரோகம் = சந்திரனுக்கு இருமல் நோயாகும்.

வருணற்கு நீரிழிவு = வருண பகவானுக்கு மூத்திர வியாதியாகும்.

இவ்வாறு அமரர்க்கு நோயுண்டு = இவ்விதம் தேவர் களுக்கும் வியாதி இருக்கிறது.

உண்டே மருத்துவரும் = அவ்வியாதிகளை குணமாக்க அசுவனி குமாரர்களாகிய வைத்தியர்களும் இருக்கின் றனர்.

முதியவர்: "உண்மையை உணர்ந்தோம்; இவைகளை எல்லாம் எப்படி அறிந்தனர் என்பதை எங்களுக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனர்.

"கூடுவிட்டுக் கூடு பாயும் பரகாயப் பிரவேசம் ஞான வாசிட்டத்தில் சிகித்துவசன் கதையில் தெளிவாக சொல் லப்பட்டிருக்கிறது. அதைப் பார்த்து அறிந்துக் கொள் ளுங்கள்" என்றார் திருவள்ளுவர்.

" அப்படியே செய்கிறோம். இன்னும் ஒரு சந்தேகம் இருக்கிறது. அதைத் தாங்களே கூறியருள வேண்டும்'' என்று கைகுவித்தார் முதியவர்.

வியப்புடன் "என்ன அது?" என்றார் திருவள்ளுவர்.

" தாங்கள் திருக்குறளை எப்படி எழுதினீர்கள்? தங்களுக்கே அனுபவமில்லாத, பழக்கமே இல்லாத பலவற்றைப்பற்றி விளக்கமாக எழுதி இருக்கிறீர்களே இது எப்படி முடிந்தது? அதை அடியேங்களுக்குக் கூறியருள வேண்டும்'' என்றார் முதியவர்.

திருவள்ளுவர் முகத்தில் புன்னகை ததும்பியது; உள்ளக்கிளர்ச்சியுடன் சொல்லுகிறார்:—

" ஒருமுகப்பட்ட மனத்துக்கு உறியாத ஞானம் எதுவுமே இல்லை. அம்மனம் எது எதை எண்ணுகிறதோ அது அதன் முழு அறிவையும் அடைகிறது. இது உங்களுக்குப் புரியாத புதிராக இருக்கலாம். மனம் ஒருமுகப்பட்டவர்களுக்கு இது சுலபமான செயலாகும். மனம் ஒருமுகப்படுவதோ தியானத்தால்தான். தியானமோ தொடர்ந்து ஒரே பொருளை உறுதியாக எண்ணுவதால் ஏற்படுவதாகும். எனவே தொடர்ந்து மனஅடக்கம் பழகி தியானத்தில் தேர்ச்சி பெற்றுவிட்டால் மனம் தானாகவே ஒருமுகமாகிவிடுகிறது. அம்மனம் எதனையும் அறியவல்ல ஆற்றலை அடைகிறது. அதனால் அம்மனம் எது எதை எண்ணுகிறதோ அது அதன் தன்மையை முழுதும் உணர்கிறது. உணர்ந்ததை விரிப்படைந்த பின் ஓலைச்சுவடியில் குறிக்க வேண்டியதுதானே!

வியாசரையே எடுத்துக் கொள்ளுங்கள். அவர் பிரம்ம சூத்திரத்தை எப்படி எழுதினார்? வேதங்களை எப்படி வகுத்தார்? பாரதத்தை எப்படி விநாயகரைக் கொண்டு

எழுதுவித்தார்?

அவர் மகன் சுகதேவரை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் பிறவியிலேயே துறவி. அவ்விதமிருக்க பாகவதத்தை



எப்படி எழுதினர்? கிருஷ்ண லீலையை எண்ணிப் பாருங்கள். பெண்களுக்கும் அவருக்கும் எங்கேனும் என்றேனும் சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறதா? இல்லை. அப்படியிருந்தும் அவர் கோபிகளின் லீலையை எப்படி எழுதியிருக்கிறார் என்பதை எண்ணிப்பாருங்கள்.

எழுத்து வாசனையே இல்லாத வழிபறிக்காரனாயிருந்தவன்தானே இராமாயணத்தையே ஏற்படுத்திய வால்மீகியாகும். அவர் உட்கார்ந்த இடத்தைவிட்டு விலகாமல் அல்லும் பகலும் அரியையே நினைந்து தியானம் செய்தார். அதன் பலனாக உலகம் போற்றும் வகையில் இராமாயணத்தையே எழுதிவிட்டார் அல்லவா?

ஏகலைவனை எடுத்துக் கொள்ளுங்கள். அபூர்வமான வில் வித்தைகளை எல்லாம் எப்படி கற்றுக் கொண்டான்? எனவே தியானத்தால் எதையும் சாதிக்கலாம் என்று நான் உங்களுக்கு உறுதியாய் கூறுகிறேன். தியானமோ இச்சையால் ஏற்படுவதாகும்.

அவரவர்கள் இச்சையே பிறப்பளிக்கும் வித்தாகும் இதனை கொஞ்சம் கூர்ந்து கவனிப்பீர்களாயின் உண்மை விளங்கும், ஏனைய சீவர்கள் எல்லாம் இழிந்த பிறவியை அடைந்திருக்க நாம் மட்டும் மனிதப் பிறவியை எப்படி அடைந்தோம்? நிமிர்ந்து நடக்கும் மனிதனை நோக்கி நோக்கி குனிந்து நடக்கும் சீவர்களும் மனிதப் பிறவியை

அடைகின்றன; அடைந்து வருகின்றன. இதில் சந்தேகப் படுவதற்கொன்றுமில்லை. நாளுக்கு நாள் மனித இனம் பெருகிவருவதை எண்ணிப் பார்த்தாலே இவ்வுண்மை விளங்கும்.

எந்த மார்க்கத்திலாயினும் சரி; அதில் ஆழ்ந்து ஒரு முகப்பட்ட மனதுடன் ஆராய்பவன் அதில் சிறந்து விளங்குகிறான். அதன் சிறந்த பலனையும் அனுபவத்தை யும் அடைகிறான்.

225

அண்டத்தை ஆராய்பவன் அணுவில் வந்து நிற் கிறான். பிண்டத்தை ஆராய்பவன் பரம்பொருளை உணர் கிறான். அண்டமும் பிண்டமும் ஆழ்ந்த தியானத்தில் அகலும்போது கண் கண்ட தெய்வம்போல் காட்சி அளிக் கிறது அவன் இதய ஒளி. அதுவே அனைத்திற்கும் ஆதார மாய் நிற்கும் அறிவு சொரூபமாகும். அவ்வறிவு சொரூ பத்தை உணர்ந்தவர்களை தெளிவு பெற்ற மனத்தினர் என்று மதிக்கிறோம்; மகான்கள் என்று துதிக்கிறோம். ஆம்; அவர்களே உண்மையில் மனதை வென்றவர் களாகும். ஆடிவிட்ட பம்பரம்போல் கூடுவிட்டு ஆவி அகலும்வரை அபிமானமின்றி அடுத்த கருமங்களை இனிது முடித்தேகுவதே அவர்களின் சிறப்பாகும்.''

முதியவர், "ஐயனே! உண்மை விளங்கியது. அன்று மூவரும் சென்றார்கள் அல்லவா? குளக்கரை ஓரமாக செல்லும் வழியில் அவர்கள் போகும் பொழுது பெண்கள் குளித்துக் கொண்டிருந்தனர். இளங்காளையான சுகதேவர் முன்னே சென்றார். அவரைக் கண்டும் பெண்கள் கலங்கமின்றி குளித்துக் கொண்டு தம் நிலையி லேயே இருந்தனர். ஆனால் அவர் பின்னேவரும் பழுத்து

நரைத்த கிழவரான வியாசரைக் கண்டதும் போதும்; உடனே நீரில் பதுங்கிக் கொண்டனர். இதன் காரணம் என்ன?" என்றார்.

"பழக்கங் கொடியது; அது கொல்லாது கொல்லும் சுபாவமுடையது. மாங்கனியை சுவைத்தறியாதவன் அதைக் கண்டாலும் கவர்ச்சியடைவதில்லை, ஆனால் சுவைத்தவனுக்கோ அதைக் கண்டாலே போதும்; நாவில் தானாகவே நீர் ஊறிவிடுகிறது அல்லவா? ஆம்.

சுகதேவருக்குப் பெண் போகத்தில் பழக்கம் இல்லை. அதனால் அவர் கண் பெண்களைக் கண்டாலும் பேதமை அடைவதில்லை. பதுமைகளைப் பார்த்தேகுவதுபோல் யாதொரு விகாரமுமின்றி அவர் மனம் செல்கிறது. அதனால் பெண்கள் அவரைக் கண்டாலும் கருத்து



வேற்றுமை இன்றி தம் நிலையில் குளித்துக் கொண்டே இருந்தனர். ஆனால் வியாசர் அப்படிப்பட்டவர் அல்ல. அவருக்குப் போகத்தில் பழக்கம் இருக்கிறது. அதனால் பெண்களுக்கு அவரைப் பார்த்ததும் பேதபுத்தி ஏற்பட்டு விட்டது. எனவே அச்சமும் நாணமும் அவர்களை ஆட்கொண்டுவிட்டன. அதனால் நீரில் பதுங்கிக்கொண்டனர். உள்ளத்தின் நிலையே உலகத்தின் நிலையாகும்" என்றார் திருவள்ளுவர்.

"உண்மைதான்; முதுமையாயினும் பழக்க வாசனைகள் பதுங்கி இருப்பதை நாங்களும் உணர்கின்றோம்" என்றார் அம்முதியவர்.

அனைவரும் அவரடி பணிந்து வணங்கி விடைபெற்று சென்றனர். ஏலேல சிங்கன் மட்டும் அடக்கத்துடன் அவர்முன் இருந்தான்.

பரிவுடன் திருவள்ளுவர் சொல்லுகிறார்; "என்னரும் குழந்தாய்! என் வாழ்நாள் நெருங்கி வருவதை நான் உணர்கிறேன். வரும் வைகாசித் திங்கள் விசாகத்தின் இறுதியில் அனுசத்தின் ஆரம்பத்தில் ஆவி உடலைவிட்டேகும் என்றெண்ணுகிறேன். ஆதலின் உனக்கு வேண்டியதை சமயம் வாய்க்கும் பொழுது வந்து கேட்டுக் கொள்."

இவ்வார்த்தையைக் கேட்டபின் ஏலேல சிங்கனுக்கு அவரை விட்டு விலக மனம் இணங்கவில்லை. அவர் நிழல் போலிருந்து எல்லாவற்றையும் தானே கவனித்து வந்தான். அதனால் அவன் பெரும் வியாபாரமே தடைபட்டது. அதைப் பற்றி அவன் அக்கரை கொள்ளவில்லை. திருவள்ளுவரே அவனுக்கு எல்லாமா யிருந்தார். எனவே ஏலேல சிங்கனைத் தேடி அவன் வாடிக்கையான வியாபாரிகள் வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. அதனால் திருவள்ளுவர் புகழ் பல வழிகளிலும் பரவியது. ஆகவே மக்கள் ஓயாது அவர் தரிசனத்துக்கு வந்த வண்ணமாயிருந்தனர்.

227

வந்தவர்களுக்கெல்லாம் அவர்கள் மனநிலையை அனுசரித்து நல்லுரை வழங்கி அனுப்பினார் திருவள்ளுவர். அதன் பொருட்டு உச்சி வேளையில் பிச்சைக்குப் போவதையும் விட்டார். ஏலேலசிங்கன் அளிப்பதையே உண்டு வரலாயினர்.

இறுதி நாள் நெருங்க நெருங்க திருவள்ளுவர் கருவி கரணங்களடங்கி கண்மூடி மௌனமா யிருக்கவே விரும்பினார். அதனால் அவரைப் பார்க்க வந்தவர்களுக்கெல்லாம் பரிவும், இறுதி நாள் நெருங்கி வந்துக் கொண்டிருக்

கிறதே என்ற ஏக்கமும் கொண்டவர்களாய் சென்றனர்.

அந்தோ ! இறுதி நாள் ; வைகாசி திங்கள் விசாகமும் வந்துவிட்டது. அன்று எதிர்பாராத பெருங்கூட்டம் அவரைக் காண வந்த வண்ணமாயிருந்தது. அன்று பகல் மூன்று சாமம்வரை திருவள்ளுவர் மௌனமாகவே இருந்தார். நாலாம் சாம ஆரம்பத்தில்தான் கண் விழித்தார். ஏலேலசிங்கன் அவருக்கு உணவு படைத்தான். அதை அவர் உண்ணவில்லை. அங்கு இருந்தவர்களுக்கெல்லாம் பிரசாதமாக வழங்கினார்.

" ஐயனே! அமிர்த பானமாவது உட்கொள்ளுங்கள்" என்றவாறு கனிவகைகளுடன் காராம் பசுவின் பாலும் அவருக்கு அளித்தான். அவைகளை திருவள்ளுவர் உற்று நோக்கி சொல்லுகிறார் :—

"பாலைப் பருகி வாழ்நாளை வளர்த்து ; கனியை உண்டு பிணியைப் போக்கு" என்பது பெரியார்களின் அனுபவ வாக்கியமாகும். இவ்வுடலோ இன்னும் சில நாழிகைக்குள் காற்றகன்று கட்டைபோலாகப்போகிறது. ஆதலின் இப்பொழுது இவைகள் இவ்வுடலுக்கு அவசியமில்லை. இவைகளுக்குரியவர்கள் வெகுதூரத்திலிருந்து களைப்புடன் கடுகி வந்துக்கொண்டிருக்கிறார்கள். ஆதலின் இவைகள் அப்படியே யிருக்கட்டும்."



காந்தத்தை சார்ந்த இரும்பென சாந்த சொரூபியின் வார்த்தையில் ஏலேலசிங்கன் எதுவும் சொல்வதற்கோ ;

செய்வதற்கோ இயலாது இருந்துவிட்டான்.

விசாகத்தின் இறுதிநேரம் நெருங்கும் காலம் வந்தது. அறமொழி சில எல்லார்க்கும் பொதுவாய் திருவள்ளுவர் கூறினார். எதிர்நின்று சோகமே உருகொண்டு ஏங்கி நிற்கும் ஏலேலசிங்கனுக்கு இன்மொழி பல கூறி ஆறுதலடையும் வண்ணம் சொன்னார். சிறிது ஓய்வு கொண்டார்.

திடீரென சொல்லுகிறார்; "ஏலேலசிங்கம்; புத்த கயையிலிருந்து பௌத்த பிச்சுக்கள் வந்துக்கொண்டிருக்கின்றனர். தில்லையிலிருந்தும் திருவரங்கத்திலிருந்தும் அடியார்கள் சிலர் சமீபத்தில் வந்துக் கொண்டிருக்கிறார்கள். சீக்கிரம் சென்று அவர்களை எதிர்கொண்டு வரவேற்று உபசரித்து அழைத்து வா."

உடனே ஏலேலசிங்கன் பர்ணசாலையை விட்டு வெளி வந்தான். பயபக்தியுடன் பர்ணசாலையின் நான்கு பக்கமும் பார்த்தான். ஒருவரையும் காணோம். ஆழ்ந்த யோசனையுடன் பர்ணசாலையின் முன் வாயில் பக்கம் வந்து நின்றான். தன்னையே மறந்தான்.

கால் நாழிகைகூட கழிந்திருக்காது. "சொன்னது என்ன!" என்று தன்னை திருவள்ளுவர் கடிவதுபோல உணர்ந்து திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் அடியார்கள் வருவது தெரிந்தது. உடல் வியர்க்க விரைந்து சென்றான். அவர்களுடைய திருவேடங்களைக் கொண்டு தில்லையிலிருந்தும் திருவரங்கத்திலிருந்தும் வரும் அடியார்கள் என்பதை உணர்ந்தான். அவர்களை அடக்கமுடன் வணங்கி வரவேற்றான். உபசாரமுடன் அழைத்து வந்து திருவள்ளுவரிடம் விட்டான்.

வந்தவர்கள் திருவள்ளுவர்முன் விழுந்து வணங்கினர். பின் எழுந்து நின்று பெருமூச்சு வாங்கினர். அதுகண்ட

பாகம் பாலும் பழமும் பகிர்ந்து கொடுக்க எண்ணினர் என்றாலும் அவர் திருக்கரம் அவ்விதம் செய்யவில்லை. அங்கிருந்த அனைவருக்கும் விநியோகம் செய்யத் தொடங்கியது. பாலும் பழமும் இருந்த அளவே இருக்க எல்லார்க்கும் திருப்தி யுண்டாகும் வண்ணம் அளித்தார். அதுகண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டனர்.

அதை யுணர்ந்த திருவள்ளுவர் சொல்லுகிறார்: "இது சமஷ்டி சங்கல்பத்தால் நடக்குங் காரியமாகும். சத்துவ மனம் சமஷ்டியுடன் சம்பந்தம் கொள்ளும்போது இது போன்ற பல சம்பவங்களும் நடப்பது உண்டு. இதுதான் இதன் உண்மையும் ரகசியமுமாகும்."

தில்லை அடியார்களில் ஒருவர் சொல்லுகிறார் :—

"தில்லை நாயகன் எங்களை நடுநிசியில் எழுப்பிச் சொன்னார் : 'மயிலையில் என் மகத்துவம் வாய்ந்த குழந்தை திருவள்ளுவன் பூதஉடல் விட்டு புகழுடம்பை வைகாசி அனுசத்தில் அடையப் போகிறான். உடனே சென்று அவன் திருவடியை சேவியுங்கள். பல ஆயிரம் ஆண்டுக்கு ஒருமுறை பூக்கும் மலராகும் அது. பூவுலகில் அத்தகைய புனிதனைக் காண்பது அரிது. ஆதலின் சீக்கிரம் சென்று சேவித்து சிறப்படையுங்கள்." என்றவாறு மறைந்தார். உடனே நாங்கள் உற்சாகமுடன் பயணத்துக்கு ஆரம்பமானோம். தக்க காலத்தில் வந்து தரிசித்துப் பணியும் பாக்கியத்தையும் பெற்றோம்."

திருவரங்க அடியார்களில் ஒருவர் சொல்லுகிறார் :—

"அரங்கநாதன் எங்கள் அரைத் தூக்கத்தில் தோன்

றினன். தொழுது பணிவுடன் நின்ருேம். தூக்கத்தை நீத்து உடனே புறப்படுங்கள்; என் அன்பன் மயிலையில் மனிதவுடல் நீத்து வைகாசி அனுசத்தில் என்னடி வந்து சேரப் போகிருன். திடஞானி தரிசனம் கிடைப்பது அருமை. பெருமை வாய்ந்த என் குழந்தையான திரு வள்ளுவன் தொல்லுலகம் உள்ளவரை அழியா புகழுக்கு





ஆளாயிருக்கிருன். சீக்கிரம் சென்று அவன் சீரடி பணியுங்கள்" என்று கட்டளை யிட்டுவிட்டு கணத்தில் மறைந்தார்.

மறுநாளே நாங்கள் பயணமாஞேம். தகுந்த காலத்தில் வந்து தங்களை தரிசனம் செய்துக் கொண்டோம் அதனுல் பாக்கியம் பெற்றவர்களாஞேம்."

ஏலேலசிங்கன் பர்ணசாலையின் வெளியே பரபரப்பு ஏற்படுவதை உணர்ந்து வெளியே வந்தான். பௌத்த பிச்சுக்கள் பலர் வருவதைக் கண்டான். எதிர்சென்று வணங்கினுன்; வரவேற்று உபசரித்து வந்து திருவள்ளுவரிடம் விட்டான்.

புத்த பிச்சுக்கள் திருவள்ளுவர் தாளடி பணிந்து வணங்கினர். பாலும் பழமும் பிரசாதமாய் ஏற்றுண்டனர். பிறகு அப் பிச்சுக்களில் வயோதிகரான பிச்சு நா தடுமாற உடல் நடுங்க உரோமம் சிலிர்க்க உள்ளக் கிளர்ச்சியுடன் சொல்லுகிருர்:—

"நாங்கள் புத்த கயையிலிருக்கும் பிச்சுக்களாகும். சோதி வடிவான போதி மாதவன் எங்கள் பகற்கனவில் தோன்றினர். "பிச்சுக்களே! உடனே தெற்கு நோக்கி

மயிலையை நாடி பயணப்படுங்கள். என் வழி நின்று நீதி வழுவாது அறம் பொருள் இன்பங்களை உணர்த்தி; சிவகாருண்யத்தை வளர்த்து; சிந்தையை அடக்கி ஆசையை அழித்த ஆன்மா ஒன்று: உடலைவிட்டு நீங்குங் காலம் நெருங்கிவிட்டது. அவ்வான்மாவே நான்; நானே அவ்வான்மா; இரண்டும் ஒன்றே என்பதை இன்று நான் உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். தென்னுடு செய்த தவப்பயனுல் அவ்வான்மா பிறவியை அடைந்து செய்ய வேண்டியதை செய்துவிட்டு செல்லுகிறது. இனி அதைக் காண்பது அரிது. ஆதலின் சீக்கிரம் செல்லுங்கள்" என்று கூறினுர். "ஐயனே! அடியேங்கள் அவர் இருப்பிடத்தை அறிவது எப்படி?"



என்று வினவினேம். அதற்கவர் "சோதி சொருபம் ஆகாய வீதியில் உங்களுக்கு உற்ற துணையாக இருந்து வழிகாட்டிச் செல்லும்; அவர் பர்ணசாலையில்போய் இறங்கும்" என்றதும் மறைந்துவிட்டார். பிறகு நாங்கள் பயணமானேம்.

அவர் திருவாக்கின்படியே ஒளி எங்களுக்கு வழி காட்டி வந்தது; தங்கள் பர்ணசாலையில் இறங்கியது. சிரமமின்றி வந்து சேர்ந்தோம்; காலத்தில் வந்து திருவடியைப் பணியும் பாக்கியமும் பெற்றேம். பகவானே! சோதி வடிவான போதி நாதனே! பொன்னடி வாழி!"

ஏலேலசிங்கன் கைகூப்பி வணங்கிய வண்ணம்; "ஐயனே! உயிர் நீங்கியபின் உடலுக்குச் செய்யவேண்டிய சடங்கை சொல்லியருள வேண்டும்" என்று உத்தம மாணுக்கனுக்குரிய தன்மையில் கேட்டான்.

அதற்கு திருவள்ளுவர்; "அன்பனே! இவ்வுடல் பிறந்தபோது ஏதேனும் சடங்குடன் பிறந்ததா? அல்லது சடங்குதான் செய்யப்பட்டதா? இல்லை அல்லவா? எனவே இவ்வுடல் இறந்த பின்னும் இதற்குச் செய்ய வேண்டிய சடங்கொன்றுமில்லை. இருப்பவர்கள் தம் பிரியம்போல் எது வேண்டுமானாலும் செய்யலாம்; அல்லது செய்யாமலும் இருக்கலாம். அதனால் இவ்வுடலுக்கு நன்மையோ தீமையோ எதுவும் இல்லை. பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் இரையாக்கினாலும் சரி அல்லது மண்ணில் மறைத்தாலும் சரி; தீ இட்டு எரித்து அச்சாம்பலை கடலிலோ, காவேரியிலோ, கங்கையிலோ கொண்டு கரைத்தாலும் சரி; எல்லாம் ஒன்றுதான்." என்றார்.

வயோதி பக்தர் ஒருவர் எழுந்து வணக்கத்துடன்; "ஐயனே! எல்லாம் உணர்ந்த இறைவனே! பிறவி எப்போது நீங்கும்?" என்று கேட்டார்.

அதற்கு திருவள்ளுவர் சொல்லுகிறார்:

232

"ஆபாச (சீவ)னை தன்னையும்; அந்த ஆபாசனுக்கு ஆதாரமாகிய ஆன்மாவையும் ஒருவன் தெளிவாய் காண்பானாயின்; அவன் அந்த ஆபாச தன்மையை அறவே விட்டு ஆன்மாவே தானாய் விடுகிறான்; அதோடு எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரமான்மாவுக்கும் ஆன்மாவாகிய தனக்கும் பேதமின்மையை யுணர்கிறான். அப்படி உணர்ந்தவன் மீண்டும் பிறவி அடைவதில்லை. தொல்லை வினைவலியால் வந்த உடல் விழும் வரையில்: ஆடிவிட்ட பம்பரம்போல் அபிமானமின்றி வினைவழியே வாழ்வன். வினை நீங்கியதும் உடைபட்ட மட்குட நீர் கடல் நீரோடு

கலந்து பிரித்தறிய இயலாது பேதமின்றி ஏகமாய் கடல் நீரே ஆவதுபோல; உடல் நீங்கியதும் உணர்வு வடிவமான ஆன்மா பரமான்மாவோடு கலந்து பரிபூரணத் தன்மையை அடைகிறது".

வேறொரு வயோதிகர் எழுந்து; "ஐயனே! அறம் பொருள் இன்பங்களுக்கு முறை வகுத்த மெய்யனே! எல்லாரும் அனுசரிக்கக் கூடிய வகையில் முப்பாலின் சாரமும் தப்பாமல் கொண்டதாய் சுருக்கமாக ஒன்று சொல்லியருள வேண்டும்" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டார்.

"தன்னைப்போல் பிறரை எண்ணுங்கள். இதில் எல்லாம் அடங்கியிருக்கிறது என்று நான் உங்களுக்கு இறுதியாக உறுதிமொழி கூறுகிறேன்." என்று பதில் சொன்னார். அவ்வளவுதான்.

திருவள்ளுவரின் திருமேனி சிலிர்த்தது. சிறிது சாய்ந்த வண்ணம் அமர்ந்திருந்தவர் சரியாக நிமிர்ந்து சுகாசனத்தில் அமர்ந்துக் கொண்டார். எங்கும் ஒரே அமைதி நிலவியது.

சில வினாடிக்குள் உடல் வியர்க்க வாரம்பித்தது. அது கண்ட ஏலேலசிங்கன் அண்ணலின் இடது பக்கம் நின்று மெதுவாக விசிறலானான்.



பெருமூச்சு வந்தது; பார்வை உள் முகமானது; ஐம்புலன்கள் அடங்கின; அந்தக் கரணங்கள் ஒடுங்கின. நிலைக் கண்ணாடி இல்லாதபோது பிம்பம் இருந்தும் பிரதி பிம்பத்துக்கு வழியில்லாது போவதுபோல உடலின் கண் ஊசலாடிக் கொண்டிருந்த சிதாபாசன் (சித்து+

ஆபாசன்=சித்தின் சாயை) சீவன் மனம் அடங்கவே தன் இருப்புக்கே இடமில்லாததாகி விட்டது. இருதய கமலத்தில் இயங்கிக் கொண்டிருந்த பிராணனும் சிரணிக்கும் தொழிலை மேற்கொண்டு குதத்தைப்பற்றி நின்ற அபானனும் தன் நிலை நீங்கி ஏகமாய் சேர்ந்து மேல் கிளம்பி பிரமரந்தி (தலை உச்சித்துவா)ரத்தின் வழியாய் சீறி சென்றன.

தடையாயிருந்த திரை நீங்கிய பின் தீப ஒளி தானுகவே விளங்குவதுபோல; தனக்குத் தடையாயிருந் தவை யாவும் அழிந்தொழியவே உடலின் கண் ஒன்று பட்டிருந்த ஆன்மா ஒளிவடிவமாய்; சோதி சொரூபமாய் ஒருகணம் முகத்தில் ஒளிர்ந்தது; அக்கணமே அது விரிந்தது; பரமான்மாவுடன் பேதமற கலந்து ஒன்ருய் விட்டது.

அங்கே உள்ளவர் பார்வை எல்லாம் ஒருமுகமாய் திருவள்ளுவரையே நோக்கி நின்றன.

அண்ணலின் வதனத்தில் சோதி கிளம்பி விரிந்து மறைந்ததைக் கண்ட அனைவரும் உணர்ச்சி பரவசமாய் விட்டனர். சில கணம் கழித்தே அவர்கள் மனம சுய நிலைக்கு வந்தது.

பின்னரே அண்ணலின் திருமேனி அசைவற இருப் பதை உணர்ந்து அவர்கள் சொல்லொணு துயரத்து ளாழ்ந்தனர். இப்பொழுது ஏலேலசிங்கனுக்கு எதுவும் தோன்றவில்லை. உன்மத்தங் கொண்டவனுய் அவனும் அசைவற அண்ணலின் திருவுருவின் முன் அமர்ந்து விட்டான்.

ஏலேலசிங்கனுடைய நிர்வாகியே திருமேனி அடக்கத்துக்கு வேண்டியவைகளை எல்லாம் சேகரம் செய்தான். பிறகு ஏலேலசிங்கனைக் கொண்டு அண்ணலின் திருமேனிக்கு அபிசேகம் செய்வித்தான். பிறகு அம்மேனியை மலர் பந்தலின் அடியில் மலரணையில் வைத்து விட்டு அண்ணல் அமர்ந்திருந்த இடத்திலேயே சமாதி குழி தோண்டச் செய்தான்.

அதில் திருவெண்ணீற்றுடன் கற்பூரம் முதலான கந்தப் பொருள்களைக் கலந்து பகுதிவரை நிரப்பினான். அண்ணலின் திருமேனியை அங்கிருந்தவர்கள் எல்லாம் வணங்கிய பின் ஏலேலசிங்கன் இறுதி வணக்கம் செய்து சமாதிக் குழியில் அமரவைத்தான். மலரால் அர்ச்சனை செய்தான்.

"ஐயகோ! ஆண்டவனே! இன்றோடு நீண்டும் பாக்கியமற்று திக்கற்றவனானேனே!" என்று தேம்பித் தேம்பி அறியா குழந்தைபோல் அழுதான். மீண்டும் அக்கலவையைக் கையில் கொஞ்சம் ஏந்தியவண்ணம்; "அண்ணலின் திருமேனி தரிசனமும் இதோடு முடிந்ததா! முடிந்ததா!! முடிந்ததா!!! அந்தோ!" தன்னிலை இழந்தான்: விழுந்தான்; உணர்விழந்தான். எல்லார்க்கும் பயம் ஏற்பட்டு விட்டது. அவனுக்குத் தெளிவு ஏற்படவேண்டி செய்த முயற்சிகள் யாவும் வீணாயின.

சோகமே உருவு கொண்டு ஒவ்வொருவரும் நின்றனர்.

நாழிகைக்கு மேலானது; ஆழி சூழ் உலகில் இன்னும் கொஞ்ச காலம் ஏலேலசிங்கன் வாழவேண்டும் என்பது போல அவன் உடல் அசைந்தது.

ஆம்; அண்ணல் அவன் மனக்கண்ணுக்குக் காட்சி அளித்தார்; கட்டளையிட்டார் :—

"எழு! என் குழந்தாய்! என்ன காரியம் செய்தாய்? இன்னும் கொஞ்ச காலம் நீ உலகில் வாழ வேண்டும்.



இவ்விடம் தேடி வருபவர்களுக்கு நீ கொஞ்சகாலம் திருக்குறள் பாடம் சொல்லியாக வேண்டும். திருக்குறள் தடையின்றி திசை தோறும் பரவக்கூடிய நிலை ஏற்பட்ட பின் நீ என் பதம் வந்து சேருவாய்" என்று கூறியதும் மறைந்தார்.

உடனே உணர்ச்சி வேகத்துடன் எழுந்தான். அண்ணலின் சமாதியை கூப்பிய கைகளுடன் வலம் வந்து பணிந்து எழுந்து நின்றான்.

"அண்ணலின் தரிசனம் கிடைத்தது: அவர் ஆணையை நிறைவேற்றிய பின்தான் என் ஆவி உடலை விட்டு விலகும்" என்று எல்லார்க்கும் கேட்கும் வண்ணம் கூறினான்.

பிறகு பக்திப் பரவசமுடன் பாடினான்; அவனைத் தொடர்ந்து எல்லாரும் பின் பாடினர்.

தெய்வத்திரு மகன் தேடித்தந்த குறள்
உய்யவழி காட்டும்—மக்களை
உயர்த்தவழி காட்டும்.
ஆதிமுனிவர் அகத்தியர் மாணவர்
சோதிவடிவ மானார்—அன்னார்
ஓதிய நூலை ஓதியே நாளும்
நீதியுணர்ந் திடுவோம்—நியாயம்
அறிந்து நடந்திடுவோம்—வாழ்வில்
இன்பம் நுகர்ந்திடுவோம்—நீந்தி

துன்பம் தகர்த்திடு வோம்: (தெய்வ)

மறுநாளே ஏலேலசிங்கன் எல்லா வியாபாரங்களையும் தன் மகனிடம் ஒப்படைத்தான். பிறகு அண்ணல் சமாதியை அழகுடன் கட்டி முடித்தான். அதற்கருகே குளம் தோண்டினன். நந்தவனம் அமைத்தான் வந்த வர்கள் தங்க சத்திரமும் கட்டினன். உச்சி வேளையில் உணவளிக்க ஏற்பாடும் செய்தான்.

236

அதன் பின்னர் அண்ணல் சமாதியை அந்தி சந்தி ஆராதனை செய்த வண்ணம் தேடிவந்தவர்களுக்கு திருக் குறள் பாடம் சொல்லியபடியே பாக்கி நாளைப் போக்கி ஞன் உத்தம சீடஞன ஏலேலசிங்கன். அண்ணல் அடங்கிய ஏழாம் வைகாசி பனையில் இவனும் இறைவனடி சேர்ந்தான்: பிறவிப் பயனை அடைந்தான்.

---

வாழிய நீடூழி!—வாழ்ய நீடூழி!
அகத்தியர் தமிழும் வள்ளுவர் குறளும்
வாழிய நீடூழி!

(திருக்குறளின் வேறு பெயர்கள்)

---

பொதுமறை தமிழ்மறை பொய்யா மொழியாய்
வாயுறை வாழ்த்து உத்தர வேதம்
முப்பானூலாய் தெய்வ நூலுடன் திருவள்ளுவர்—
(வாழிய)

(திருவள்ளுவரின் வேறு பெயர்கள்)

---

நாயஞர் நான்முகஞர் நற்றவர் போற்றுந்தேவர்

மாதானுபங்கி முதற்பாவ லர்தெய்வப் புலவர்
செந்நாப் போதார் சைவ உலகோர்
எந்நாளும் போற்றும் பெருநாவலர்— (வாழிய)


49790

